S. A. P. L. Subramanian.

# NEELATCHI

## A TAMIL NOVEL.



# நீலாக்ஷி

அல்லது

# துன்மார்க்க முடிவு.


யாழ்ப்பாணம்

எஸ். கே. சுப்பிரமணியம்

அவர்களால்

இயற்றப்பெற்றது.







மதுரை,

அஷ்டலெக்ஷிமி விலாச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப் பெற்றது.

இதன் விலை ரூ. 1. 1923. தபால் சார்ஜ் உள்பட

Title page only Printed at the Shamsia Press, Madura.

S.S.PL. உ Subramanian Chittiar Al

# நீலாக்ஷி

அல்லது

# துன்மார்க்க முடிவு

எனும்

ஓர் இனிய தமிழ் நாவல்.




யாழ்ப்பாணம்

எஸ். கே. சுப்பிரமணியம் அவர்களால்

இயற்றப்பெற்றது.









மதுரை,

அஷ்டலக்ஷ்மி விலாசம் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1923.

இதன் விலை ரூ 1] [தபால் சார்ஜ் உள்பட.

# நீலாக்ஷி.

## அல்லது துன்மார்க்க முடிவு.

### முதல் அத்தியாயம்.

எம்மால் எழுதப்பட்ட "பாலசுந்தரம்" என்னும் கற்பனைக் கதையின் ஈற்றத்தியாயத்தில், "நீலாக்ஷி அல்லது துன்மார்க்கமுடிவு" என்று மகுடம் சூட்டி ஒரு நாவல் சீக்கிரத்தில் வெளியாக்குவோம் என்று காட்டியிருந்தோம். அதை அனுசரித்து இதை எழுதினோம். ஆனால் நீலாக்ஷியின் ஜீவிய சரித்திரத்தின் முற்பாகம் வாசகராகிய நீங்கள் "பாலசுந்தரம்" என்னும் நாவலில் வாசித்திருப்பீர்கள். ஆகையால் அவளின் பிற்ஜீவியமே இங்கே காட்ட நாம் கோருகின்றோம்.

இவளின் தற்காலரூபம் முன்னிருந்ததினும்பார்க்க மாறடைந்துவிட்டது. இவளை 1883-ம் வருஷத்தில் நாம் "லால்புரு" என்னுங் கப்பலில் பார்த்தபொழுது, இவள் உலகவாழ்வில் அமர்ந்து, இன்ப சுகங்களை அனுபவிக்கக் கூடிய பருவமடைந்து, சன்னியாசம் பூண்டோரையும், சிற்றின்பத்தை வெறுத்தோரையும், பழையபடி உலக மாயைக்குள்ளிழுத்து, மாயாவிலாச மோகவாரிதியில் தள்ளிப் பரிதவிப்புறச் செய்யும் வாலையாகிய 17 வயதாயிருந்தாள். ஆனால் அக்காலத்தில் இவள் 'தற்கால நாகரீகம்' என்னும் மேலைத் தேசவாசிகளால் கீழ்த்தேசத்துக்குக் கொண்டுவரப்பட்ட ஜெகஜாலப் புரட்டுருட்டிலும், சிற்றின்பமதுபான அலங்கார சிங்காரங்களிலும், கைதேர்ந்திருந்தவளல்லள். அக்காலை, இவளின் பதுமமலர்என்னும் ஹிருதயமானது காடு வஞ்சகம் சூது ஆகிய துர்க்குணங்களற்றதாய், மனுஷவர்க்கத்தின் இயல்பானசன்மார்க்கநெறி நிறைந்ததாயிருந்தது. ஆனால் இப்பொழுதோ பிரபஞ்சமாயையென்னும் வாரிதியில்தாழ்ந்து, மானி

டவாழ்வின் இன்பதுன்பம் என்னும் சண்டமாருதச் சுழலில் அகப்ப
ட்டு, பரபுருஷர் சம்போகம் என்னும் திரைகளால் மோதுண்டு,
குறைவற்ற சுகவாழ்வென்னும் கரையடைந்துகொள்ள இய
லாது பரிதவிப்பாளாயினள். அன்றியும், இவள் இப்போது ஏறக்கு
றைய ஐந்துவருஷங்களாய்ப் பரபுருஷ சகவாசங்கொண்டு, அவர்க
ளால் இவளின் வாலிப ரூபத்துக்காகப் போஷிக்கப்பட்டும், துதிக்கப்
பட்டும், அன்புபாராட்டப்பெற்றும் பழகியதால், அவ்வழியினின்றும்
விலகமுடியாமலும், அதைப்பற்றிக் கிஞ்சிற்றேனும்சிந்தியாமலும்,ஜீவி
யஞ்செய்கின்றாள்.இதுவாயிலாய் இவள் கேவலஸ்திதியுள்ள குடும்பத்
தில் உற்பவித்திருந்தாலும், இப்பொழுது அஷ்டைஸ்வர்ய நானு சம்
பத்துள்ள கௌரவ ராணிபோல் உடையணிந்து, இஷ்டான்ன போஜ
னம் அருந்தி, மன்மதனைப் போருக்கிழுக்கும் சுகந்தங்களையணிந்து,
பரிமளகந்தியாயிருக்கப் பழகிவிட்டாள். இவ்வித காரணங்களினால்
இவளின் ஹிருதயமானது முன்னிருந்ததிலும் மாறடைந்துவிட்டது
இன்னும்இவள்பின்னோடி, இவள்கட்டும்பட்டினும்,நெற்றியின் பொட்
டினும்,சிற்றிடையினும், பூரித்ததனத்தினும், மலர்விழியினும், மயிற்
சாயலினும், பூரணசந்திரவதன விம்போதயத்தினும், மனதைவிட்டு
நேசித்தும், பூசித்தும், வலோற்காரித்தும் தங்கள் தங்கள் காதலைத்
தணித்த வாலிபர் வாயிலாய்ப் பழகியதுர்க்குணங்களே இவளின்
ஹிருதயத்தில் குடிகொண்டுவிட்டன.ஐந்துவருஷங்களுக்கு முன் பர
மாத்மா உறைவிடமாகிய பரிசுத்தசிந்தை இப்போது மதன விகாரம்
நிறைந்துள்ள விகாரத்மாவானது.இவளின் ரூபமும் சற்றே மாறடை
ந்துவிட்டது.ஐந்துவருஷங்களுக்குமுன் நுண்ணிய இடையும்,கன்னி
காபசுமையும்,தேககாந்தியும், இன்னும் மோகாக்கினியை வீசச்செய்
யும் குமரிமட்டமும் இவளிடம் துலங்கிக்காட்டின. ஆனால் இப்பொழு
தோ,சற்றே ஸ்தூலசரீரமும் தேககாந்தியும் முகமினுக்கும், இன்னும்
கூரியவிழிகளும் கொண்டைலக்ஷணமும் உடை அலங்காரங்களும்
ஆடவரின் புந்தியைக்குழப்பின. அக்காலை யாதொரு விகடமின்றி
எவருடனும்பேசினசிந்தை,இப்போதுஒவ்வொரு நிமிஷமும் ஆழ்ந்த
யோஜனையோடுசெல்கின்றது. ஒவ்வொரு செய்கையும், ஒவ்வொரு
சொற்களும், ஒருகருத்துடையதாக இப்போது மாறடைந்து விட்
டது. அதற்கேற்றபடி லௌகீக நடனங்களில் கைதேர்ந்துவிட்டாள்.
இப்பொழுது இவளின் சிந்தை ஒன்றைப்பற்றியே தியானிக்கத் துவ

ங்கிவிட்டது. அஃதாவது, எதிர்ப்படும் வாலிபரையிழுக்கும் மோகவலை யைவீசி உள்ளதைப் பற்றிக்கொள்ளவேண்டுமென்பதுவே இவளின் விரதம். இதற்கே நோன்பு அனுஷ்டிக்கிருள்! இதற்கே இவள் யோகஞ் செய்கின்ருள்!

பண்டைக் காலம் தொடங்கி இந்தியர்கள் "மாடமாளிகை மேடை சதுரங்க சேனையுடனே வந்ததோர் வாழ்வுமோர் இந்திர ஜாலக்கோலம்" என்றுதங்களுக்குள்ள எல்லாவற்றையும் அதிதிகளு க்கு அர்ப்பணஞ்செய்ய எண்ணிஞல், இவள் பலவித சுகந்த பரிமள மணிந்து, விலையுயர்ந்த மாணிக்க வைடூர்ய மரகத கோமேதக ஆபர ணங்களிஞல் அலங்கரித்து, பிராஞ்சு, ஜெர்மனி, சீனு, பஞர்ஸ், காஷ் மீர், ஆதியாம் தேசங்களின் பட்டே அணிந்து, மலர் அணையில் கஷ்ட மில்லாது பொருள் தேடவேண்டுமென்ற யோகமே செய்கின்ருள். ஆகையால் இவளுக்கும் ஆடவர்களுக்கும் வெளியே புலப்படுத்தாத ஒருபந்தயமுண்டு. அஃதாவது, எங்களில் யார் தாங்கள்தாங்கள் கொ ண்ட கோரிக்கையை நிறைவேற்றுகிறது என்பதே!

இவள்சஞ்சரித்த மலாய்தேசத்தில்அநேகர் உத்தியோகவாயி லாயும் தொழில்வாயிலாயும் வாசஞ்செய்கிருர்களென்றும், அவர்களுள் சிலர் இவள்பின்ஞேடி இவளின் காதலால் வருந்திஞர்கள் என்றும் பாலசுந்தரத்தில் கூறிஞேம். ஆகையால் இனிக் காலதாமதம் செய் யாமல் கதைக்குட்புகுவோம். ஏனெனில், பின்வருகின்ற கதைக்குள் இவளின் மோக வலையிலகப்பட்டு ஈற்றில் பந்தயத்தை இழந்தவர் அநேகருண்டு.

1889-ம் வருடத்தில் சிதம்பரஞ்செட்டி இவளுக்கு விரோத மாய்த் "தன்னுடைய நகைகளை இரவலாக வாங்கிப் பின் ஏமாற்றி ஞள்" என்னும் குற்றத்திற்கு வாரண்டெடுத்து இவளைப் பிடித்த டைத்ததற்காக, கோலாலம்பூர்க் கோர்ட்டின் தீர்மானப்பிரகாரம்செட் டியிடமிருந்து, நூறு வெள்ளி மானநஷ்டம் பெற்ருள் என்று கண் டோம். இவள் கோர்ட்டில் நின்றபொழுது, பாலசுந்தரமே இவளை அவ்வழக்கினின்றும் குற்றமில்லாமல் விலக்கிஞர் என்றும் தெரிந் தோம். இவள் கோர்ட்டில் நின்றபொழுது, இவளின்கேசின் விஷய மாய்அநேகர் கோர்ட்டுக்கு வந்திருந்தார்கள். வந்தவர்களில் அநேகர்

இவளுக்குதவிசெய்து காப்பாற்றி, தங்களோடு அழைத்துச்செல்ல முழுமன முள்ளவர்களாயிருந்தார்களாகிலும்,பகிரங்கமாய் யாதொன்றும் செய்ய மனத்துணிவின்மையால் மௌனமாய் நின்றார்கள். இவர்களில் யாரேனும் முன்வந்து உதவிபுரிந்தால் இவர்களைத் தண்டிப்பார் யாருமில்லை. அப்படியிருந்தும் இவர்கள் மனதிற்கொண்ட "சோரசிந்தையே" இவர்களைத் தடுத்தது. கோர்ட்டுக்கு நீலாக்ஷியின் வழக்குப்பார்க்கும் நோக்கமாய் வந்தவர்களுள், டெல்லிக்கஞ்சன் போலீஸ்கோர்ட்டில் துவிபாஷகாயிருந்த இராசையாவுமொருவர். இவர் இவளின் நகைகளை, கிள்ளான் போலீஸ்வசம் ஒப்புவிக்கும்படி டெல்லிக்கஞ்சன்போலீஸ் இன்ஸ்பெக்டரால் கட்டளையிடப்பட்டு, கிள்ளானுக்கு வந்திருந்தார். ஆகையால் வழக்கு விசாரணையின் முடிவையும் பார்த்துத் திரும்பலாமென்று கோலாலம்பூருக்கு வந்தார். இவருக்குப்பக்கத்தில் நின்றவர் சானிட்டரி இன்ஸ்பெக்டர் உத்தியோகரான துரையப்பா. இவர்களுக்குச் சற்றே தூரத்தில் வ.உ. சிதம்பரம்செட்டியாரின் கணக்கப்பிள்ளை சுடலைமுத்தும், அவனுக்குச் சமீபத்தில் வேலுப்பிள்ளையிடம் பணம்திருடிக்கொண்டு ஓட்டம் பிடித்த துலுக்கனின் சகோதரன் அபுபக்கர் சாயபும் நின்றார்கள். இவர்கள் நின்ற பக்கத்திற்கு எதிர்ப்பக்கத்தில் தூணின் மறைவில் சுல்தான் தெருஸ்டேஷன் புக்கின் கிளார்க்ஆகிய ராசலிங்கமும்,இன்னும் கே.பி.ஆர். லெட்சுமணன்செட்டியாரின் பதிலாளாய் வந்திருந்த அண்ணாமலைசெட்டியாரும், இன்னும்சற்றேதூரத்தில் சுமார் ஐம்பத்தைந்து வயதுள்ள ஒருவயோதிக ஸ்திரீயும், அவளுடன் வாலிபரின் சிந்தையைக் குலைக்கக்கூடிய ஓர் இளங்கதலித்தண்டுபோல் பசுமை வாய்ந்த இளம்பெண்ணும் நின்றார்கள். வாலிபப்பெண் அழுதகண்ணீருடனும் வதங்கின முகத்துடனும் நின்றாள். உண்மையில் இலக்ஷணத்தில் நீலாக்ஷிக்கு ஒப்பான ரூபமுள்ளவளாயிருந்தாள். ஆனால் தாங்கமுடியாத கவலையோடு நின்றதனால் வாலிபர் அவளை இரண்டு மூன்று தடவை நோக்கினாலும் அவள் கவனியாததால் மனமடிந்து பின்நோக்காமல் விட்டுவிட்டார்கள். நின்றவர்களில் அநேகர் இவள் நீலாக்ஷியின் சகோதரியென்றே நினைத்திருந்தார்கள்.

நீலாக்ஷி கைதிகளின் கூட்டில் நின்று வைத்த சத்தம் ஒவ்வொரு ஹிருதயத்தையும் கசிந்து உருகச்செய்தது. ஆனால் டெல்லிக்

கஞ்சனிலிருந்துவந்த இராசையா மாத்திரம் புன்நகை செய்தார். இது பக்கத்தில் நின்ற துரையப்பாவுக்கு கோபமூட்டினது. கோபமானபார்வையுடன் இராசையாவைப்பார்த்து,

துரையப்பா—அந்தப் பெண்ணின் பரிதாபமான நிலையைப் பார்த்து சந்தோஷப்படுகிறீர் போலிருக்கு! யாராயிருந்தாலும் ஒரு அழகிய வாலிபப்பெண் கோர்ட்டில் கைதியாகவந்து நிற்பது பரிதாபப் படக் கூடிய காரியமல்லவா?

இராசையா—நீர் என் அவளுக்காகக் கண்ணீர் விடுகிறீர்? எப்போதாவது உமக்கு இன்பங்கொடுத்தாளா?

துரையப்பா—அவளைப்போல் ஒருபெண் இவ்வித நிலையில் நிற்பது யாருக்கும் மனவருத்தத்தை யுண்டாக்குகிறது என்பது ஒவ்வொரு முகத்திலும் தோன்றுகின்றது: அப்படியிருக்க நீர்மாத்திரம் புன்நகைசெய்வது நூதனம்!

இராசையா—நகைகளை இரவலாக வாங்கி ஏமாத்திவிட்டு பரிதவிப்பதில் சுகமென்ன? அப்படிப் பரிதவித்தால் நானும் உங்களைப்போல் கண்ணீர்விட, பைத்தியக்காரனோ?

துரை—அவள் ஏமாத்தினாள் என்பது உனக்கெப்படித் தெரியும்? நாங்கள் பைத்தியம் பிடித்தவர்கள் என்பது நீ எப்படி அறிவாய்?

இரா—தெரிந்துதான் சொல்லுகிறேன்.

துரை—நீ தெரிந்து கொண்டது முழுவதும் பொய்யென்று நான் சொல்லுகிறேன்.

இரா—நீ சொல்லுவது முழுதும் மடமைத்தனம் என்று நான் உனக்குப் போதிக்கிறேன்.

துரை—இங்கேநின்று சத்தம்வையாமல் சற்றே தூரத்தில் நின்று பேசுவோம். நான்கேள்விப்பட்ட அளவில் இந்தப்பெண்ணை செட்டி அநியாயமாய் வாரண்டிற் பிடித்தானென்றும், நகைகள் அவளுடைய தென்றுமே. அப்படியிருக்க நீ எனக்குப் போதனைசெய்கிறேன் என்கிறாய்: சற்றே இங்கேவா (என்றுகைச் சட்டையில்பிடித்து பிடியுடன் கோர்ட்டுக்குப் பின்னால் இழுத்துச்சென்றார்.)

இராசையாவுக்கு இவர் இழுத்தது மனப்புழுக்கத்தை உண்டாக்கிவிட்டதென்றாலும் கையைக் கட்டவோ அல்லது வரமாட்டேனென்று எதிர்க்கவோ துணிவு வரவில்லை. முதலாவது துரையப்பா சற்றே பலமான தேகக்கட்டுடையவர். அன்றியும், ஆங்காரமுடையவரென்பது அவருடைய துள்ளிய மீசையும் சிவந்தகண்களும் குறிப்பிட்டன.

இ—கையைவிடும். கேலிக்குப்பேசிக் கோபிக்கலாமா?(என்று கரைந்த முகசின் சவுண்ட பற்களைக்காட்டி வலாற்காரமாய் இளித்தார்.)

து—நான் பரிபூரணமாய் அறிந்த அளவில் நகைகள் யாவும் அந்தப்பெண்ணினுடையவை. செட்டி போக்கிரித்தனமாய் வாரன்டெடுத்து அவளின் நகைகளையும் வீட்டுச்சாமான்களையும் அப்பிக்கொள்ளும்படி இந்தப் பொய்க்கேசு வருவித்தவன். அப்படியிருக்க, நீ போதிப்பேனென்று சொல்லுகிறாய். உன்சந்ததியில் யாரேனும் போதித்தவர்களுண்டோ? அல்லது நற்போதனை பெற்றவர்கள் உண்டோ? நீ நல்ல வளப்புடன் வளர்ந்திருந்தால், அல்லது ஆமான ஆட்களோடு பழகியிருந்தால், அல்லது ஆமான கல்வி கற்றிருந்தால், இப்படியான வார்த்தை உன்வாயில் வராது. உன்தகப்பன் முப்பத்தைந்து வெள்ளிக்குத் தேம்பித் தேம்பியழுது உத்தியோகஞ்செய்ய, நீ சோற்றுக்கடைக்காரனுக்குங் காசுகொடுக்கஇயலாமல் படித்தவன். இப்போது துவிபாஷிகர் உத்தியோகம் பெற்றவுடன் யாவையும் மறந்துவிட்டாய் போலிருக்கு!

இ—என்ன மிஸ்டர் துரையப்பா! நான் தமாஷாய்ப் பேசினவையை நீர் ஆறமாய்ப்படுத்துக்கொண்டீர்! நான் சத்தியமாய் கேலிக்குச்சொன்னேன்.

து—நீ என்னத்துக்கென்றாலுஞ் சொல்லு. நான் உன் பேச்சைக் கவனிக்கிற ஆளல்ல. ஆனால் உனக்கு நன்றாய்த் தெரியாத ஒரு விஷயத்தை எனக்குப் போதிப்பேனென்று சொல்லுவது உன்னுடைய மடமைத்தனம். அதை ஒப்புக்கொள்ளுகிறாயா அல்லவா?

இ—சீலாவதி செட்டியிடம் நகைகளை இரவலாக வாங்கிக்கொண்டு "பத்துமலைக்குச் சென்று • நாலுநாள் வரையிலும் இரும்

பாதபடியால் நான் வாரண்டு எடுத்தேன்" என்று எனக்குச் செட்டி சொன்னான். செட்டியின் வார்த்தையை நம்பினதினால்சொன்னேன்.

து—நீ கேள்விப்பட்டதுமுழுதும் பொய்யென்று நான் உனக்குப் போதிக்கிறேன். அதை இப்போது நம்புகிறாயா இல்லையா?

இ—நீர் கேள்விப்பட்டது இதனிலும் உண்மையுள்ளதென்றால் நான் நம்பவேண்டும்.

து—சரி: இனி எவருடனும்பேசுகிறபொழுது சற்றே யோசித்துப் பேசு. தெரியுமா? (என்றுபிடியைவிட்டார்.)

இராசையா இஞ்சிதின்ற குரங்குபோல் அதில்தானே நின்றார். அப்பொழுது நீலாக்ஷியின் கேஸ் கூப்பிடப்பட்டது. இதுதான் தருணமென்று அவ்விடத்தைவிட்டு நகர்ந்தார்.

ஆனால் அந்தநேரம்தொடங்கி இவரின்மூளை சுழலத்தொடங்கியது. இயல்பில் சற்றே வெண்மையான முகமும் நாகரீகமான தோற்றமுமுள்ளவராயினும் முகம்வெளுத்து மனமடிவுற்றார். ஆகையால் கோர்ட்டில் நடந்ததொன்றும் இவர் மூளையில் பதியவில்லை. உயிர் இருந்தும் பிணமானார்; கண்களிருந்தும் குருடரானார்; செவிகளிருந்தும் செவிடரானார்; பலமிருந்தும் பெண்ணையன் என்றபேரை அங்கு நின்றவர்கள் கொடுத்துவிட்டார்கள். மனக்கவலையும் வெட்கமும் அதிகரிக்க, வழக்கைப் பார்க்கவந்தவர் அங்கு நடந்தவையொன்றும் புலப்படாமையால், தனக்கு அதிகவிருப்பமான மீ (கோதுமை இடியப்பம்) சாப்பிடும்படி ஒருகடையைநாடி யோடினார். இவரைமீக்கடையில்விட்டு நீலாக்ஷியின் பாடெப்படியென்று பார்ப்போம்.

நீலாக்ஷியைப்பிடித்து அடைத்ததற்காக செம்பாருஞ்செட்டி நூறுவெள்ளி கொடுக்கவேண்டுமென்ற தீர்ப்பு வாசிக்கப்பட்டவுடன் கோர்ட்டில்நின்றவர்களின்முகம் சந்தோஷக்குறிகாட்டின. நீலாக்ஷி வெளியில்வந்ததும் ஆழ்ந்த கவலையுடன் வதங்கிப்போய் நின்றபெண்ணும் வயோதிக ஸ்திரீயும் ஓடிவந்து அவளை அணைத்துமுத்தமிட்டார்கள். உண்மையில் அடங்காமகிழ்ச்சிகொண்டார்கள் என்றுகாணப்பட்டார்கள். இவர்கள் யாவர் என்பதையுஞ் சுருக்கிச் சொல்லிவிடுகின்றோம், ஏனெனில், நீலாக்ஷிக்கு நேர்ந்த கஷ்டங்கள்யாவும் இவர்

களால் என்றே சொல்லவேண்டும். வயோதிகப்பெண் என்றவள் சற்றே ஸ்தூலசரீரமும், நரைத்ததலையும், முன்னொருக்கால் நடனமயில் என்றுபேர்படைத்திருந்தாலும் இப்பொழுது கருமைபடைத்து, இயல்பான முகக்குளிர்ச்சியுமின்றித் தோற்றப்பட்டாள். இவள் காதில்ஒரு ஓலையும் கையில்காப்பும், கழுத்தில் ஒருதாலிக் கொடியுமிருந்தன. ஆகையால் தோற்றத்தளவில் இவள் மரியாதையானபெண் என்றே சொல்லவேண்டும். இவள்பெயர் துளசியம்மாள்.

இவளுடன் கூடநின்ற வாலிபஸ்திரீயோ பத்தரைமாற்றுத் தங்கமென்னலாம். பூரணசந்திர வதனபிம்பமும், மின்னற் கொடியிடையும், பின்னற் சடைமுடியும், கயலைப்பழித்த விழியும், கருவண்டைப்பழித்த குழலும், கூவிளங்கனியை நிகர்த்ததனமும், பதுமமலரையொத்த பாதங்களும்—உண்மையில் நீலாட்சியின் உடன்பிறப்பென்றே கொள்ளவேண்டும். ஆனால் வெளித்தோற்றத்தில் அப்படிக்காணப்படினும் உண்மையிலப்படி அல்ல; இவள்பெயர் ருக்குமணி. இவர்களுக்குள் சிநேகம் உண்டானதின் காரணத்தை நாம்வாசகர்களுக்குச் சொல்லவேண்டுவது அவசியம் என்று சொன்னோம். அதையும் சுருக்கிக் காட்டிவிடுகிறோம். நீலாக்ஷி கிள்ளானில் வ. உ. சிதம்பரம்செட்டியிடம் அமர்ந்திருந்தபொழுது வந்துமலைக்குத் தைப்பூசத்திருநாளுக்கு வந்திருந்தாள் என்றும், அப்பொழுது மூன்றுநான்கு நாட்களாய்க் கோலாலம்பூரில் நின்றுவிட்டாளென்றும், அதனால் செட்டி வாரண்டு எடுத்தானென்றும் கண்டோம்.

இவள் கோலாலம்பூரில் தங்கினகாரணம் யாதெனில், வந்து மலைக்குகைக்குள் சென்றபொழுது இவளுக்குச் சமீபமாக அநேகர் நின்றார்கள். அதிலும் வாலிபரே அநேகமாய் இவளைவிட்டுப் பிரியாமல் கூட்டத்தை அதிகப்படுத்தினார்கள். அப்பொழுது அவ்விடத்தை விட்டு அகன்று பெண்கள் நிற்குமிடத்தை நாடிவருகையில், ருக்குமணி கண்சுழல, கை கால் குளிர்கொள்ள, பிரக்ஞையற்றுக் கீழ்ப்புறம் விழுவதைக்கண்டாள். அச்சமயத்தில் தன்னுடையகையால் அவளைத்தாங்கினள்; நீலாக்ஷி இவ்விதம் காப்பாற்றுகையில் பக்கத்தில்

இருந்த கல்லின்மேல் மோதி, ருக்குமணியின் மூக்கையும் நெற்றியையும் சின்னாபின்னமாய் உடைத்திருக்குமென்பது அதில் நின்றவர்களுடைய தீர்மானம். உடனே தண்ணீர் தருவித்து நீலாக்ஷி ருக்குமணிக்கு முகங்கழுவி தன் சேலைத்தலைப்பால் விசிறினாள். இதற்கிடையில், அருகில் நின்ற துளசி "ஐயோ! நான் என்னசெய்வேன்! என் குழந்தைக் கென்னவாச்சு! ஐயோ! உடம்பெல்லாம் குளிருகிறதே! நான் என்னசெய்வேன்! (வாலிபகூட்டத்தைப் பார்த்து) சற்றே விலகி எட்டிப்போகக்கூடாதா? இங்கே யேன் கூட்டம்போடுகிறீர்கள்? இந்தக் குழந்தைக்குக் கொஞ்சம் காற்றுப்படவிடுங்களப்பா. இதில் நின்று மோசத்தை உண்டுபண்ணாமல் எட்டிப்போங்கப்பா. (ருக்குமணியைப்பார்த்து) என்னம்மாசெய்கிறது? உடம்பெல்லாம் குளிருகிறதே! ஐயோ! நான் என்செய்வேன்?" என்று அலற ஆரம்பித்தாள். நீலாக்ஷி ருக்குமணியைத் தன் மடியின்மேல் வைத்து விசிறினபடியே இருந்தாள். சொற்ப நேரத்தில் மயக்கமுற்றபெண் கண்விழித்துப்பார்த்து 'அது ஒன்றுமில்லையம்மா சும்மா தலைக்கிறுகிறுப்பு வந்தது' என்று சொல்லிக்கொண்டு எழுந்தாள். அப்பொழுது "தலைக் கிறுகிறுப்பின் காரணமென்ன?" என்று துளசியும் நீலாக்ஷியும் இன்னும்பக்கத்தில்நின்ற பெண்களும்கேட்டார்கள்.

ருக்குமணி—தாம்பூலமிட்டேன்; அதன்பின்தான் கிறுகிறுப்புஉண்டாச்சு: இப்போது சுகமாயிருக்கிறது. இந்த அக்கா பிடித்திராவிடின் நான் தடாலென்று கீழேவிழுந்து என்மூஞ்சி முகமெல்லாம் உடைந்திருக்குமம்மா! நீலாக்ஷியின் கையைப்பிடித்து இது யாருடைய கை அக்கா?

நீலாக்ஷி—நான் யாரென்று பின் அறிந்துகொள்ளலாம். இப்போ தலைக்கிறுகிறுப்பு சௌக்கியமாய் விட்டதா?

ருக்குமணி—ஆமா அக்கா! இப்போது சுகமாயிருக்கு. ஆனால் நீ என்னைத்தாங்கினது எனக்கு ஒரு கனவுகண்டதுபோலிருந்தது. நான் விழுகிறேனென்று நீ எப்படிக்கண்டாய்?

து—நான்காணாமற் போனேனே அம்மா! அந்தச் சுப்பிரமணியஸ்வாமிதான் இந்தப்பெண்ணைக் கொண்டுவந்துவிட்டது.

நீலாக்ஷி—நான் வருகிறபொழுது நீ கழுத்துச்சோரகன்சுழல தலைசாய்த்தாய். ஏதோ கிறுகிறுயிருல்தான் சோர்ந்து விழுகிறாய் என்று உடனே மட்டிட்டேன். அத்துடன் கையைக் கொடுத்துத் தாங்கினேன்.

துளசி—ஐயோ! என்னம்மணி! நீ இன்றைக்குக் காப்பாற்றி யிருக்காவிட்டால் என்குழந்தையை நான் இப்படிப்பார்க்க மாட்டேனே?

ருக்குமணி—என்மூஞ்சி கல்லில்தான் மோதுண்டிருக்கும் அக்கா! உன்னை இவ்விடத்துக்குக் கொண்டுவந்துவிட்டது, நான் கையெடுத்த அந்தச் சுப்பிரமணிய சுவாமிதான். வருகிற தைப்பூசத்துக்கு நிச்சயமாய் நான் பாற்குடமெடுப்பேன். என்னைக் காத்த சுப்பிரமணிய ஸ்வாமிக்குப் பால் அபிஷேகஞ்செய்வேன். இது இந்த அளவிலிருக்க. என்னைக்காத்து ரக்ஷித்த இந்தக் கை யாருடைய கை யென்று எனக்குத்தெரியவேணும்.

நீலாக்ஷி—நான் கிள்ளானில் இருக்கிறவள்: அநேகர் வந்து மலைக்கு வந்தார்கள். நானும்வந்தேன்: வந்தவிடத்தில் உங்கள் ஐக்கியத்தைக்கொள்ளச் சுவாமி அருள்கொடுத்தார். எனது ஜெனனதேசம் நாகப்பட்டணம்: பெயர் நீலாக்ஷி: இருக்க: நான் யாருக்கு உதவி செய்ய நேரிட்டதென்று அறியட்டும்.?

ருக்குமணி—எங்களின் பேர்ஊர் சொல்வது உன்னையழைத்துக்கொண்டுபோய் மூன்றுநாள் வைத்து நன்றிபாராட்டி அதன் மேல்—அம்மாடி! இங்கேநிற்க முடியவில்லையே! இந்த ஜனங்கள் என் கூட்டம் போடுகிறார்கள்! வெளியேறிவிடுவோமா?

துளசி—ஆமா அம்மா! இந்தக் காமாட்டிப்பயல்கள் சொன்னாலும் கேட்கிறார்களில்லை: இதில் நிற்கவோ முடியவில்லை: வெளியேறிவிடுகிறதுதான் நல்லதுபோலிருக்கு: எத்தனைதரம் சொன்னாலும் இங்கேதான் கூட்டம் (என்றுசற்றேகோபமாய்) அடா எருமைக்கடாக்களா, 'சத்தே எட்டுங்கடா: சத்தே நகருங்கடா: ஆமா—அப்படி. அப்படி நகருங்கடா. இந்தக் குட்டிகளிடத்தில் என்ன கொட்டியிருக்கு? இங்கையே கூட்டம் போடுகிறீர்கள்! இங்கே நிற்க முடிய

வில்லை! வெளியேறி விடுவோமம்மா: தாகமோ பொறுக்க முடிய வில்லை. நாவோ வறண்டுபோய்விட்டது. இந்தப்பசங்கள் என்னசொன்னாலும் இந்த இடத்தைவிட்டு நகரமாட்டார்கள்.

நீ—ஆமா அம்மா, வெளியேறி விடுவோம் (என்று இருவரும் வெளியே சென்றார்கள்.)

நீலாக்ஷி கிள்ளானிலிருந்து வந்தபொழுது சிலபக்ஷணாதிகள் கொண்டுவந்திருந்தாள். ஆகையால் தன் புது நண்பர்களையும் அழைத்துக்கொண்டு தன் குதிரைவண்டி நிறுத்தப்பட்டிருந்த இடத்தை நாடிச்சென்றாள். அதன்பின் தன்னுடைய சிற்றுண்டிகளில் பங்கு பற்றவேண்டுமென்று அவர்களை வேண்டினாள். அப்பொழுது,

ருக்குமணி—என்னுடன் வீட்டுக்குவந்து மூன்று நாளைக்கு இருப்பேனென்று உண்மையான வாக்குக்கொடுத்தால் நானும் அம்மாளும் சாப்பிடுவோம் (என்றாள்)

நீலாக்ஷி—மகாபாக்கியமென்று சந்தோஷமாய் வந்து இருப்பேன்: ஆனால் இப்பொழுது முடியாது. செட்டியாரிடம் சொல்லிவிட்டு வரவில்லை, ஆகையால் இப்போ என்னைக் கேட்கவேண்டாம். அம்மா (என்று அன்புடன்வேண்டினாள்.)

துளசி—செட்டியார் தைப்பூசம் முடிந்தவுடன் நீ வருவாயென்று காத்திருப்பாரா? இரண்டு மூன்று நாளைக்கு இருந்துபோகலாம் அம்மா. அப்படி அவசியமானால் ஒரு காகிதத்தையெழுதி இன்றைக்குச் சாயங்காலம் வண்டிக்குப்போட்டால் நாளைக்காலை செட்டியாரிடம் போய்விடும்.

ருக்குமணி—ஆம் அக்கா: இப்பொழுதே வீட்டுக்குத் திரும்பிவிடுவோம்: நான் பேனா மை காகிதம் யாவும் தருகிறேன்: நீ ஒருகாகிதம் எழுதிக்கொடு:உடனே தபாலில் போட்டுவிடச்செய்கிறேன்: இன்றைக்கு வண்டிக்குப்போய்விடும்.

நீலாக்ஷி—இதேது! நீங்கள் இரண்டு பேரும் என்னைமடக்கிக்கொண்டீர்கள். சரி: நீங்கள் சொல்லுகிறபடி ஆகட்டும். இப்போ தாகந்தீர இந்தப்பழத்தைச் சாப்பிடுங்க:—இதோ ஊறுகாய்கரைத்த மோர் இருக்கிறது: தயிர்சாதமும்கொண்டுவந்திருக்கிறேன்:

இதைச்சாப்பிடு: நல்லாயிருக்கும்: (என்று சாப்பாடுசெய்தார்கள்.) இவர்கள் வீட்டுக்குத் திரும்பினபொழுது நேரம் சுமார் 4-மணியென்னலாம். முன்பேசியபடி இவர்களின் வண்டி புதுரோட் 133ம் நீர் வீட்டின் முன்நின்றது. உடனே நீலாக்ஷியை அழைத்துக்கொண்டு ருக்குமணியும் ஜானகியும் வீட்டுக்குள் நுழைந்தார்கள்.

வீடு தற்கால நாகரீகமாய்த் திருத்தியது: முன் அறையில் (டிராயிங் ரூம் என்று அழைக்கப்படும் நடைசாலையில்) நடுவில் ஓர் வட்ட மேஜையிருக்க, அதற்குமேல் நூல்பின்னலினாலாய ஒருதுணிவிரிக்கப்பட்டிருந்தது: அதன்மேல் தங்கமயமாயிலங்கும்கலசமொன்றில், ஒரு பசுமையான பூச்செண்டு நின்றது. மேஜையைச்சுற்றி நெருக்கிடப்பட்ட கருங்காலியைநிகர்த்த ஆறுபென்றவுட்நாற்காலிகள் அதேவித நூல்பின்னலினாலாய துணியிடப்பட்டிருந்தன. சுவர்களில் நான்கு புறமும் பலவித படங்கள்தொங்கின. அதில்மோகினியஞ்சலாட காற்றிலலைவுறுதலைக்காட்டும் படமும், மகாலக்ஷ்மி தாமரைப்பூவில் நின்று ஓர்கையில் பதுமமலரைப் பிடித்திருப்பதைக் காட்டும் படமும், புரூரவன் ஆகாயமார்க்கமாகக் கிளம்பும் ஊர்வசிசேலையின்தலைப்பை ஒருகையால்பற்றி மற்றக்கையால்' 'என்னைவிட்டுப் பிரிவது தகுமா? இதுமுறையா? இது தருமந்தானா? "என்றுகேட்டுப் பரிதவிப்பதைக் காட்டும் படமும், கண்ணபிரான் பிரிந்து செல்லுவதில் மனமாற்றாதவளாய், கண்கொட்டியமட்டும் பார்த்துக்கொண்டிருக்கும் ராதாவின் நிலையைக்காட்டும் படமும், ஊனுக்கு படமுடியாது,—இனித் துயரம் படமுடியாது, மனோ விகாரம் படமுடியாது,—என்றுசொல்லிவிட்டு வரவேண்டும், என் அன்பான ஹம்ஸமே என்று, மெலிந்துவேண்டும், தமயந்தியின் பரிதாப நிலைமையைக் காட்டும் படமும், இன்னும் கோலாலம்பூரில்புகழ்படைத்த ஜெகதம்பாளும், அவருடன் ருக்குமணி 12வயதாயிருந்தபொழுது கூடநின்று எடுத்த மங்கைப்படமும்,—அண்ணாமலைசெட்டியார் இற்றைக்குச் சுமார் 7வருஷங்களுக்குமுன் 19வயதாய் இருந்தபொழுது எடுத்தபடமும், இப்பொழுது ருக்குமணியுடன்நின்று எடுத்தபடமும், இன்னும் ஆங்கிலமாது ஒரு காலைத்தூக்கி, "ஐரோப்பிய ஜாதியின் நாகரீக ஆட்டம் இது" என்று ஆடுவதைக்காட்டும்படமும்; இன்னும் கோலாலம்பூரில் உத்தியோகமாயிருக்கும் சில ஆடவர்களின் படமும் சுவர்களில் தொங்கின. தவிர

ஒருமணிக்கூடும் வாயலைப்பார்த்தபடி வைக்கப்பட்டிருந்தது. நிலத்தில் ஜப்பான் தேசத்தில் செய்யப்பட்ட புஷ்ப வர்ணங்களடங்கிய பாய்கள் விரிக்கப்பட்டிருந்தன. சுருக்கிச் சொல்லின் ருக்குமணி வீடு தற்கால ஐரோப்பிய லௌகிக நாகரீகத்துடன் இருந்தது என்று சொல்லிவிடலாம். இதை நீலாக்ஷியும் வீட்டுக்குள் நுழைந்தவுடன் மட்டிட்டுக்கொண்டாள். தான் கந்தையாவுடன் இருந்தகாலத்தில் எப்படி வீட்டை அலங்கரித்து வைத்திருந்தாளோ அப்படியேருக்குமணியும் வீடுவைத்திருக்கிறாள் என்று நினைத்து மனதுக்குள் தானாக சந்தோஷித்தாள். வீட்டுக்குள் நுழைந்தவுடன், ருக்குமணி வட்டமேஜையைச்சுற்றியிருந்த நாற்காலிகளில் ஒன்றை இழுத்து, நீலாக்ஷியை உட்காரவைத்தாள். அவளுக்கருகில் தானும் உட்கார்ந்தாள்.

அதன்பின்நீலாக்ஷியைப்பார்த்து இந்த வீட்டுக்கு நாங்கள் வந்து மூன்று மாதம் ஆய்விட்டது. அதற்குமுன் ஸெரண்டாவிலிருந்து வந்து வத்து லீமபிளாஸ் என்ற இடத்தில் ஏழுவருஷம் இருந்தோம்.

நீலா—செறண்டாதானா நீ பிறந்த இடம்?

ருக்குணி—ஆமா. அங்கேயிருந்து சுமார் 7 வருஷத்துக்குமுன் இங்கே வந்தோம். அப்பொழுது எனக்கு 12வயது.நான் அந்தவருஷத்தில் தீபாவளியன்றுகட்டியபாவாடையும் சட்டையும் போட்டுத்தான் அதிலிருக்கிற படம் எடுத்தேன். இப்போ எனக்கு வயது 19 மாசம் 7ம் ஆகிறது.

நீ—(புன்னகையுடன்)உனக்கு வேறு சகோதரங்களில்லையா?

ருக்கு—நான்மாத்திரம்தான்: நான்பிறந்தபின்னிரண்டாம்வருஷம்எனது அன்னையைக் கொடுத்துவிட்டேன் (என்றுகண் கலங்கினாள்)

நீலாக்ஷி—உன் தாய் இறந்துவிட்டாளா? துக்கமான காரியம். இந்தத் தொளசிபம்மாள் உன்னுடைய அன்னையல்லவா?

ரு—இந்த அம்மாள் என்னைப்பெற்ற அன்னையல்ல. இவள் என்தாயின் மூத்தசகோதரி. இவள் இங்கேதான் இருந்தவள். என்னுடைய தாயார் இறந்தபோது நாங்கள் தந்திசொன்னோம். அப்பொழுது செறண்டாவுக்குவந்தாள். சாவீட்டிலிருந்துஒருமாசத்தில் இங்கே வருகிறபொழுது என்னையும் அழைத்துக்கொண்டு வந்துவிட்டாள்.

அதன்பின் வத்தாலீமாபிள்ளையில்தானிருந்தோம். நான்வந்த வருஷம் பக்குவமானேன். என்னைக்கலியாணஞ்செய்துகொள்ளுகிறதற்கு அநேகர் விரும்பினார்கள். அம்மாளுக்கு அவர்களிடம் மனம் புகவில்லை. பக்குவமாகியும் இரண்டுவருஷம்வரையில் இருந்தேன். அதன்பின் எங்கள்வீட்டுக்குச்சமீபத்திலிருந்த அரங்கசாமித்தேவன் என்ற ஒருவன் எங்களுக்கு அதிக உபகாரம் செய்துவைக்கிறதுபோல் ஒருமாப்பிள்ளையை ஒழுங்குபண்ணி, கல்யாணம் செய்துவைக்கிறேன் என்று அம்மாளுக்குச்சொல்லி ஆயத்தம் நடந்தது. ஆனால் பந்தலில் தாலிகட்டுகிறபொழுது மாப்பிள்ளை மயங்கி விழுந்துவிட்டார். அப்பொழுது அரங்கசாமி தாலியை எடுத்துக்கொண்டு என்றுசொல்லுகிறபொழுது.

துளசி (அவ்விடம் வந்து) அம்மா! காபிசாப்பிடலாம். எழுந்திருங்க. இரண்டுபேரும் காபி சாப்பிட்டதின்மேல் கதைபேசி சந்தோஷிக்கலாம்—இப்பொழுது எழுந்திருங்க என்றாள்.

ரு—பீரோ சாவியை இங்கேகொடு. (என்று துளசியிடங் கேட்டாள்.) (நீலாக்ஷியைப்பார்த்து) எழும்பு அக்கா! காப்பிசாப்பிட்டதின்பின் பாக்கிசொல்லுகிறேன். (என்றுகையைப் பிடித்து நீலாட்சியை அழைத்துச்சென்றாள்.)

நீலாக்ஷியும் ருக்குமணியும் சிற்றுண்டியுடன் காப்பியருந்தினார்கள். சாப்பிட்ட அறையில் பொருந்திய வெண்கலச் சாமான்கள் ஐரோப்பிய தேசத்திலிருந்து கீழ்தேசத்தார் சம்பாதித்தபொருளைப் பறித்துக்கொள்ளும் நோக்கமாய் வந்திருக்கும் கோப்பை பீங்கான் கிளாஸ் ஆகிய சாமான்களும் காணப்பட்டன. இன்னும் வெண்கலக் குடம்,செம்பு,லோட்டாமுதலியனவும் நன்றாய் விளக்கப்பட்டுத் துலங்கின. காப்பியருந்தினதும் படுக்கையறைக்கு இருவரும் சென்றார்கள். அதுவும் தற்கால நாகரிகமாய் இரும்புக்கட்டில் இங்கிலீஷ் கிளாபர் இலவம்பஞ்சணை அதற்குச் சமீபமாய் ஒருமேஜை அதன்மேல் சிமினிவிடப்பட்டு கோப்பை குளோப்பிடப்பட்ட ஒருஜெர்மன்விளக்கு. மேஜைமுன் இருநாற்காலி. நிலத்தில் கம்பளம். சுவர்களில் அநேகமாய் நிர்வாண படங்களும் இன்னும் லௌகிக விநோதங்களைக்காட்டும் பற்பலஜாதி ஸ்திரீகள் தங்கள் காதலர்களோடு கூட ஆரம்பமாய் ஆலிங்கன முதலிய சாதாரம்பங்களைக்காட்டும்

படங்களும் தொங்கின. கட்டிலுக்கு நேரே ஒரு கண்ணாடி அல்மாரியும் இருந்தது. மேல்மாடிக்குச் சென்றவுடன்,

நீலா—ஒருகாகிதம்எழுதியனுப்பிவிடுகிறதுதான்நல்லது. பேனாவைக்கூடுகொண்டுஒருகாகிதமும் கொடுஎன ருக்குமணிகொடுத்தாள்.

நீலாக்ஷி, ஒருசிறு துண்டுக்காகிதத்தில் எழுதினாள். அதன்பின் அதைமடித்து காகித உறையில் அடைத்து வ. உ. சிதம்பரம் செட்டியார், கிள்ளான், என்றுவிலாசமிட்டு ருக்குமணியிடம் கொடுத்தாள். அவளும் அதையெடுத்து தன்னகத்துக்கடுத்த வீட்டிலிருந்த பதின்மூன்று வயதுள்ள நாராயணசாமியென்ற பையனிடம் கொடுத்து போஸ்டாபீஸில் போடும்படி அனுப்பினாள்.

இதன்பின் ருக்குமணி தன்கண்ணாடி அல்மாரியைத் திறந்து ஒருபச்சைவர்ணச் சேலையையெடுத்து வந்து நீலாக்ஷியின் காஷ்மீர் பட்டைக் களைந்து வைத்துவிட்டு தன்னுடைய சேலையைக் கட்டிக் கொள்ளும்படி நீலாக்ஷியை வேண்டினாள்.

நீலா—இதற்கிடையில் என்பேரில் அவ்வளவுபக்ஷம்வந்துவிட்டதா?

ருக்குமணி—உண்மையைச்சொல்லின் உன்னை ஆயுள் உள்ளளவும்மறவேன் அக்கா! நீ காப்பாற்றினதை ஒருக்காலும் மறவேன்.

நீலாக்ஷி—சரி இருக்கட்டும். இந்த உடையோடுதானிருக்கிறேன்.

ருக்குமணி—இல்லை; என்னுடைய சேலையை நீ கட்டினால்தான் சந்தோஷிப்பேன். இந்தப்பட்டு பழுதாப்போம் களைந்துவிடு.

நீ—சரி இங்கேகொடு. இதுநல்ல சேலை (என்று சொல்லி அதை அணிந்தாள்)

ருக்குமணி—போனவருஷம் அடுத்தவீட்டுக்காரி லோகாம்பாளும் நானும் ஆளுக்கு ஒவ்வொன்று எடுத்தோம்.

நீலாக்ஷி—நீ சொன்ன கதையின் மிச்சத்தைச் சொல்லிவிடு அரங்கசாமி தாலியையெடுத்து என்னசெய்தான்?

ருக்குமணி—அதை ஏன் பேசுவான்! அந்தக்காமாட்டிப் பயல் எண்ணின எண்ணத்தை. நான் எவ்விதமாய்த்தான் சொல்லுவேன்! அவனுக்கு வயது 50 இருக்கும். இரண்டு பெண்டாட்டி

பிள்ளைகள். அப்படியிருக்க பந்தலில் மாப்பிள்ளை மயங்கினவுடன் அவருக்கு தண்ணீர் முகத்தில் தெளித்தார்கள். விசிறி கொண்டு விசினார்கள். அரங்கசாமி தாலியைக் கையில் எடுத்துக் கொண்டு, 'நான் கட்டிவிடுகிறேன்' என்றான். அப்பொழுது அம்மாவும் இன்னும் சில பெண்களும் மயக்கம் தெளிந்தவுடன் மாப்பிள்ளை கட்டட்டும் என்று சொன்னார்கள். அதற்கு அரங்கசாமி "அதில் பாதகமில்லை என்று சொல்லிப் புரோகிதரிடம் கேட்க, அவரும் நல்ல நேரம் செல்லுமுன் தாலிகழுத்தில் ஏறிவிடவேணும்; ஆகையால், ஒரு முதியவர் செய்யலாம் என்றார். அப்படியே தாலிகட்டப்பட்டது. கொஞ்சநேரத்தில் "இன்னொருவர் தாலிகட்டிய பெண் எனக்குவேண்டாம்" என்று சொல்லிக்கொண்டு மாப்பிள்ளை வெளியே போய்விட்டார். இருந்தவர்கள் சமாதானம் சொல்லும்படி பின் ஓடினார்கள். மாப்பிள்ளை மறுத்துவிட்டார். அதன்பின் சொற்ப சொற்பமாய் கதைகள் வெளியாயின. மாப்பிள்ளைமயக்கமும் தாலிகட்டுகிறதும் மாப்பிள்ளை கோபமாய்ப் புறப்படுகிறதும் யாவும் அந்தக் கிழட்டுப்பயல் என்னையும் பெண்டாட்டியாக எடுத்துக்கொள்ளச் செய்த ஆழமானசெப்படி வித்தைகளென்றும் அறிந்தேன். அது மாத்திரமா? உண்மையில் "கோபித்த மாப்பிள்ளை போனால் போகட்டும். சபையில் தாலிகட்டினதற்காக நானுந்தல் ஏற்றுகொள்ளுவே" னென்று மூன்றாம் நாள் அரங்கசாமி சொல்ல, நான் இருக்கட்டும். இன்று தொடங்கி இங்கே வராதே.வந்தால் அவமானப்படுவாய் என்று உக்கிரத்துடன் சொன்னேன். அப்பொழுது அம்மாள் வந்து எனக்கு ஓர் அறை போட்டாள். (என)

நீலாக்ஷி—கவனமாய்ச் செவிசாய்த்து) இரு இரு கீழேயாரோ கதவைத்தட்டுகிறார்கள்.

ருக்கு—பார் அது? யாரோ அம்மாளைக் கூப்பிடுகிறார்கள்.

இவர்கள் இப்படியிருக்க, கீழ்வீட்டில் கட்டின ஐயர் என்று பார்ப்போம். அவர் ஒருபச்சைப்போர்வையிட்டு, காலில் ஒரு கூட்டம் சிலிப்பர்மாட்டி, இருண்ட நிறமுள்ள வஸ்திரந்தரித்து, துளசியுடன் அந்தரங்கமாய் அரைமணிநேரம் ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அதன் பின் திரும்பும்பொழுது "இதில் 15

வெள்ளி: இன்னும் 15 நாளைக்குத்தருவேன்: சம்மதந்தானே?(என்று கேட்டார்.)

து—சரியென்றால் அதைமட்டும் பார்ப்பேன். நாளைக்குவந்து தெரிவிக்கிறேன் (என்று அவரை அனுப்பினாள்)

அவரை அனுப்பிவிட்டு துளசி கதவைப்பூட்டிக் குசினிக் [illegible] ரிக்கு விசேஷ உணவு தயார்செய்துகொண்டி ருக்கிற பொழுது இரண்டொருமுறை கதவில் "டக் டக்" என்று தட்டின சத்தம் இவள் காதில்விழ, இவள் "யார்" என்று கேட்டுக் கொண்டு வந்து கதவைத்திறந்து பார்த்தாள்.

ஒரு சிவந்த போர்வையால் நன்றாய் போர்வையிட்டு கருமையான சாரங்கட்டி காலில் சிலிப்பர்மாட்டி சுமார் 5½ அடி உயரமுள்ள ஒருஆள் நின்றது.

து—(நன்றாய்ப்பார்த்து) எனக்கு இன்னார் என்று தெரியவில்லை.

வந்தவர்—நான் இப்போது வந்தவிஷயம் ஒன்றுண்டு (என்று தன் குரலினால் இன்னார் என்று தெரிவித்து மெதுவாய்ப்பேசித் திரும்பினார்.)

நீலாக்ஷியுடனும், ருக்மணியுடனும் துளசியும்சேர்ந்து வார்த்தையாடிக்கொண்டிருந்த பொழுது "நீலாட்சி அம்மா! நீ எங்களோடு ஒரு வாரத்துக்குத் தங்கவேண்டும். என் அம்மா! அப்படி எங்களோடு தங்குகிறாயா?

ருக்குமணி—அப்படி அக்கா நின்றால், நான் அளவிறந்த மகிழ்வடைவேன். ஒவ்வொருநாளும் அக்காளுக்குத் தலைசீவிச் சடையிட்டு பூச்சூட்டி விடுவேன். நீ ஒரு கிழமைக்கு நிற்கிறாயோ? பதில் சொல்லு.

நீ—அப்படியானால் செட்டியாருக் கென்ன சொல்வேன்?

து—வேறே யாரையும் செட்டியார் பார்க்கட்டுமே! நீ என்னோடுதானே இருந்து விட்டால்,என்னுடைய மகள்என்றேபாவித்துக்கொள்வேன்.

குந்து—உன்னுடன் இருந்தால் புருஷன் வேண்டாமோ? புரு ஷனை விட்டுவிடச் சொல்லுகிறாயா?

[illegible] சம்பாதித்து வைக்கமாட்டேனா?

ந—நீ சம்பாதிக்கும் வரையும்?

ந—இருக்கக் கூடாதா? ஒரு குழந்தை குட்டியில்லாமலிருக் கிறதா?

கு—அப்படியொரு குழந்தையை அக்கா பெற்று என்னிடம் கொடுத்தால் அதற்குப் பவுனுல் ஒரு அரைமூடி, சலங்கை, கழுத்தில் தங்கக்கொடியும்பதக்கமும், கையில் ஒரு ஜோடிகாப்பும் இவ்வளவும் நான் போட்டு லட்சணம் பார்ப்பேன். இதுநிஜம் அக்கா (என்று கை கொட்டினுள்.)

நா—நீலாட்சி! நிற்கிறேன் என்று சத்தியமாய்ச் சொல்லு இந்தா என்தலையைத் தொட்டுச் சொல்லு.நான் ஆனந்தமடைவேன் (என்று நகையுடன் குனிந்தாள்.)

கு—ஊறுகாயும் தயிர்சசாதமும் கொடுத்துக் காகசாந்தி செய் வித்ததற்கு இதுதான் பிறுபகாரம்!—ம்க்கீ—

நா—நல்லாய்த்தானிருக்கு! (என்றுசிரிப்புப் பொறுக்கமுடியாமல் நிலத்தில் விழுந்து நகைத்தாள்.)

நீ—ஏது! உங்கள்கையில் அகப்பட்டால் சும்மாவிடமாட்டார்கள் போலிருக்கே!

கு—அம்மாளிடம் ஆப்பிட்டால் ஊரெல்லாம் காட்டி வருவாள்; தன சிநேகிதர் வீடெல்லாம் வரும்படி அழைப்பாள். விருந்து கொடுப்பாள்; போகிற இடம் எல்லாம் மதனி எத்தனை? நாத்தனா எத்தனை? அத்தை எத்தனை?

நீலா—பாக்கியம் என்று எல்லாரையும் தேசித்துக் கொள்ளுகிறேன். இப்போதானே அழைத்துச் செல், நானும் வரு கிறேன்.

து—ஆமா: நீங்கள் இருபேரும் வாலைகள்: அப்படித்தான் பேசச்சொல்லும்: எப்படியென்றாலும் சுந்தரி வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய் அங்கே விருந்திடுவேன்.

நீ—சுந்தரி என்றது யார் அம்மா?

து—என்மகன்வீடு (என்று ருக்குமணியைப் பார்த்தாள்)

நீலாக்ஷி—உங்களுக்கு மக்கள் எத்தனை பேர் என்று இன்னும் நான் அறியவில்லை.

து—ஒரே யொருமகன் தான். இந்தப் பெண் என்னுடைய தங்கையின்மகள்—

நீ—உங்கமகனுக்கு என்னவேலை?

து—சர்க்காரில் இன்ஜினீர் வேலை: சம்பளம் 200 வெள்ளி—

நீ—மகா பாக்கியவதியாச்சே! இனியென்ன குறைவு?—

து—ஆகையால் உன்னை யழைத்துச் சென்று, என்னுடைய நெருங்கிய பந்துக்களோடு உன்னைச் சிநேகமாக்கி, என்குழந்தையைக் காத்த புண்ணியவதி இவள்தான் என்று நான் அவர்களுக்குக்காட்ட வேணும்: அதற்காகத் தான் ஒருவாரம் நிற்கும்படி கேட்டேன்: என் குழந்தையை நீ காப்பாற்றின நேரம் தொடங்கி, நீ என்னுடைய பெண்ணென்று நினைத்துவிட்டேன். ஆகையால்என்னுடையநெருங்கிய பந்துக்கள் வீடு எல்லாத்துக்கும் உன்னை யழைத்துப்போகவேண்டும் என்றும், அவர்கள் உன்னுடன் நேசங்கொள்ள வேண்டுமென்றும் தீர்மானித்து விட்டேன். ஆகையால்தான் ஒருகிழமை இங்கே நிற்கும்படி வேண்டினேன்.

நீ—நான் எப்படி ஒருகிழமை இங்கே நிற்கலாம்? இன்னொருமுறை வந்து நிற்கிறேன்: நாளைக்குச் சாயங்காலம் வண்டியில் போக உத்தரவு தரவேணும்.

ருக்கு—அக்கா! மெய்யா! பொய்யா! 3 நாளைக்கு நிற்கிறேன் என்று சொல்லிவிட்டு நாளைக்குப் போகிறேன் என்கிறாயே!

து—ஆமா. மூன்றுநாளைக்கு நிற்கிறேனென்றுவாக்குக்கொடுத்துவிட்டு இப்பொழுது நாளைக்குப்போகிறேன் என்றுசொல்லுகிறாய்! நல்லாத்தானிருக்கு!!!

கார்த்து சம்பாஷித்துக் கொண்டிருந்தாள். சுமார் 11 மணி அளவில் அவ்வீட்டினதிபன் வர, சுந்தரி எழுந்து தன் புருஷனிடஞ் சென்றாள். அதன் பின் துளசியும் சென்றாள். சொற்ப நேரத்தில் இருவரும் திரும்பினார்கள். சுந்தரியின் புருஷனுடைய ரூபலட்சணத்தையும் சுருக்கிச் சொல்லவேண்டியது அவசியமாகையால் அதையும் காட்டிவிடுகிறோம்.

சுமார் 22 வயதுள்ள வாலிபன், நடுவுச்சியெடுத்து, இருபக்கமும் நறுக்குண்ட கேசம் காற்றில் நெளிவுற்றசைய, முகத்தில் அடர்வாய்க் கருமைகொண்டு துள்ளியெழும்பிய மீசை சற்றே தைரியவானென்று குறிப்பிட, கூர்மையான விழிகள் தங்கள் பிரகாசத்தால் உள்ளேயிருக்கும் ஆன்மா சுத்தமானது, காடுவஞ்சகமற்றது என்று சாற்ற, அதன் மேலுள்ள புருவ வில்லுகள் உள்ளேயிருக்கும் மூளையின் விவேகத்தை வீச, அகன்று உயர்ந்த நெற்றி இராசயோகன் யாவராலும் போற்றப்படும் கண்ணியன் என்றுணர்த்த, தடித்த உதடு சற்றே சிற்றின்ப உல்லாசன் என்று தெரிவிக்க, வெண்மையான அழகிய பற்கள் சொற்பஅளவில் ஊண்சுவைப் பிரியன் இஷ்டான்ன போசனனென்று விளம்ப, நீண்ட கரங்கள் வெகுஜனாதிபதி ஆளுமைவலவுடையவனென்று காண்பிக்க, அகண்ட மார்பும், திரண்ட தோள்களும், சற்றே பருத்த கழுத்தும் இவன் மோகமங்கைபால் நேசிக்கப்படும் புருஷரில் சிறந்த ரிஷபஜாதி ஆடவனென்று நவிந்தன. வீட்டதிபன் வந்தவுடன் சாப்பாடுசெய்ய ஆரம்பித்தார்கள். அவர் சாப்பாடு செய்தபின் பெண்கள் மூவரும் ஆனந்தமாய் வார்த்தையுடனும் இடையிடை நகைகாட்டியும் சாப்பாடு செய்தார்கள். அதன்பின் பழையபடி மூவருமிருந்த அறைக்கே சென்று வார்த்தையாடிக் கொண்டிருக்கிறபொழுது சுந்தரி தன்னுடைய சகோதரர் மூவர் என்றும், மூத்தவர் சீவ்கிளார்க் உத்தியோகமாயிருக்கிறாரென்றும், அவரின் சம்பளம் 125 ரூ. என்றும், அவருக்கு இளையவர் ரயில்வேயில் டைம்கீப்பர் வேலையென்றும், அவர் கல்யாணஞ்செய்த பெண்ணை இழந்துவிட்டாரென்றும், மூன்றாவது தமையன் இப்பொழுது இன்ஜினீருக்குப் படிக்கிறானென்றும், தனது இளையசகோதரி இந்தியாவில் கணபதியாபிள்ளை வக்கீலின் பாரியென்றும் சொன்னாள். தான் கல்யாணஞ்

இந்தை யொருமுறை வார்த்தையாட வேண்டுமென்றும் இரகசியமா யேவ, நீலாக்ஷி பாலசுந்தரத்தையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றாள். பாலசுந்தரம் வருவதைக்கண்டு, அவர்முன் சென்று யாதேனுஞ் சொல்ல இயலாது, இரண்டுகண்களாலும் முத்துப்போல் கண்ணீர் சொரிந்தாள்.

பாலசுந்தரம் உண்மையில் இவளைவெறுத்துத் தள்ளினவரானாலும், கேவலநிலையில் இவள் நின்று கண்ணீர் விடுவதைச் சகிக்க இவ்வாறும் இயல்பை விருந்து கொண்டிற சொல்ல வேண்டும். எப்படி யென்றாலும், [illegible] வெளிப்படக் காட்டாமல், அவளைப்பார்த்து "நீலாக்ஷி! நீ இப்பரிதாபமான நிலைக்குவர நேரிட்டது உன் விதிவலியா? அல்லது உன்மதிகேடா? நீ யிப்போ வாலிபமா யிருப்பதால் உனக்கு பின்வருவதை நீ யோசியாமல் காலம் கழித்து வந்தாய் என்றே நான் சொல்லுவேன். இப்பொழுது உன்னிடம் இருக்கும் கைப்பொருள் உன் வாலிபமும் உன்னழகுமே யொழிய வேறென்ன? இவை இரண்டும் நாளடைவில் உன்னை விட்டு நீங்கிவிடும். ஆகையால் ஒருபுருஷனை யென்றாலும் கல்யாணஞ்செய்து உன் காலத்தைக் கழிக்க வழிதேடு. முன்னொருமுறை என்னால் அனுப்பப் பட்டவன் என்று உன்னிடம் வந்த ஆள் பெண் அல்ல: ஆகையால் புத்தியாய் நடந்துகொள்" என்றார்.

தலைகுனிந்து கண்ணீர் பெருக்கிக் கொண்டு நின்ற நீலாக்ஷி செட்டியிடம் பெற்ற 100 வெள்ளியையும் பாலசுந்தரத்தின் முன் வைத்து நமஸ்கரித்தாள். அதன்பின், "நீங்கள் செய்தபேருதவிக்காக இதையேற்றுக் கொள்ள வேண்டு"மென்று வேண்டினாள்.

பா—இதை நீயே வைத்துக்கொள்: நான் இன்று எனது ஜெனனதேசம் ஆறுமாதம் லீவ் எடுத்துச் செல்லுகின்றேன். பார்க்க வேண்டிய ஜோலிகள் அநேகமுண்டு. ஆகையால் போய்வருகிறேன்: ஜீவனுடன் இருந்தால் இன்னுமொருமுறை நான் உன்னைப் பார்க்கும் பொழுது நீ பொருந்திய வாழ்க்கையிலிருப்பாய் என்று நினைக்கிறேன்' என்று நடந்தார்)

இதன்பின் கோர்ட்டில் நின்றவர்கள் "பாலசுந்தரத்திற்கும் நீலாக்ஷிக்கும் இரகசியத்தில் சிநேக முண்டென்றும், சிலர் அவர்

உத்தமனாகையால் அச்சமின்றி பகிரங்கமாய் உபகாரஞ்செய்தாரென்றும், இன்னுஞ்சிலர் நீலாக்ஷியோடு சிநேகமாய் இருந்தபடியால் தான் “வில்லியை இவர் முன் வெறுத்தார் என்றும் தங்கள் மூளைக்கெட்டியபடி பேசினார்கள்.

ஆனால், அங்கு நின்றவர்களில் இருவர் மாத்திரம் யாதொன்றும் சொல்லாமல் தோற்றத்தளவில் நீலாக்ஷியின் விடுதலை நிமித்தம் சந்தோஷமடைந்து சென்றார்கள். இவர்கள் யாரென்றால் சானிடரி போர்ட் இன்ஸ்பெக்டரா யிருந்த துரையப்பாவும் கலுத்தான் ஸ்டேஷனில் புக்கிங்கிளார்க் வேலைபார்த்திருந்த இராசலிங்கமுமே. “பாலசுந்தரத்தை” வசித்தவர்களுக்கு இராசலிங்கத்தின் சந்தோஷத்துக்குக் காரணம் தெரியுமென்று நாம் அநுமானிக்கின்றோம். ஏனெனில், மூன்று நாலு மாசத்தால் வந்து உன்னுடன் இருக்கிறேன் என்று நீலாக்ஷி இவருக்கு வாக்குப் பண்ணியிருந்தாளென்பது அவர்களின் ஞாபகத்தி லிருந்தகன்றுவிடாது.

துளசியும் ருக்குமணியும் நீலாக்ஷியை அழைத்துக்கொண்டு ரிக்ஷா வண்டியிலேறி வீடு சென்றார்கள். ஆனால் இவர்கள் கேட்ட கேள்விக்கும் பதிலுரைத்தாளானாலும் பாலசுந்தரம் சொன்ன சொற்கள் இவள் மூளையில் பதிந்து குடிகொண்டன. உன்னிடத்திலுள்ளது வாலிபமும் அழகுமல்லாது வேறு என்ன? என்று இவள் காதில் அடிக்கடி கேட்டது. பாலசுந்தரம் யாசகனையானாலும் கலியாணஞ் செய்து உத்தம ஜீவியஞ்செய் என்று சொன்ன சொற்கள் இவள் செவிகளில் அடிக்கடி தொனித்தன. அப்பொழுது, “ஆம் உத்தமஜீவியம் செய்வேன்; ஆம்: இவ்வளவு காலமும் வீண்காலம் கழித்துவிட்டேன்; இனி ஏமாந்து விடமாட்டேன்; இன்று தொடங்கி என்காரியங்களை நானே பார்த்துக்கொள்ள வேண்டும்; உண்மையில் அப்படியே முடிந்தது; நல்லது இனி ஏமாந்து விடமாட்டேன்” என்று தனக்குள் ஆழ்ந்த சிந்தையோடு சென்றாள்.

ருக்குமணி—அக்கா போனவைகளைப் பற்றி யோசிப்பதில் இனி ஒரு சுகமுமில்லை. நடக்கவேண்டியவைகளைப்பற்றி யோசிக்கிறதல்லவோ நல்லது என்று ஆறுதல் சொல்லிக்கொண்டு வீடுசே

பித்தவுடன் நீலாக்ஷியை அன்போடு அழைத்து பன்மடங்கு பக்ஷங் காட்டினாள். துளசியும் (கண்ணீர்சொரிய) இவ்வளவு கஷ்டமெல்லாம் பட்டாய் என்று கேட்க என்னுள்ளம் முருகிவிட்டதடி அம்மா! நீ கோர்ட்டில் நின்று வைத்த சத்தம் நான் கட்டையில் போகும்வரையும் மறவேண்டி அம்மா! (என்று நீலாக்ஷியையணைத்து முத்தமிட்டாள்.)

ருக்குமணி—என் அக்கா அந்தச் செட்டி வாரண்டெடுத்தான். நீ அனுப்பின காகிதம் அவனுக்குக் கிடைக்கவில்லையா?

நீலாக்ஷி—காகிதம் கிடைத்ததோ அல்லவோ எனக்கும் தெரியாது; என்னுடைய எண்ணத்தில் வேணுமென்றே செய்தானென்று தோற்றுகிறது.

ருக்குமணி—நீ எங்களை விட்டுப் போனபின் கிள்ளானுக்குப் போகவில்லையோ அக்கா?

நீலா—உங்களுக்கு பயணஞ் சொல்லிவிட்டு ரயில் டேஷனுக்கு போனேனல்லவா? அப்பொழுது கிள்ளானி லிருந்து வந்த வண்டியில் என் வேலைக்காரன் கிருஷ்ணன் என்னைக் கண்டு ஓடிவந்தான்.

நான்—ஏன் வந்தாய்? செட்டியார் அனுப்பினாரா? என்றேன்.

அவன்—இல்லையம்மா அனேக விசேஷங்கள் நடந்து விட்டது என்றான்.

நான்—அப்படி யென்ன சம்பவித்தது? என்ன? விசேஷமோ? சீக்கிரஞ் சொல்லு என்றேன்.

அவன்—நேற்றுச் சுமார் 2 மணியளவில் செட்டிவந்து வீட்டுச் சாமான்களைச் சீல்பண்ணிவிட்டு போலீஸ் ஒருத்தனைக் காவலு மிருத்திவிட்டு போய்விட்டான்,)

நான்—என்ன சீல்பண்ணி விட்டானோ! (என்று கேட்டதோடு உண்மையில் கலங்கிவிட்டேன்.)

அவன்—இன்னும் சத்தே குணிபுங்க உங்களையும் பிடிக்க வாரண்டெடுத்துக்கொண்டு இந்த வண்டியில்தான் வந்திருக்கிறான். நீங்கள் இங்கே நிற்கிறதைக்கண்டு வாரண்டைக்கொண்டு போலீஸ்டேஷனுக்கு ஓடுகிறான் என்றான்.

நான்—அப்படியா! நல்லது: நீ போய் நான் கிள்ளானுக்கு போகிறேன் என்று செட்டிக்குச்சொல்லு: நான் இதோ அங்கேதான் போகிறேன் (என்று அவனை அனுப்பிவிட்டு ஸ்டேஷனில் புக்கிங்கிளார்க் வேலைசெய்த இராசலிங்கத்திடம் போய் எனக்கு மறைந்திருக்கிறதற்கு ஒரு இடம் கொடுக்க வேண்டுமென்று அவசியமாய்க் கேட்டேன். அவர் தன்னுடைய வீட்டுக்கு அனுப்பினார். அவர் வீட்டில் மூன்று நாள் இருந்தேன். மூ நாளும் என் உயிர் என்னிடம் இல்லை. உண்மையில் கலங்கி விட்டேன். என் மூளை குழம்பியது. செட்டி வாரண்டுடன் வந்து விடுவாரோ என்று கலங்கினேன். என் நெஞ்சம் பறை கொட்டினது. கால் கைகள் அசந்தன. பெலம் விட்டு நீங்கின: உண்மையில் சோர்ந்து விட்டேன். ஆவி பதைத்தேன் (என்று கண்ணீர் சொரிந்தாள்.)

ருக்குமணி—ஐயோ! இவ்வளவெல்லாம் பட்டாயா!

துளசி—சேர்வுவாரோ? என்னம்மா! இவ்வளவு பாடெல்லாமா! ஐயோ! என்னம்மணி (என்று கிரிட்டழுதாள்.)

நீலாக்ஷி—செட்டி கண்டுபிடித்துவிடுவா ரென்று பார்த்தேன், அதன்பின், இந்த ஊரைவிட்டு ஓடுவதுதான் நல்லது என்று எண்ணினேன்: டெலுக்கன்சனுக்கு போனால் எனக்குப் பழக்கமான வீடுகள் உண்டு: அங்கேதான் போவோமென்று தீர்மானித்தேன்: அதன்பின் ரெயிலில் போனால் யாருக்கும் தெரியுமென்று இராசலிங்கத்துடைய உதவியால் ஒரு குதிரை வண்டி பிடித்து இராவிராவாய் கோலக்கிள்ளானுக்குப் போனேன். அங்கே விருசிநம்பி யென்றொரு யாழ்ப்பாணத்தார் (ஓவர்சியரின்) வீட்டில் மூன்று நாள் தங்கினேன். அவர் சம்சாரமும் ஒரு அருமையான அம்மாள்—செல்வசரஸ்வதி: சிகப்பு நமை—பொட்டு. கெடுக இருக்கவேணும்—என்னை எவ்வளவோ அன்பாய் மூன்றுநாளும் வைத்திருந்து ரகசியமாய் கப்பலுக்குப் போக இருவரு மனுப்பினார்கள். போகிறபொழுது அந்த ஓவர்சியர் 100 வெள்ளி என் கையில்கொடுத்து கப்பலில் ஏற்றிவிட்டார். இன்னும் கப்பலில் உள்ள கிளார்க்குகளிடம் என்னைப் பத்திரமாய் டெலுக்கன்சனில் விட வேண்டுமென்று சொல்லியனுப்பினார்.

டெல்லிக்கஞ்சனுக்குப் போனவுடன் நன்றாய் முட்டாக்கிட்டு, என் முகத்தை யொருவரும் காணாதவிதம் மறைத்து, நான் இறங்கினேன். துறைமுகத்தில் அநேகர் நின்றார்கள். சிலரை நான் முன் கண்ட ஞாபகமும் எனக்கு உண்டானது. கரை சேர்ந்தவுடன், ஒரு பீக்கவாவிலேறி நான் அங்கே யிருந்தபொழுது சொற்பளவில் சிநேகமான ஜானகியம்மாளிடம் போனேன். ஜானகி சானிட்டரி போர்ட்டில் சப்ஓவர்ஸியராய் இருந்த முகுந்தசாமி ஐயர்க்குடைய தேவி. ஓவர்ஸியர்வீடு நான் முன்னிருந்த வீட்டிற்குச் சமீபம். கங்காதரயாவுடன் நான் இருந்தபொழுது எங்கள் வீட்டிற்கு ஓவர்ஸியர் அடிக்கடி வருகிறதுண்டு. அதனால் அவருடைய பாரி ஜானகியும் அடிக்கடி என்னிடம் வருவது வழக்கம். ஜானகி ஒரு நல்ல விஸ்வாஸி; ஓவர்ஸியருக்குக்கிடையாத ரத்தினம். நானும் அவளிடம் போகிறதும் ஸகஜம். இவருடன் சொற்பளவில் சிநேகமானதால், அங்கே சென்று ஒருவருக்கும் தெரியாம லிருக்க வசதிப்படுமென்று யூகித்தேன். நான் போனதும்,

ஜானகி—"என் கரும்பே! என் கண்ணே!—என் செல்வமே! அம்மா! நீலாக்ஷி-யோ! உன்னைக் காணக்கிடைத்ததே!!" என்று அன்புடன் எழுந்து ஓடிவந்து, அணைத்து முத்தமிட்டு, அழைத்துக்கொண்டு போய், அருமையாக மரியாதை செய்தாள். ஸ்நானபானம் முடிக்கும்படி வேண்டினாள். அதன்பின், என்னுடைய கஷ்டமான நிலைமை ஜாடையாகச் சொன்னேன். ஜானகியின் கண்ணிலிருந்து ஓடிய ஜலம் ஒருநதி யென்னலாம். அவள் அடிக்கடி "ஐயோ பாழும் தெய்வமே! இந்தக்கிளிக்கா இப்படித் தொந்தரவெல்லாம் நேரவிட்டாய்! இந்தப் பதுமைக்கா இவ்வளவு கஷ்டம்! இந்தக் குயிலுக்கா இவ்வளவு கலக்கம் வரவிட்டாய்! என்று பலவிதமாய்த் துக்கித்தாள். அதன்பின் என்னை அறைக்குள் தானே வைத்து நீ வெளியே வாராதே என்று ஆதரித்து வந்தாள். ஆனால் இவளின் புருஷன் சொற்பளவில் லாகிரி வகைகளில் விருப்பமுற்றவர். அதைப்பற்றி முன்னும் தெரியும். ஜானகியின் நகைகளை ஒவ்வொன்றாய்த் தொலைத்து விட்டார். ஆகையால் நான் கட்டிக் கொடுத்த பவுன்மாலையையும், அட்டிகையையும், கொலுசையும், பவுன் ஒட்டியாணத்தையும் அங்கே வைத்திருக்க அவளுக்கு விருப்பமில்லை, வாங்கிப் பெட்டிக்குள் வைத்

னால் ஒருசமயம் தொலைந்து போய்விடுமென்ற பயம் அவளுக்கு உண்டானது. அதை என்னிடஞ் சொன்னாள். நானும் யோசித்தேன். அதன்பின், டெல்லிக் கச்சேரியில் உத்யோகஸ்தராயிருந்த இராசையாவை நான் வந்து காணும்படி சொன்னேனென்று ரகசியமாய்த் தெரிவித்து வா என்று ஜானகியம்மாளின் வேலைக்காரனை அனுப்பினேன்.

நான் கங்கையாவுடன் இருந்தபொழுது இராசையா அடிக்கடி வீட்டுக்கு வந்திருக்கிறார். அன்றியும் அவருடைய வேலைக்காரன் ஓடிப்போக எங்களுடன் மூன்று மாதம் சாப்பாடு வைத்திருந்தார். ஆகையால் நான் அவருடன் நன்றாய்ப் பேசாவிட்டாலும் இடையிடை பேசினதுண்டு. அதனால் என் தற்கால நிலையில் தேவையானதைச் செய்வார் என்று நான் பூரணமாய்க் காத்திருக்கலாமென்று நம்பியிருந்தேன். இந்தத் துணிவினால் அச்சமில்லாமல் வந்துகாணும்படி அவருக்குத் தூது அனுப்பினேன்.

நான் சொல்லிவிட்ட பிரகாரம் அன்று சாயங்காலம் சுமார் 7 மணிக்கு இராசையா வந்தார். ஜானகி நாற்காலியில் உட்காரும்படி சொன்னாள். இவ்வளவு விஷயமும் ஓவர்ஸியருக்குத் தெரியாது. அவருக்கு நான் அங்கே இருக்கிறேனென்றும் அப்பொழுது தூங்குகிறேனென்றும் சொன்னேனென்று ஜானகி தெரிவித்தாள்.

இராசையா வந்தபின் கொஞ்ச நேரத்தில் தான் சமையல் செய்யப் போகிறேனென்று ஜானகி போய்விட்டாள். இராசையாவும் நானும்தான் அங்கிருந்தோம். அவள் சென்றவுடன் இராசையா என்னைப் பார்த்து புன்னகையுடன் "நீ அனுப்பின வேலைக்காரன் நீலாக்ஷியம்மா உங்களை வந்துகாணும்படி சொல்லிவிட்டு வரும்படி அனுப்பினாங்க' என்றான். எனக்கு நன்றாக விளங்கவில்லை. 'எந்த நீலாட்சி'(என்று கேட்டேன்) அவனால் விளங்கப்படுத்த முடியாமல் இருந்தது. இருந்தும் யார் என்று பார்ப்போம் என்றே வந்தேன். உன்னைக் கண்டதும் ஆனந்தம். இப்போ எங்கேயிருக்கிறாய்? இங்கே எப்பொழுது வந்தாய்?" என் வீட்டுக்கு வந்திருக்கலாமே(என்று சற்றே மோகத்துடன் என்னைப்பார்த்தார்.

நான்—நேற்றுக்காலை வந்தேன்: கடவுளின் உதவியினாலும், உங்களின் உதவியினாலும் சௌக்கியமாகவும் சௌக்கியமில்லாமலும் இருக்கிறேன் (என்றேன்)

இராசையா—"என்ன?—ஒருமாதிரி மனம் வாடியிருக்கிறாய்? கந்தையாவின் மரணத்தைக் கேட்டு நானும் துக்கப்பட்டேன். ஆனால் நீ அதன்பின் எங்கே யிருக்கிறாய் என்று இவ்வளவுக்கும் எனக்குத் தெரியாது. உண்மையில், நான் உன்னைக் காணவேணுமென்று பல முறைகளிலும் நினைத்தேனாகிலும் அது முடியுமென்று இந்த நிமிஷம் வரையில் நம்பி இருக்கவில்லை."

நான்—நானும் டெல்லிக்கெஞ்சனை விட்டுப் போனபின் இங்கே திரும்புவேனென்றும், எனக்குப்பழக்கமுள்ளவர்களை எப்போதாவது பார்ப்பேனென்றும், கனவிலும் நினைத்தவளல்லள். அப்படி யிருந்தும் இன்று உங்களைக் கண்டு சந்தோஷமானேன். இதுவும் நாகை நீலாக்ஷியின் கிருபைதான்.

இரா—இன்றுகாலையில் யாரேனும் உன்னை நான் காணுவேன் என்று வற்புறுத்தியிருந்தாலும் நான் அவரை யொரு பைத்தியம் பிடித்தவர் என்று தூற்றியிருப்பேன்.

நான்—நானுங்களைக் காணவேண்டுமென்று ஆசித்ததினாலும் இன்னும் உங்களிடம் ஒருபொருளை அடைக்கலமாக வைத்துத் தரும்படி உங்களிடம் ஒப்புவிக்கிறதற்காகவும் உங்களுக்குத் தூது அனுப்பினேன்.

இரா—அப்படி என்ன பொருள் என்னிடம் அடைக்கலமாக ஒப்புவிக்க வைத்திருக்கிறாய்? விலை உயர்ந்ததா? (என்றுநகைத்தார்.)

நான்—அவ்வளவு பெரியதொகையுள்ள தல்ல: ஆயினும் அது எனக்குப்பெரிதுதான் என்று(அறைக்குள் சென்றுகைமூட்டையை எடுத்து வந்து இராசையாமுன் வைத்தேன்.)

இரா—அப்படியென்னபொருள்? இது நீ இங்கே இருக்கிற பொழுது வைத்திருந்த பவுன்மாலை இத்துடன் அட்டிகையும் இருக்கே: கைக் கொலுசு வைரம் போலிருக்கு: அதுவும் நீ இங்கே வைத்திருந்தது தானே?

நான்—பவுன்மாலை இங்கேதான் 1200 வெள்ளிக்கு மிறைகுனிசுக் தாயிடம்வாங்கினேன். அட்டிகை 350க்குச்செய்தேன். கொலுசுஜோடு 300க்கு இந்தியாவிலிருந்து தருவித்தேன். இவைகளை இங்கே வைத்திருக்க எனக்குவிருப்பமில்லை. தவர்ணிப்பதைக்காண அநேககூலியாட்கள் வருகிறார்கள். கள்ளன் விடுபோல அறைக்குள்ளேயும் நுழைகிறார்கள். ஆகையால் நான் உங்களிடம் கொடுத்து வைத்தால் பத்திரமாய் இருக்குமென்று தீர்மானஞ் செய்தேன். இதன்றியும் இன்னுமொரு நன்றி: அதை நாளைக்குச் சொல்லுவேன். இதிருக்கதாம்பூலம் போடுங்க (என்று பாக்கைச் சீவல்செய்து எனது கை இராசையானகையில் படக்கூடியதாகக் கொடுத்தேன்.)

இரா—இன்றைக்குச் சொன்னாலென்ன? (என்று சற்றே மோகமான பார்வையுடன் நோக்கிக் கழுதைகளைத்தவிதமாய் நகைத்தார்.)

நான்—அது உங்களிடம் ரகசியமாய்ச் சொல்ல வேண்டும் (என்று நானும் நகைத்தேன்.)

அப்பொழுது என்னுடைய தலையின்மேல் ஒரு கௌளி "சுச்-சுச்-சுச்" என்று சொன்னது. நான் அச்சத்துடன் திடுக்கிட்டு நின்றேன்.

இராசை—அது சாப்பாட்டிதல்லவென்று சொல்லுகிறது. அப்படி ரகசியமானதை இப்பவும் சொல்லலாம்தானே? இங்கே வேறொருவருமில்லையே? என்றார்.

நான்—எப்படியென்றாலும் நீங்களும் நானும் தனியே யிருந்து பேசவேணும். நாளைக்கு வாங்க சொல்லுகிறேன்.

இரா—நான் இவைகள் யாவும் செய்துவைத்தால் எனக்கு என்ன கூலி கிடைக்கும்? (என்று விநோதகாரமாய்ப் பல்லைக்காட்டிச் சிரித்தார்.)

நான்—உங்களுக்கு என்ன சம்பளம் வேண்டுமோ அதுகிடைக்கும்.

இ—எனக்கு ரொம்ப சந்தோஷம்: நாளைக்கு நிச்சயமாய் வருவேன்: அப்பொழுது என்னுடைய சம்பளமும் கேட்பேன்; கொடுக்கிறாயா?

நான் "ஆகட்டு" மென்றுசொல்லி இராசையாவை அனுப்பிவைத்தேன். அடுத்த நாள் சுமார் 7மணியளவில் இராசையாவின் வரு

கையை எதிர் பார்த்திருந்தேன். 10மணி யடித்தஅளவில் ஓவர்சியர் (கிரமமாக பாட்டில்பிடிக்கிறவர் ஆகையால் 9 மணிக்கெல்லாம் தூங்கி விட்டார். நானும் ஜானகியும் மாத்திரம் கதை பேசிக்கொண்டிருந்தோம். இராசையா வந்தவுடன் ஜானகி மெதுவாய்ப் படுக்கை யறைக்குச் சென்றாள். இராசையா நாற்காலியிலும் நான் நிலத்திலும் இருந்து பேசும்பொழுது, நான் என்னுடையகஷ்டங்களைச் சொல்லி உங்களின் உதவியை எதிர் பார்க்கிறேன் என்றேன். அதைக்கேட்டு "நீ ஒன்றுக்கும் பயப்படாதே. நான் உனக்கு ஒரு தீங்கும் வராமல் பாது காப்பேன். இது சத்தியம்" என்று என் தலையில் கைவைத்து ஆணையிட்டார். "உனக்கு உயிர்த்துணையாயிருப்பேன் என்று நினைத்திரு; என் ஜீவனுள்ளளவிலும் உன்னை மறவேன்" என்று இன்னுமொருமுறை சத்தியஞ்செய்தார்.

நான்—ரொம்ப சந்தோஷம்: அதிகம் கடமைப் பட்டவளாயிருப்பேன்; (என்று ஸ்துதி சொல்லி) "நேரமாகிறது போய் வாருங்கள்"(என்றேன்.)

இரா—எனக்கு வேறொன்றுமில்லையா? (என்றார்.)

நான்—ஏனில்லை! எல்லாம் கிடைக்கும்(என்று சொல்லி யெழுந்தேன்.)

இரா—(என் கால்களைப் பிடித்து) எனக்கு இன்றைக்கு கொடுக்கிறோம் என்ற சம்பளத்தைக் கொடுக்காமல் போய்வாருங்கோ என்று எழுந்து போவது சரிதானா? உன்னை யென் ஜீவனுள்ளளவும் மறவேன் (என்று கெஞ்சினார்.)

நான்—நீங்கள் என் அவ்வளவு பாடு படுவான்? நீங்கள் நினைத்தபடி சம்பளம் கொடுப்பேன் என்றால் கொடுப்பேன் தானே. மூன்று நாள் செல்லவேண்டும். நான் இவ்வளவும் எட்ட இருந்ததின் நியாயம் தெரியாதா? விடுங்க! ஒரு பெண்ணின் காலைப்பிடிக்கிறதா?

இரா—அப்படியா நீ சொன்னது எனக்கு விளங்கவில்லை; இப்பொழுது ஒரு முத்தம் கொடு என்று சொன்ன சொற்களோடு என்னை முத்தமிட்டார்,

நான்—இன்றைக்கு என்னைத் தொடவேண்டாம் என்றாலும்—

இரா—நான் உங்களுடன் சாப்பாடு வைத்திருந்த நாள்முதல் உன்னுடைய ரூபம் என்மனதில் பதிந்திருந்தது. கந்தையா முரட்டுக் குணமுடையவராகையால் சில வேளை என்னுடைய விருப்பத்தை உனக்கு வெளியிட்டு நாமிருவரும் சிநேகித்ததை அவர் அறிந்தால் கொலை செய்ய அஞ்சமாட்டார். ஆகையால் நான் நாம் யாதொன்றும் உன்னுடன் பேசியிருக்கவில்லை.

நான்—நீங்கள் அப்படிப் பேசியிருந்தால் நான் அதை ஒருபொழுதும் கந்தையாவுக்குச் சொல்லியிருக்க மாட்டேன்.

இராசையா—நீ சொல்லி யிருக்கமாட்டாய். ஆனால் அவர் தற்செயலாய்க் கண்டுவிட்டால் அல்லது அறிந்துவிட்டால் அது நல்லாயிராது: மோசம் வந்துவிடும்: அப்படியல்லவா?

நான்—அப்படி மோசம் வந்திராது. ஆனாலும் இன்னும் நாலு நாள் தானேயிருக்கு.போய் வாருங்க (என்று முடித்தேன்.)

இந்த அளவில் இராசையா திரும்பினார். நான் நாலாம்நாள் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்துவிட்டு கூந்தலைத்தொங்கவிட்டுக்கொண்டு அறைக்குள் என் கஷ்டங்களை யோசித்துக் கொண்டிருந்தேன். என் தலையை வெயிலில் நின்று காயவைக்கவும் இயலாமல் அறைக்குள் மறைந்து நிற்கவும் வந்ததா! முன் கந்தையாவோடு நானிருந்தபொழுது டெல்லிக்கெஞ்சனிலுள்ள ஆடவர் ஜன்னல் வழியாய் என் முகத்தைபாருதல் பார்த்துத் திருப்தி யடையலாம் என்று காத்திருப்பது எனக்கும் தெரிந்த விஷயம். அப்பொழுது இவர்களா என்னைப் பார்க்கிறவர்கள் என்று என் மனதில் சிலவேளை நினைத்து மறைந்திருப்பேன். அக்காலத்தில் எட்டாத கொம்பிலிருக்கும் களா இதற்கேன் ஆசிப்பான் என்று எண்ணினவர்கள் இப்போ இது அழுகிவிட்டது, ஒன்றுக்கும் கூடாது: என்று வெறுக்கக் கூடிய சம்பவங்கள்நேர்ந்ததே! என்று வெட்க மடைந்தேன். அக்காலத்தில் குலஸ்திரியைப்போல் யார் கண்ணுக்கும் எதிர்ப்படாமல் நிலத்தில் விரிக்கப்பட்டிருந்த பாயின்மீதும் கம்பளங்களின் மீதும் வீட்டிலுள்ள கண்ணாடி அலமாரியிலிருந்து என்னுடைய ரூபம் பிரதி பிம்பித்து ஊர்வசி, திலோத்தமை—ரம்பா—மேனகாவோ என்று காட்ட, என்கூந்

தல் கருநாகப்பழம்போல் பின்னுக்குத்தொங்கி அசைய, பட்டுச் சேலையில்—புஸ்—என்ற சத்தமிட, கதவு வாயல்களின் பின்னல் துணிகள் என்னுடைய கைகளினால் விலக்குண்டு அசைய, பதுமமலரையொத்த பாதத்தை மெல்லென வைத்து நடந்த நானும் இப்பொழுது இரண்டறையுள்ள ஓவர்சியர் வீட்டில் வெளியாயிருக்கவும் முடியாமல் அறைக்குள் தான் ஒளித்திருக்கவும் வந்து விட்டதே என்று கலங்கினேன். அக்காலை ஜானகியம்மாள் காப்பி சாப்பிடு—பலகாரம் சாப்பிடு—அம்மா என்றுஎனக்குக்கொடுத்தவைகளை உண்மையில் சாப்பிட மனமொவ்வாமல் ஜானகியின்மனதைப்பழுதாக்கக்கூடாது என்று மாய்மாலமாய் சாட்டுக்குக் கொட்டிவிட்டு எழும்பின நான் இப்போ அவளுடைய சாதங்கறியே தஞ்சமென்றிருக்கவும் வந்து விட்டதே என்று நொந்தழுதேன்.

துளசியின் இரு கண்களிலிருந்து தாரை தாரையா யோடின கண்ணீரைத் தன் விரலினால் வழித்துத் தள்ளிவிட்டு, நீலாவதியினுடைய நாடியைத்தடவி ஐயோ! என் அம்மணி! என் செல்வமே! நீ இப்படியெல்லாம் பாடுபட்டாயா? கேட்க என்னுள்ளம் உருகுதடி! என் அங்கம் துடிக்குதடி! (என்று அழுதாள்.)

ருக்குமணி—கண்ணீர் ததும்ப இவ்வளவெல்லாம் பட்டாயோ! மூளையெல்லாம்கலங்கிவிட்டதே! என்னுள்ளம் உருகிவிட்டதடி அக்கா! நீ பட்டபாடெல்லாம் என்னால் வந்ததென்று நினைக்க வயிறு பற்றுகிறதடி அக்கா! (நீலாட்சி கதையைத்தொடர்ந்து பின்னும்)

நானிந்தவிதமாய் கவலைக்குள் அமிழ்ந்தி இருக்கிறபொழுது யாரோ ஒருவன் பெருஞ்சத்தமுடன் அழுதுகொண்டு ஓவர்ஸியர் இடம் முறையிடுவது காதில் விழுந்தது. அது யார் என்று அறியும் நோக்கமாய் கண்ணீரைத்துடைத்து மெல்லென எழுந்து மெதுவாய்ப் பார்த்தேன். அப்பொழுது ஓவர்ஸியரிடம் வேலை பார்க்கிற கங்காணிகளில் ஒருவன் தன் மனையாள் முதல்நாள் சாயங்காலம் தொடங்கி வீட்டிலில்லை யென்றும், முதல்நாள்தான் வேலையில் திரும்பிவிட்டுப்போனபொழுது அவள் சமையல் செய்து வைக்கவில்லை யென்றும், அதனால் அருகிலிருந்த ஈயக்குண்டுகள் யாவும் தேடினான் என்றும், இன்னும் இராமுழுதும் மூலை முடுக்கு பழக்கமான வீடுகள்

யாவரும் தேடியும் காணாததால் வர்த்தமானிக்கும் தாசானுக்கும் இவ்விருவர் இரண்டாங்கட்டைக்கும் ஆட்களை அனுப்பிவிட்டு எஜமானுக்குச் சொல்லி உத்தரவு பெற்று அவளைத் தேடிப்பிடிக்கப் புறப்படவேணுமென்றும் எஜமான் உத்தரவு செய்யவேண்டுமென்றும் கைகூப்பி நின்றான்.

ஜானகியும் நானும் அக்கம் பக்கமாய் நின்றோம். அவள் இரகசியமாய் "இவன் ஒரு கண்டல்; ஜாதியில் பறையன்; பேர் பக்கிரி; இருபது வெள்ளி சம்பளம்; முன்னொரு கல்யாணம் செய்து பெண்டாட்டியை இறந்துவிட்டான்; இப்பொழுது மூன்று மாசத்துக்கு முன் மற்றொரு கல்யாணஞ் செய்தவன் என்றாள்.

பக்கிரி—நானென்ன செய்வேன். அந்தப்பிள்ளையும் நானும் பட்டினியாய்த்தானிருக்கிறோம் (என்று கண்ணீர்விட்டான்.)

ஜானகி—நீ அவளை அடித்திருக்க வேணும்; ஆகையால் தான் அவள் ஓடிவிட்டாள்.

பக்—ஐயோ அம்மா! நானேன் அடிக்கிறேன்? செலவுக்குக் காசில்லையென்றாள்; 'கடன் வாங்கு; சம்பளமெடுத்துக் கொடுக்கலாம்' என்று சொல்லிவிட்டு நான் போகப்புறப்பட்டேன். 'கடன் எங்கே வாங்குகிறது? நானும் பேசாமல் இப்படிப் படுக்கிறேனை' என்று சொல்லிவிட்டுப் படுத்தாள. நானும் என்னசெய்வேனம்மா? நாலு குழந்தைகள். எஜமான் கொடுக்கிற சம்பளம் 20 வெள்ளிதானே? இதை யெடுத்துத் தானே நான் எல்லாச் செலவும் பார்க்கவேணும்? கடன் வாங்குவாள் என்று நினைத்துப் போய்விட்டேன். அதுக்கவே இல்லை.

ஜெ—அப்படியானால் அவள் எங்கும் போகமாட்டாள். அங்கேதான் நிற்பாள். பதறாதே.

பக்—சோளங்கன் அங்கே வருகிறவன் என்று எனக்கு ஒரு ஆள் இராத்திரிச் சொல்லிச்சு. இன்றுகாலமே நான் சோளங்கனிருக்கிற லயனுக்குப்போனேன். அங்கே அவள் இல்லை. சோளங்கன் படுத்துத்தூங்கினான்.

ஜானகி—பக்கிரியைப் பார்த்து 'நீ அடித்துத்தானிருக்கவேணும். அதனால்தான் ஒளிந்திருக்கிறாள் போலிருக்கு! வேறெங்கே

போவாள்? அப்படி வா கொஞ்சம் சாதம் போடுகிறேன்; சாப்பிட்ட தன்பின் போய் உன் பெண்டாட்டியைத் தேடு. உனக்கு அதிகப் பசி போலிருக்கே! வா இப்படிவா' (என்றாள்.)

பக்—நான் இப்போதான் காப்பிகுடித்தேன். அவளைத் தேடிப் பிடித்துத் தான் சாப்பிடுவேன், அம்மா! வேண்டாம் தாயே.

ஜா—கொஞ்சம் போடுகிறேன் சாப்பிட்டுவிட்டுப் போய்த் தேடி வாடா பசியோடிருக்காதே!

பக்—நானே இப்போ சாப்பிடவில்லை மன்னியுங்க.

ஓவர்—நீ கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு அதன்பின் போய்த் தேடிப்பார். மூன்று நாளைக்கு லீவ்கொடுக்கிறேன் (என்று அவனை அனுப்பினர்.)

நான் முன்போல் என் மறைவிடஞ் சேர்ந்தேன். அன்று ராத்திரி சுமார் 10மணியளவில் ஒருவர் பச்சைப்போர்வை முட்டாக்கிட்டு இருண்டசாய வேஷ்டிகட்டி கையில் ஒரு பிரம்புபிடித்து அங்கேவந்தார். ஓவர்சியர் நான் முன் சொன்னதுபோல் லாகிரி உபயோகஞ் செய்ததினால் 9 மணியளவில் தூங்கப் போய்விட்டார். ஜானகிக்கு மாத்திரம் இராசையா அங்கே வருவார் என்று தெரியும். ஆகையால் வந்தவர் இராசையாவாய்த்தானிருக்க வேண்டுமென்றெண்ணி அவளும் என்னைவிட்டு ரகசியமாய்ப் படுக்கை அறைக்குள் சென்றாள். இராசையா வந்தவுடன் நான் அறைக்குள் வரும்படி அழைத்தேன். ஆனால் அவர் தன்னுடைய வீட்டுக்கு அழைத்துப் போகும் எண்ணத்துடன் வந்தேனென்றார்.

நான்—இங்கேதானே இருந்து சம்பாஷிப்போம். இந்த இருட்டில் அங்கே என் போகவேணும்? (என்றேன்.)

அவர்—ஓவர்ஸியர் அறிந்தால் மோசம்: இங்கே நின்று பேசுவதும் எனக்கு மனதுக்குத் திருப்தியில்லை. என்னுடைய வீட்டுக்குப் போய்விடுவோம். —என்கண்ணு— மறுக்காமல் வா (என்றார்.)

நான்—சரி—அப்படி நிலை நின்றால் வருகிறேன் என்று நன்றாய் முட்டாக்கிட்டு அறையைப் பூட்டி சாவியை யெடுத்துக் கொண்டு அவருடன் புறப்பட்டேன். மஞ்சியாசிருட்டு நடக்க சந்திர வெளிச்

சமுமில்லை. ஒருவரை ஒருவர் பார்க்க முடியாத இருள். ரோட்டின் இருபுறமும் நின்ற நிழல் வாகைமரங்கள் இன்னும் இருளை அதிகப் படுத்தின. இராஜையா வீட்டுக்கும் ஒவர்சியர் வீட்டுக்கும் சுமார் அரை மைல் தூரமென்கலாம். வாகைவிருக்ஷங்களுக்குக் கீழ்போகும்போது "சடக்" என்றுஒர் சத்தம் கேட்டேன். அந்நேரத்தில் 'நில்லடா இங்கே' என்றுஒருவன் பக்கத்தில் சொல்ல நான் திடுக்கிட்டேன். நடந்துவந்த இராஜையா என்னை அந்தரத்தில் விட்டு ஓடிவிட்டார். எனக்கோ பயங்கரத்தினால் கால்கைகள் பதறின. என்ன செய்வேன்? ஓடினவனைத் தூரத்திக்கொண்டு பின்னால் ஒருவன் ஓடுறான். 5 நிமிஷம் சென்றது. எனக்கு எதிர் திசையிலிருந்து ஒரு ஆள் வருகிறதை அப்பொழுது திகழ்ந்த மின்னலின் ஒளியினால் கண்டேன். அந்த ஆள் என்கிட்ட வந்தவுடன் நீ என்னை விட்டு ஓடிவிட நினைச்சுட்டியோடி; அடியே ஓடிபோய்விடுவாய். அந்தப் பயலுக்கு ஏதோ உயிரை கடவுள் நெடுகபோட்டிருக்கிறார். அவன் ஓடாமல் இங்கே நின்றால் பயலைத் தின்னுடுவேன் தெரியுமா? என்றானும் அவன் தலையில் கட்டியிருந்த போர்வையைப் பிடுங்கி வாங்கிவிட்டேன். பக்கிரியையா விட்டுட்டு ஓடப்பார்த்தே?டீ இதோ பார்க்கிறயா? (என்று என்னைப்பிடிக்க வருகிற தருணத்தில்) மின்னலினால் நின்றுவிட்டான்.

நான்—பக்கிரி தண்டல் போலிருக்கே? உன்னுடைய பெண்டாட்டி இன்னும் அகப்படவில்லையா? என்றேன்.

அவன்—உடனே திடுக்கிட்டு நெருப்புப் பெட்டி வைத்திருந்தா னாகையால் அதை யெடுத்து ஒரு குச்சிதட்டி வெளிச்சத்தில் என்னைப் பார்த்தான்.

பக்—ஐயோ! அம்மா நீங்களா! உங்களை நான் என்யஜமானன் வீட்டில் பார்த்தேனே? மன்னியுங்க. கும்பிடுகிறேன். மன்னியுங்க கும்பிடுகிறேன். மன்னியுங்க என்று என் முன் விழுந்து நமஸ்கரித்தான்.

நான்— தண்டல் நீ யெழுந்திரு. உன்பெண்டாட்டி யென்று நினைத்தாய் என்பது தான் என் எண்ணம்.

பக்—அப்படித்தான் நினைச்சுட்டேன் தாயே.

நான்—இன்னும் நீ அவளைக்கண்டு பிடிக்கவில்லையா! சாப்பிடவு மில்லையாக்கும்.?

பக்—அவள் கிடக்கிறாள். நான் தெரியாமல் சொன்னதை மன்னிக்கவேண்டும் தாயே.

நான்—நீ உன்னுடைய காணாமல்போன பெண்டாட்டியென்று நினைத்துச் சொன்னாய். அதில் தோஷமில்லை.

பக்—ஐயோ அம்மா! உங்கள் முன் விழுந்து நமஸ்கரிக்கிறேன். இன்னைக்கு இராவண்டியில் என் பெண்டாட்டியும் சோளக்கனும் தாப்பாரோட்டுக்குப் போக எண்ணியிருக்கிறார்களென்று கேள்வி. அப்படியானால் இந்தவழியால் தான் வரவேணும். வேறே பாதை இல்லையாகையால் இந்த மரநிழலில் இருந்துகொண்டால் ஒருவருக்கும் தெரியாது எண்டு நினைச்சு இதிலிருந்தேன். நீங்க வருகிற போது மின்னலொளி வெளிச்சம் போட்டது. அப்போ என் பெண்டாட்டியும் சோளக்கனும்தான் வருகிறார்கள் என்று நினைத்தேன். கிட்டவந்தவுடன் சோளக்கனாரு பிடரியில் ஒரு போடு போட்டேன். மிச்சம் உங்களுக்குத் தெரிந்ததுதானே? என்னை மன்னிச்சுடுங்க. நமஸ்காரம் செய்கிறேன் என்றான்.

நான்—சரி அதிருக்கட்டும்; அதனால் தோஷமில்லை: இப்போ என்னை அழைத்துவந்து ஓவர்சியர் வீட்டில் விட்டுப்போ என்றேன்.

அவன்—அதிக சந்தோஷமாய், வருகிறேன் தாயே! என்மேல் கோபம் வச்சிருக்கக்கூடாது தாயே என்றான்.

நான்—எனக்கு யாதொரு கோபமுமில்லை. நீயதைப்பற்றிக்கவலைப்படவேண்டாம். இருக்க. நான் ஒரு கூலியை யழைத்துக்கொண்டு விஷப்பமாய் வந்தேன். ஓவர்சியருக்கு இவை யொன்றும் தெரியக் கூடாது.

பக்—மூச்சுவிடுவேனோ! அதைப்பற்றி நீங்க யோஜிக்கவேண்டாம். வாங்க என்று நடந்தான். ஓவர்சியர் வீடு சேர்ந்தவுடன் அவனை யனுப்பிவிட்டு நான் சத்தமின்றி என்னுடைய அறையைத்திறந்து நுழைந்து கதவைப்பூட்டி தூங்கலாம் என்று கண்ணை மூடினேன். தூக்கத்துக்குப் பதிலாய் அடக்கமுடியாத சிரிப்பு வந்ததே யன்றி தூக்கமே கிடையாது. இராமுழுதும் இராசையா என்னை விட்டோடி

ணதும் தனது போர்வையைக்கொடுத்ததும் கனவுமாச்சுது. பொழுதுதயமானது. ஸ்நானபானம் முடிந்தபின் ஜானகிக்கு யாவுஞ்சொன்னேன். அவள் சிரிப்பு அடக்கமுடியாமல் நெடுகச்சிரித்தாள். அதிகம் சிரித்ததினாலோ அல்லது வேறு நியாயங்கொண்டோ சிரித்துக்கொண்டு நின்ற ஜானகி கண் சொருக மூச்செடுக்கமுடியாமல் நிலத்தில் குப்புற விழுந்தாள். நான் உடல் பதற மனம் ஏங்க தூக்கி நிமிர்த்தினேன். அறிவில்லை! என்ன செய்வேன்! என் கால்கைகள் பதறின; மனம் கரைந்துருகின. வீட்டில் ஒவர்சியரும் இல்லை. இன்னொருவர் துணையுமில்லை. என்ன செய்வேன்? யாரைக்கூப்பிட்டழைப்பேன்? ஜானகியின் நிலையோ பயங்கரமாய் இருந்தது. நானுமோ ஒருவர் கண்ணிலும் எதிர்படாமல் வாரண்டுக்கு மறைந்து நிற்கின்றேன். ஒரு உயிரிலும் என் கஷ்டம் பெரியதா? யோசித்தேன். என்ன வந்தாலும் வரட்டும் என்று உடனே ரோட்டுக்கு ஓடிப்போய் ஒரு ரிக்ஷா வண்டியைக் கூப்பிட்டேன். கஷ்டத்துடன் ஜானகியைத் தூக்கி அந்த வண்டியில் போட்டேன். உண்மையில் அவள் ஏறக்குறைய என்னுடைய உயரப்பருமனுள்ளவளானாலும் அந்த நேரத்தில் நான் தூக்கிவிட்டேன். தூக்கினது எனக்கே அதிசயம். அதன்பின் அந்த வண்டியிலேதானே ஏறி உட்கார்ந்தேன். வண்டியிழுக்கும் சின்னை ஆஸ்பத்திரிக்கு விரைவாய்ப் போகும்படி கட்டளையிட்டேன்.

அவனும் வேகமாய் ஓடிப்போனான். வண்டியில் நான் இருக்கிற பொழுது ஜானகியை என்னுடைய நெஞ்சிலே சாத்திக்கொண்டு அணைத்தபடியே போனேன். ஆஸ்பத்திரிக்குச்சென்றவுடன், வண்டியிலே அவளைவிட்டு ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தேன். ஆஸ்பத்திரியில் டாக்டர் அப்பொழுது வீட்டுக்குச்சென்றிருக்கிறார் என்று காவல்காரன் தெரிவித்தான்.

நான்—வேறு யார் இருக்கிறது? என்று அவனிடம் வினவினேன்.

அவன் (மறுமொழி சொல்லும்போது என்னை கவனமாய் பார்த்து) அம்மா! நீங்கள் முன்னிங்கே கடலுக்குள் அமிழ்ந்திய கந்தையாவால் கொண்டுவரப்பட்ட அம்மாள் போலிருக்கே என்றான்,

நான்—இப்போ அதைப்பற்றிப் பேச நேரமில்லை. அதோ இருக்கிற பெண் சடுதியில் அறிவில்லாமல் நிலத்தில்விழ நான் தூக்கிக் கொண்டு ஓடிவந்தேன். டாக்டரைக் கூப்பிட்டுவா. சீக்கிரம் ஓடிப்போ ஜல்தி.

அவன்—டாக்டர் வீட்டுக்குப் போய்விட்டார். இப்போ கூப்பிட்டாலும் வரமாட்டார். தீனி தின்னும் நேரம். டிறெசர் வைத்திலிங்கம் அதோ வருகிறார். அவரைக் கூப்பிட்டு வருகிறேன்.

நான்—டிறெஸர் என்றால்தானென்ன? அழைத்துவா. அந்தப் பெண்ணுக்குஒருமருந்து கொடுத்து அறிவுறச்செய்யவேணும். ஜல்தி.

அவன்—(போகிறபொழுது) "என் பேர் பழனி அம்மா தெரியாதா மறந்து விட்டீர்களா"?

நான்—நீ அவரை அழைத்துவா. பின்பு பேசலாம் என்று அவனை அனுப்பினேன். ஒரு பத்து நிமிஷ நேரத்துக்குள் வைத்திலிங்கம் டிறெஸருடன் பழனிதிரும்பினான். அப்படி வருகிறபொழுது தானே புன்னகையுடன் காணக்கிடைத்ததே சந்தோஷம்; மருந்து கொடுத்து உயிரைக் காப்பாற்றினதற்காகவாவது எட்டியும் பார்க்கக்கூடாதா?

நான்—அந்த வண்டிக்குள்ளிருக்கிற பெண் அறிவில்லாமலிருக்கு. சற்றே அதில் வாருங்க.

டிறெஸர்—நீ பதறவேண்டாம். இங்கேயே கொண்டுவரும்படி சொல்லுகிறேன் (பழனியைப்பார்த்து) கருப்பனையும் நீலனையும் ஒரு படுக்கிற நாற்காலியில் அந்த வண்டிக்குள் ளிருக்கிற பெண்ணைத் தூக்கிவரும்படி சொல்லு. ஆயாளையும் தூக்கும்படி செய். விளங்கிறையா?

பழனி—ஆம் எஜமான் என்று போய்விட்டான்.

டிறெஸர்—இங்கே எப்பொ வந்தாய் நீலாக்ஷி (என்று மோகாக்கினி கண்ணைச்சிவப்பிக்க என்னை உற்றுப்பார்த்தார்.

நான்—தலைகுனிந்து கொண்டு "நாலு நாள் ஆயிற்று" என்றேன்

டி—இங்கே யாருடைய வீட்டில் இருக்கிறாய்? என் வீட்டில் தங்கக்கூடாதா? உதவி செய்தவர்களை மறந்துவிடுகிறதா? (என்று கண் வெட்டாமல் பார்த்துக்கொண்டு சொன்னார்)

நான்—(மௌனமாய்) நான் மறந்து விடவில்லை.

டி.—ஆகையால்தான் நீ என்னைப்பார்க்கமுடியாமல் போனது. இன்றைக்கு என் வீட்டுக்கு வரமுடியுமா?

நான்—ஓவர்ஸியர் வீட்டில் வந்து இறங்கியிருக்கிறேன். அந்தப்பெண் அவருடைய ஸம்ஸாரம். அவளுக்கு சௌக்கியமாகட்டும்.

டி.—பெரிய சந்தோஷம் (என்று சொற்களோடு அருகில் இங்கு மங்கும் பார்த்துவிட்டு ஓடிவந்து என்னையணைத்து ஒரு முத்தமிட்டார்.)

நான்—விடுங்க. யாரும் பார்த்தால் என்ன சொல்லுவாங்க? (என்று விலக்கினேன்.)

டி.—நான் பழனியிடம் கதை சொல்லி ஓவர்ஸியர் வீட்டுக்கு அனுப்பலையா?

நான்—அவன் வேண்டாம். நீங்களே ஜானகியைப் பார்ப்பது போல வாங்க.

டி.—இது நல்ல யோசனை. நீ அழகானவள் விவேகமுள்ளவளென்று எனக்கு முன்னுந்தெரியும்.

ஜானகியை நாற்காலியின் மேல் வைத்துத் தூக்கிக்கொண்டு வந்தார்கள். அவளுக்கு டிரெஸர் ஒரு சீசாவை திறந்து மூக்கில் பிடித்தார். கொஞ்சநேரத்தில் அறிவு வந்தது கண்ணை விழித்தாள். என்னைப்பார்த்து கொஞ்சநேரஞ் சென்றவுடனே தானே எழுந்து நின்றாள். நான் எப்படியிருக்கிறது என்று கேட்டேன். "ஒன்றும் வித்தியாசமில்லை. நான் இங்கே எப்படி வந்தேன்?" என்று பிரமித்தாள். டிரெஸர் எங்களைப் போய் வரும்படி உத்தரவு கொடுத்தார். அத்துடன், இந்த மருந்தைக் கொண்டு போங்களென்று ஒரு சீசாவில் மருந்தும்கொடுத்தார். இருவரும் திரும்பினோம். டிரெஸர் பார்வையால் எனக்கு முன் பேசியவைகளை ஞாபகப்படுத்தினார். நானும் ஆமென்று காண்பித்தேன். போகும்போது, டிரெஸருக்கு என்னைக்காட்டிக் கொடுக்கத்தான் ஜானகிக்கு மூச்சு அடங்கினதென்று நினைத்துக் கொண்டு சென்றேன்.

ஜா—சிரிப்பு அடக்கமுடியாமல் விழுந்தது எனக்குத் தெரியும். பின் ஒன்றும் தெரியாது. நீ ஓடிக்காட்டியதுதான் எனக்கு அடக்க

முடியாத சிரிப்பை உண்டாக்கினது. அது ஒரு புறமிருக்க, நீ எப்படி என்னைத் தூக்கி ரிக்ஷா வண்டியில் போட்டாய்? எல்லாருக்கும் தெரிந்துவிட்டதே? மூஞ்சியில் கொஞ்சம் தண்ணீரைத்தெளித்திருந்தால் நான் களைதெளிந்து எழுந்திருப்பேன்.

நான்—தண்ணீர் தெளிக்க மோசம் வந்துவிட்டால்!?

ஜா—உன்னுடைய சிரிப்பால் இன்றைக்குச் சமையல் இன்னும் முடியவில்லை. (என்று பின்னுஞ் சிரிக்க ஆரம்பித்தாள்.)

நான்—இரண்டுபேரும் அரை நொடியில் முடிக்கமாட்டோமா? கதையைச் சுருக்கச்சொல்லின் டிறெஸரையும் தாசிபாஷைகர் இராசையாவையும் இன்னும் ஜானகியையும் எனக்கு ஆபத்து வந்தால் துணைசெய்வார்கள் என்று நினைத்து சொற்பளவில் என் மனம்துணிவு கொண்டது.

---

## 3-வது அத்தியாயம்.

நான் டிறெஸர் வைத்திலிங்கத்தைக்கண்டு இரண்டு வாரஞ்சென்றது. வருகிறேன் என்ற டிறெஸர் இன்னும் வரவில்லை. வரும்படி சொல்லியனுப்புகிறது எனக்குக் கூச்சமாயிருக்கது. ஆகையால் நான் அடிக்கடி நினைத்தேனொழியக் காது அனுப்பவில்லை.

இந்த இரண்டு கிழமைக்குள் 5 முறை ஜானகியின் வேலைக்காரனிடம் கதை சொல்லி இராசையாவுக்குத் தூது அனுப்பிவிட்டேன். இராசையா வருகிறேனென்று சொல்லியனுப்பினாரேயொழிய வந்தவரல்ல. என்னை அந்தரத்தில் விட்டு ஓடினதால் நேரில் பார்க்க நாணமுற்று இருக்கிறார் என்றுணர்ந்து "அதைப்பற்றி யோசியாமல் அவசியம் வரும்படி சொல்"லென்று நான் சொல்லியனுப்பினேன். அதற்கும் வரவில்லை. இவர் வராமலிருந்ததனால் என் மனம் முன்னிலும் திடுக்கிடத் தொடங்கினது. இவரிடம் நகைகளைக் கொடுத்திருப்பதை உணர்ந்து என்னைக் காண வெட்கப்படுகிறவர் நகைகள் வேணுமென்றால் எப்படிக் காணக்கூடியதாய் வருவார் என்று பலமுறைகளிலும் நினைத்தேன். இந்த விதமான ஆள்வசம் நகைகளை விட்டிருப்பது

புத்தியல்லவென்று எனக்கு இடைக்கிடை மனதிலுதித்தது. என்ன செய்வேன்! வெளியில் போகவும் பயங்கரம் விடுகிறதில்லை. வீட்டிலிருந்தால் மனம் துடிக்கிறது. எத்தனை கலக்கத்தை நான் பொறுப்பேன்? இந்தவிதமாய் இரண்டு வாரஞ்சென்றது. நேரம் சுமார் சாயங்காலம் ஐந்து மணியென்னலாம். நான் துக்கத்துடனிருப்பதை ஜானகி கண்டு, என்னிடம் வந்து, கையைப் பிடித்து இழுத்து, "என் துக்கப்பட்டு உடம்பைப் பழுதாக்குகிறாய்? யாவும் அந்தப்பிரமன்நாராயணமூர்த்தி துன்பமொன்றும் வராமல் பாதுகாப்பார். இனித் துப்பாசியிடம் நகைகளை விடுவது மடத்தனம். ஏமாந்து போகமார்க்கமாய்முடியும். நான் தலை சீவி நன்றாய் ஜோடித்து விடுகிறேன். ஒரு ரிக்ஷாவிலேறி, நன்றாய் மூடிக்கட்டிக்கொண்டு, துப்பாசியிடம் போய் நகைகளை வாங்கிக்கொண்டுவா. இங்கே ஒரு செட்டி வீட்டில் கொடுத்துப் பத்திரமாய் வைத்துத்தரும்படி சொல்லிக்கொடுக்கிறேன்" என்றாள். நானும் நன்றாய் யோசித்து அதுதான் நல்லது என்று இணங்கினேன். புதுப்பெண்ணுக்கு ஜோடிப்பது போல், தலைசீவி புஷ்பத்தால் சிங்காரித்து, முகத்துக்குச் சுகந்தப்பவுடர் இட்டு, நெற்றிக்குக் கருந்திலகமிட்டு, என்னைப்பார்த்து "கண் திருஷ்டி இல்லாமலிருக்கவேணும்; உண்மையில் புதுப்பெண் போல்தானிருக்கு. துப்பாசி சொக்கிப் போவார்" இப்படிச்சொல்லி நகைத்துக்கொண்டிருக்கும்போது யாரோ ஒருவரின் சத்தம் கேட்டது. வெண்மையான ஐரோப்பிய உடையுடன் ஒருவர் நிற்பதைக்கண்டோம். ஜானகி எழுந்து பார்த்துவிட்டு, "ஐயாவோ! வாங்க! ஏது? எட்டியும் பார்க்கவில்லை? வருகிறேன் என்று சொன்னீர்களே! என்று நாற்காலியில் உட்காரும்படி சொன்னாள். இவர் [illegible] நான் எதிர்பார்த்த வயித்திலிங்கம்.

வை.—இங்கே வருகிறதற்கு எண்ணிக்கொண்டிருக்கும்பொழுது அவசியமாகத் தாப்பாவுக்குப் போக நேரிட்டது. ஆகையால்தான் வரவில்லை. எங்கே சிநேகிதியைக் காணவில்லை? (என்று என்னைச் சுட்டிக் கேட்டார்.)

நான்—இதோ வருகிறேன். யாரோவென்று நினைத்து இங்கேயே நின்று உங்கள் சம்பாஷணையைக் கேட்டேன். அப்படித் தாப்

பாவில் என்ன அவசியமான காரியம் (என்று புன்னகையுடன் டிறெஸர் சமுகத்தில் தென்பட்டேன்.)

டி—(அளவிறந்த மோகத்துடனும் நகையுடனும்) தாப்பாவில் ஒரு ரப்பர் தோட்டத்திலுள்ள ஒரு தமிழனை அந்தத்தோட்டத்திலிருக்கிற ஐரோப்பியரான மானேஜர் உதைத்துவிட்டார் என்றும், அதனால் அவன் மரணத்தறுவாயில் இருந்தான் என்றும், ஒரு கையெழுத்தில்லாத தந்தி போலீஸுக்கு எவரோ கொடுத்துவிட்டார். அதை விசாரிக்கும்படி போலீஸ் இன்ஸ்பெக்டர் புறப்பட்டார். டாக்டரும் தன்னுடன் வரவேண்டுமென்றும் இருவரும் ஒருமித்துப்போகலாம் என்றும் எழுதியிருந்தார். டாக்டர் என்னைப்போகும்படி கட்டளையிட்டார். நானும் இன்ஸ்பெக்டரும் கூடிச்சென்றோம். ஆனால் நாங்கள்போகுமுன் அடிபட்டவன் இறந்துவிட்டான். அவனை அடக்கம் செய்துவிட்டார்கள். தோட்டத்தில் இன்ஸ்பெக்டர் விசாரணை செய்ய ஆரம்பித்தார். தோட்டத்ததிபனாகிய மேனாட்டான் இன்ஸ்பெக்டரையும் என்னையும் அழைத்துக்கொண்டு தன்னுடைய பங்களாவுக்குள்புகுந்து, எங்களை நாற்காலாசனத்திலமரும்படிவிட்டு தன்னுடைய வேலைக்காரரில் ஒருவனை அழைத்து தன் தோட்டத்து டிறெஸரையும், ஓவர்ஸியரையும், இறந்துபோனவனின் மகளையும் வரும்படி சொல்லிவாவென்று கட்டளையிட்டான். அதோடு "போய்" என்று சத்தமிட்டான். போய் ஒரு தட்டில் அண்டுறுஉஷரின் அரியகுடிவகையும் கொக்நாக் என்னும் கிடையாத சாக்கும் கொண்டுவந்தான்.

நான்—அண்டுறுஉஷர் என்றதென்ன? கொக்நாக் என்றதென்ன (என்று புன்சிரிப்புடன் கேட்டேன்) ஜானகி பலமாய்ச்சிரித்தாள்.

டி—கந்தையாவோடு இருந்து இன்னும் தெரியாதா? அண்டுறு உஷர் என்பது விஸ்கி. கொக்நாக் என்பது பிறந்தி. இவைகளை எங்கள் முன்வைத்து கிளாஸில்ஊற்றி லெமனெட் கலந்து கொடுத்தான். நான் வேண்டாமென்றேன். அப்பொழுது தோட்டத்ததிபன் "குடிக்கத்தான் வேணும்: குடியாதவன் உலகிலுள்ள மூன்று பங்கு சந்தோஷத்தை யிழந்துவிடுகிறான். என்பது உனக்குத் தெரியாதா? ஒன்றுக்கும் வழியில்லாதவன் ஈற்றில் கடவுளே கடவுளே என்று

பெருவழக்கம். ஆகையால் சந்தோஷமாய் இருக்க நாங்கள் கொஞ்சம் குடிக்கவேணும் அப்படியல்லவா?

நான்—எங்கள் ஜாதி குடிக்கிற வழக்கமில்லை. ஆகையால் அவர்களுக்குச் சந்தோஷமில்லையா?

ஜெ—உங்கள் ஜாதி குடிக்கிறதில்லை யென்பது உண்மையல்ல. நான் அறியக்கூடியதாக அநேகம்பேர் குடிக்கிறார்கள்.

இன்—ஆம் எனக்கும் பூரணமாய்த் தெரியும்.

நான்—அப்படியானால் அவர்கள் எங்கள் ஜாதி ஆசாரப்படி நடக்கவில்லையென்று நான் சொல்லுவேன்.

வெ—எங்கள் ஜாதி ஆசாரம் குடிக்கச்சொல்லவில்லை. மனுஷனாகப் பிறந்த நாம் சந்தோஷமாயும் சுகமாயும் இருக்கப் பிரயத்தனம் பண்ணவேண்டியது. இதைத் தவிர்த்து, பழையஜாதி ஆசாரமென்று, சர்க்கரைப்பொதி சுமந்த கழுதைபோல், உங்கள் ஜாதி தலைமுறையா ஒருபாரத்தைச் சுமந்து காலம் கழிக்கிறார்களே ஒழிய மற்றைய ஜாதிகள்போல முன்னேறிச்செல்ல முயற்சி செய்கிறதில்லை. உங்கள் ஜாதி இப்பொழுதும் மடமைத்தனங்களையே கைக்கொண்டு வருகிறார்கள். நீர் உங்கள்ஜாதி குடிக்கிறதில்லையென்கிறீர்: உங்கள் தேசத்தில் இப்பொழுதும் பனைகளிலும் தென்னைகளிலும் ஒரு மட்கலசம் பாளைகளில் கட்டப்பட்டுத் தொங்குவதை நீர் பார்த்திருப்பீர் அதிலிருந்து எடுக்கப்படும் கள்ளைச் சாப்பிடுகிறவர் யார்? ஒரு சமயம் அதைச் சாப்பிடுகிறவர் கீழ் ஜாதியார் என்பீர். அவர் உங்கள் இந்திய ஜாதி அல்லவோ? ஒரு ஊரில் வசித்து, ஒரு பாஷை பேசி, ஒரு கடவுளையே வணங்கி இன்னும் கீழ்ஜாதியேது மேல்ஜாதி யேது என்று எனக்கு விளக்கப்படுத்துவீரா? உங்கள் பாஷையிலிருந்தே நாம் ஒரு அதிகாரம் எடுத்துக் காட்டின் "இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்" என்றதை மறந்துவிட்டீரோ? "ஜாதி இரண்டொழிய வேறில்லை" என்று உங்கள் ஒளவைக்கிழவியும் சொல்லியிருக்கிறாளே. "பறைச்சியாவ தேதடா பணத்தியாவ தேதடா, இறைச்சிதோல் எலும்பிலும் இலக்கமிட் டிருக்குதா" என்று உங்கள் ஞானிகளில் (அறிவாளிகளில்) ஒருவர் சொல்லியிருக்கிறாரே.?

ஜானகி—அந்தத் தோட்டத்ததிபன் சொன்னது முழுவதும் மெய்; இரகசியத்திலும் பரகசியத்திலும் யார்தான் குடிக்கவில்லை? நாங்கள் லாகிரிவஸ்து பாவிக்க மாட்டோமென்று பறைகொட்டிக் கொண்டு, எவ்வளவுபேர் பாட்டிலோடு குடிக்கிறார்கள்?

நான்—உலகம் பலவிதம், அதிருக்க. அவன் குடிக்கும்படி கேட்ட கேள்விக்கு, நீங்கள் என்ன சொன்னீர்கள்? (என்று டிறெஸரிடங் கேட்டேன்?)

நான்—இன்னும் குடித்துப் பழகவில்லை, மன்னிக்கவேணும் என்றேன்

அவன்—நீ குடியாமல் என் வீட்டை விட்டகன்றால் எனக்கு அது மிகவும் விசனமாயிருக்கும். விசாரணை செய்ய வந்த நீங்கள் நன்றாய் விசாரணை செய்துபோகவேணும். உங்களுக்கு இப்போ நடந்ததனால் ஆயாசமுண்டு.

இன்ஸ்—ஆம் அப்படியே இங்கே நின்று விசாரணை செய்து விட்டுப்போகவே வந்தோம்.

அவன்—ஆகையால் கொஞ்சம் குடித்துவிட்டு அதன்பின் உங்கள் கடமைகளைச் செய்யுங்கள்.

நான்—(மறுக்கஇயலாமல்) சரி (என்று சம்மதித்தேன்?)

இதற்கிடையில் தோட்டத்து டிறெஸரும், ஓவர்ஸியரும், இறந்துபோனவனின் மகளும் வந்தார்கள். இன்ஸ்பெக்டர் இறந்தவனின் மகளைப்பார்த்து, உன் தகப்பன் ஏன் இறந்தான்?

அவள்—தெரியாது.

இன்ஸ்—அவனுக்கு எத்தனை வயசு?

அவள்—தெரியாது.

இன்ஸ்—இங்கே வந்து எவ்வளவு காலமாச்சு?

அவள்—தெரியாது.

இன்ஸ்—உனக்கு வேலை என்ன?

அவள்—புல்லு வெட்டுகிறது.

இன்ஸ்—உன் தாய் எங்கே?

அவள்—இறந்து விட்டாள்.

இன்ஸ்—எப்பொ இறந்தாள்?

அவள்—தெரியாது.

இன்ஸ்—(டிறெஸரைப்பார்த்து)இறந்தவனுக்குக்காயமிருந்ததா?

டிறெஸர்—காயமில்லை.

இன்ஸ்—ஏன் இறந்தான் என்று சொல்லக்கூடுமா?

டிறெஸர்—அவன் கள் அதிகமாய்ச்சாப்பிட்டிருந்தான். அதனுல்தான் இறந்தான் என்று நினைக்கிறேன்.

இன்ஸ்—அடிபட்டதனுல் அல்லவா?

டிறெஸர்—அல்ல.

இன்ஸ்—அதற்குமுந்தி வருத்தமா யிருந்திருக்கிறனு?

டிறெஸர்—வருத்தமா யிருக்கவில்லை.

இன்ஸ்—(ஓவர்ஸியரைப் பார்த்து)இறந்தவனின் பெயர் என்ன?

ஓவர்ஸியர்—கருப்பையா 2நிர்

இன்ஸ்—அவன் எவ்வளவு காலமாய் உம்மிடத்தில் வேலையில் இருந்தான்?

ஓ—சுமார் ஒரு வருஷம்.

இன்ஸ்—நீர் எவ்வளவு காலம் இந்தத் தோட்டத்தில்வேலை செய்கிறீர்?

ஓவ—ஒருவருஷமாய்.

இன்ஸ்—இறந்தவனுடைய நடத்தைஎப்படி?

ஓவர்—கீழ்ப்படிவாய் வேலை செய்தான். சன்மார்க்கன் போல் தோற்றினுன்.

இன்ஸ்—அவனுக்குப் பந்துக்கள் இங்கே யாராவது இருக்கிறுர்களா?

ஓவர்—ஒரு மகள் மாத்திரம்தான்.

இன்ஸ்—அவளின் பெயர் என்ன?

ஓவர்—கறுப்பாயி? 3 நெம்பர்

இன்ஸ்—அவளுக்கு வயசு என்ன?

ஓவர்—சுமார் 17 வயதிருக்கும்.

இன்ஸ்—அவள் கல்யாணம் செய்து விட்டாளா?

ஔவர்—கலியாணம் ஆகவில்லை. இரண்டு மூன்று மாதத்திற்கு முந்தித்தான் அவள் பெரியவளானாள் என்ற ஞாபகம்.

இன்ஸ்—கள்ளுக்குடித்து யாரும் இறப்பார்களா?

ஔவர்—எனக்கு அதைப்பற்றித் தெரியாது.

இன்ஸ்—அவனுக்கு யாராவது பகையாளி உண்டா?

ஔவர்—நான் அறியக் கூடியதாயில்லை.

இந்தளவில் இன்ஸ்பெக்டர் அவர்களைப் போகலாம் என்று சொல்லி அனுப்பிவிட்டு மேஜையின்மேல் இருந்த பிராண்டியைச்சாப்பிட்டார். அதன்பின் வெள்ளைக்காரனைப் பார்த்து நீர் கொலை செய்தீரென்று குற்றம் சாட்டி இந்தத் தந்தியைக் கொடுத்தவன் "உம்மேல் வேணுமென்று குற்றம் சாட்டினான் என்பதை நான் பூரணமாய் நம்புகின்றேன். தந்தி கொடுத்தவன் யாரென்று அறியும்படி நான் பிரயத்தனம் செய்வேன்" என்று சொல்லி அதன்பின் தன்னுடன் வேட்டைக்குவரவேணுமென்றும், ஆகையால் தன்னுடன் இரண்டு நாள் நிற்கவேணுமென்றும், தோட்டத்ததிபனால் கேட்டுக் கொண்டபடிக் கிசைந்து ௨நாள் தங்கி, பின் புறப்பட்டோம். இரண்டு நாள் அங்கே தங்கினதினால் எனக்கு ஜ்வரம் உண்டானது. அதனால் ஒரு வாரம் எங்கும் போகவில்லை. அங்கே வருகிறேனென்று சொன்னபடி வரமுடியாமல் போனது (என்று டிரெஸர் கூறினார்)

நான்—இப்போ உடம்பு சௌக்கியந்தானே?

டி—ஆம் இப்போ சௌவுக்கியம் (என்று மோகமான பார்வையுடன் என்னையே நோக்கிக் கொண்டிருந்தார்.) ஜானகி மெதுவாய் விளக்கு ஏற்றவேணுமென்று சொல்லிக்கொண்டு எங்கள் இருவரையும் விட்டுநகன்றாள்.

நான்—நீங்கள் வருவீர்கள் என்று எதிர் பார்த்திருந்தேன். (என்று சொல்லி வாய்மூடமுந்தி டிரெசர் என்னை மார்போடணைத்து அடங்காத மோகமாய் முத்தமிட்டார். நான் ஜானகி வந்தாலும் வருவாள். விடுங்க என்றேன்.)

டி—இன்றைக்கு என்னுடன் வீட்டுக்கு வரவேணும் என்கண்மணி: என் செல்வக்கிளி: அப்படித்தானே? (என்றார்.)

நான்—ஆகட்டும் 10மணிக்கு ஒரு ரிக்ஷா கொண்டு வாங்க. நான் ஆயத்தமாய் இருப்பேன். நாளைக்கு விடியுமுன் இங்கே கொண்டு வந்து விட்டு விடுங்க: (என்று சொன்னேன்.)

டி—புதையலெடுத்த மகிழ்ச்சியோடு நான் நாளை விடிய 5மணிக்குமுன் ரிக்ஷாவில் தானே கொண்டுவந்து விடுவேன். (என்று இன்னுமொருமுறை முத்தமிட்டார்.)

நான்—இப்பொழுது நான் ஒரு ஆளைப்பார்க்கப்போகிறதென்று ஆயத்தமாயிருந்தேன் நீங்களும் வந்தீர்கள்.

டி—அவசியமான காரியமா?

நான்—அவசியந்தான்.

டி—நான் அறியலாமா?

நான்—நீங்கள் அறியக்கூடாதது ஒன்றுமில்லை (யென்று என் கஷ்டங்கள் யாவுஞ் சொன்னேன். டிஸௌஸர் கேட்டுக் கொண்டிருந்தார். அதன்பின் என்னை நோக்கி பெரிய மடைத்தனம் செய்து விட்டாய் போலிருக்கு. நகைகளை ஏன் அவரிடம் கொடுத்தாய்? அவர் ஒரு—)

அவர் இப்படிச் சொன்ன சொற்களைச் சொல்லி வாய் மூடுமுன் இரண்டுபேர்கள் ஓவர்சியர் வீட்டுக்கு வந்தார்கள். டிஸௌஸர் அவர்களைப் பார்த்து "யாரைத் தேடுகிறீர்கள்?" என்றார். வந்தவர்களில் ஒருவன் ஓவர்சியரைக் காணவேணும்.

டி—விசேஷமாயா அல்லது சாதாரணமாயா?

அவன்—இரண்டுமாகத்தான்.

டி—நான் அறியக்கூடியதா?

அவன்—இங்கே நீலாக்ஷி யென்றொரு பெண் கோலாலம்பூரிலிருந்து வந்து தங்கியிருக்கிறதா? (என்றான்.)

இந்தச் சொற்கள் என் காதில் விழுந்த மாத்திரத்தில் என் ஆவி என்னை விட்டு நீங்கினது. நிற்கவும் பெலமில்லாமல் இருந்து விட்டேன். தலை சுழன்றது. எனக்கும் இந்த எழுத்தா? போலீஸில் அடைபடவுமா சம்பவித்தது?ஏ! காதை நீலாட்சி! உனக்கே சொல்லுகிறேன். ஆவி துடித்தேன்—அலறினேன்—கலங்கினேன்—கைகால் அசந்தது—கண் சுழன்றது—

நீலாட்சியின் கதையைக் கேட்டுத் தாளியும் குங்குமமணியும் கண்ணீர் சொரிந்தபடியே இதைக் கேட்க என்னுள்ள முருகுகுதடி- அம்மா! இந்தப்பாடெல்லாம் எங்களால் பட்டாயென்று நினைக்க என் ஆவி துடிக்குதடி அக்கா! என்று உண்மையில் கண்ணீர் விட்டார்கள்.

நீலா கூறி பின்னும் தொடங்கி இந்தளவில் வந்தவர்கள் போலீசாரென்று தெரிந்துகொண்டேன். டிரேசரும் அறிந்துகொண்டார். அவருக்கும்தாங்கமுடியாத மனவருத்தமுண்டானதென்று அவர்சற்றுமுகமே எனக்குக்காட்டினது. என்னசெய்வேன்? பஞ்சனை மெத்தையே பட முதுகுளிகிறதென்று சிணுங்கினவளும் போலீஸாலடைபட்டு மூட்டைப்பூச்சிக் கடியால் துன்பப்படவேண்டியதாகவும் நேர்ந்ததா? போலீஸ்வேலை செய்பவர்கள் தேசாபிமானத்தைவிட்டுத் தங்கள் தேச நன்மையை விட்டுத் தாங்கள் ஜீவிப்பது செய்தால் போதுமென்றுமனிதருக்குள்ள கருணையைவிட்டுவிடுகிறார்களேயென்று, அவர்களைக்கேவலமாய் நினைத்திருந்த நானும் அவர்கள்கையில் அகப்படவேண்டி நேர்ந்ததே என்று ஆறாத கவலைகொண்டேன்.

டிரே—(வந்தவர்களை நோக்கி) இங்கே அந்த நீலாட்சியென்ற பெண் இருக்கிறது. என்னத்துக்காகக் கேட்கிறீர்கள்? என்று கேட்டார்.

ஒருவன்—அந்த அம்மாளைப் பிடித்துக் கொலாலம்பூருக்கு அனுப்பும்படி ஒருவாரண்டு வந்திருக்கு. ஆகையால்தான்கேட்டோம்.

டிரேசர் யாதொன்றும் சொல்லமுடியாமல் ஏங்கிவிட்டார். உண்மையில் மரம்போல விறைத்துவிட்டார். கல்லுப்போல் நிலைத்துவிட்டார். என்னிடத்தில் உண்டான அனுதாபத்தினாலும் அன்பினாலும் அத்துடன்காத்திருந்தது கைக்கெட்டியும் வாய்க்கெட்டாமல் போகிறதே என்றும்—பலவிதத்தாலும் துக்கப்பிடித்து நின்ற அவர்முகம் காட்டியது.

போலீஸ்—நேரமாகிறது. அந்த அம்மாளைக் கூப்பிட்டு விட்டால் நாங்கள் அழைத்துக் கொண்டு போகிறோம்.

டி—நீங்கள் அந்தப்பெண்ணை நடத்திக்கொண்டு போகவேண்டாம். ஒரு ரிக்ஷா அழைத்து அதில் உட்கார்ந்து வரட்டும். உடனே

ரிக்ஷா வரவழைத்து எனக்குத் தேறுதல் சொல்லி "நீ இவர்களுடன் போ நான் இதோ அங்கே வருகிறேன். இன்ஸ்பெக்டரிடம் சொல்லி ஜாமீனில் (பிணையில்) விடுவித்து இப்பொழுது அழைத்துக்கொண்டு வருவேன் என்றார்.

நான்—ஒருவாறு மனத்துணிவுடன் சரியப்பா வருகிறேன் என்று ரிக்ஷாவிலேறி உட்கார்ந்தேன். நேரமும் சுமார் 7½மணியிருக்கும். போலீஸ்டேஷனுக்குப் போனவுடன் என்னை அறைக்குள் விடவில்லை.

இன்ஸ்பெக்டருடைய ஆபீஸில் உட்காரும்படி விட்டார்கள். இது சிலவேளை டிறெஸர் எனக்குச் சொன்னவைகளைக் கேட்டதனாலோ, அல்லது நான் ஒரு பெண்ணென்றோ அல்லது நான் டெல்லிக்கெஞ்சனிலிருந்த செல்வியத்தைக் கேள்வியுற்றோ ஏதுவென்று சொல்லமுடியாது.

போலீஸ்டேஷனில் நான் பரிதவிப்புடன் இருந்தேன். போலீஸ்கள் என்னை அடிக்கடிபார்த்துப் பரிதாபப்பட்டார்கள். சிலர் உண்மையில் செட்டியை ஏமாற்றிவிட்டுத்தான் வந்தேனென்றும், டெல்லிக்கெஞ்சனில் ஒளித்திருக்கிறேனென்றும் பேசினார்கள். நேரமும் 9மணி அடித்தது. டிறெஸரும் இன்ஸ்பெக்டரும் ஸ்டேஷனுக்கு வந்தார்கள். நான் அவர்களைக் கண்டு மனதுக்குள் சற்றே களிகொண்டேன். முதலாவது டிறெஸரும் இன்ஸ்பெக்டரும் தாப்பாவில் கூடிக்குடித்து விளையாடினார்கள் என்று கேள்வியுற்றதினால் இன்ஸ்பெக்டர் டிறெஸரின் கேள்விப்படி பிணையில் (ஜாமீனில்) விடுவாரென்று நான் காத்திருந்தேன். அன்றியும் நான் ஒரு பெண்ணாய் இருப்பதால் என்னை பிணையில் விட யோசிக்கமாட்டார் என்றும் நினைத்தேன்.

இன்ஸ்பெக்டர் ஆபீஸ் நாற்காலியில் உட்கார்ந்தவுடன் டிறெஸர் என்னிடம் வந்து பின்வருமாறு சொன்னார். "நான் இன்ஸ்பெக்டரிடம் உன்னைப் பிணையில் விடவேணும்: கோலாலம்பூர் கோர்ட்டில் நானே கொண்டுவந்து தவணைக்கு ஒப்புவிக்கிறேன்: என்று சொன்னதற்கு விரோதமாய் "முடியாது" என்று சொல்லிவிட்டார். அன்றியும் நீ இங்கே நிற்கிறாய் என்றும், ஓவர்ஸியர் வீட்டில் ஒளிந்திருக்கி

றாய் என்றும், டெல்லிக்கெஞ்சனிலிருந்து கையெழுத்தில்லாமல் ஒரு காகிதம் கிள்ளான் போலீசுக்குப் போனதினால்தான், கிள்ளான் போலீஸ் டெல்லிக்கெஞ்சன் போலீசுக்கு வாரண்டை அனுப்பினார்கள் என்றும் தெரிவித்தார். நீ சொன்ன கதைகளால் துப்பாசி இராசையாதான் கையெழுத்தில்லாமல் காகிதம் எழுதியிருக்கவேண்டும் என்று யோசித்து, உன் நகைகளை அவனிடம் நம்பிக்கையாக நீ கொடுத்திருக்கிறாய் என்றும், களவாண்ட அல்லது ஏமாற்றிக்கொண்டுவந்த நகைகளை ஒரு பெண் ஒரு கோர்ட்டு உத்தியோகனிடம் கொடுத்தாள் என்பதை யொருவரும் நம்பமாட்டார்கள். என்றும், நகைகள் உன்னுடையவை யென்றும், அதற்கு சாக்ஷி விற்றவர்களில் சிலர் இப்பொழுதும் இங்கே யிருக்கிறார்கள் என்றும், இன்னும் சந்தேகமானால் துப்பாசி இராசையாவை அழைத்து நகைகள் அவர் வசமிருக்கின்றனவா இல்லையா வென்பதின் சந்தேகத்தை நிவிர்த்தி செய்யலாமென்றுஞ் சொன்னேன்.

அப்பொழுது இன்ஸ்பெக்டர் துப்பாசிக்குக்காகிதம் எழுதியனுப்பிவிட்டு இங்கே வந்தார். துப்பாசிவந்தவுடன் நீ அவரைப்பார்த்து பெருஞ் சத்தமிட்டுக்குழறி அழ அப்பொழுது இன்ஸ்பெக்டர் உன் மேல் அனுதாபப்படுவார். பொய்ப் பிராது கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று நம்புவார். அதன்பின் உன்னைப்பிணையில் விடும்படி நான் வற்புறுத்திக்கேட்பேன்!: மறுக்கமாட்டார். (என்றார்.)

இது ஒருவிதமிருக்க. துப்பாசிதான் உன்னைப்பற்றிக் காகிதம் எழுதினான் என்பது பூரணமாய் வெளிப்படுகிறது. மெதுவாய் உன்னைப் போலீஸ்வசம் ஒப்புவித்து விட்டால் இரகசியமாய் நகைகளைத் தான் அடித்துக்கொள்ளலா மென்றே துப்பாசி நினைத்திருக்கிறான். சாக்ஷிகள் உனக்கு இல்லாததினால் மறியலேகிடைக்கும். வழக்கில் நீ தப்பிவிட்டாலும் தன்னிடம் நகைகள் கொடுக்கவில்லை யென்றால் நீ யென்ன செய்வாய்? நீ இங்கே வருகிறதே நிச்சயமில்லை. பிரதானமாய் வாரண்டுக்கு ஒளித்தோடினதொன்றே, நீ செட்டியை ஏமாற்றினாய் என்று கோர்ட்டாரை அனுமானிக்கச் செய்யும். அன்றியும் உன்னிடத்தில் நகைகளைக் கோர்ட்டார் பார்க்கக்கூடியதாகக் காட்டு என்று கட்டளை யிட்டால் நீகாட்டமுடியாது. துப்பாசியிடங் கொடுத்

திருக்கிறேனென்றால் வழக்கை தள்ளி போட்டுத் துப்பாசியைக் கூப்பிடுவார்கள். அவன் கோர்ட்டுக்குவந்து கூட்டிலேறிச் சத்தஞ் செய்து தலைமாட்டில் நீ பொருள்களையும் தரவில்லையென்றால் உனக்குக் கிடைக்கிற தண்டனையிலும் இரண்டு மடங்கு கூடக்கிடைக்கும். ஏன்? நீ நகைகளைத் திருடினதுமன்றி ஒரு கோர்ட்டு உத்தியோகஸ்தனையும் தொந்தரவில் இழுத்துவிட யத்தனித்தாய் என்றே சொல்லிவிடுவார்கள். அவன் என்ன விதமான யோசனையெல்லாம் செய்து இந்தக்காகிதம் எழுதி யிருக்கிறான் பார்த்தாயா? துப்பாசியும் வந்தான்.

அதோ துப்பாசி வருகிறான் நான் சொன்னதெல்லாம் மனதி லிருக்கட்டும் என்று சொல்லிக்கொண்டு இன்ஸ்பெக்டரிடம் போய் விட்டார்.

துப்பாசி வந்தவுடன் நான் பெரிய சந்தோஷத்துடன் அழுதேன். துப்பாசி அனுதாபப்பட்டவன்போல் பாசாங்கு காட்டுகிறான். அதன் பின் இன்ஸ்பெக்டரிடம் போனான். அவர் இந்தப்பெண்ணை உமக்குத் தெரியுமா? என்றார்.

இரா—ஆம் எனக்குத்தெரியும்

இன்ஸ்—இந்தப்பெண் தன் நகைகளை அடைக்கலமாகக் கொடுத்திருக்கிறேன் என்று சொல்லுகிறாள். மெய்தானா?

இரா—நகைகளா— என்னிடத்திலா— இந்தப்பெண் சொன்னாளா? (என்று திகைத்துப் பின் அதை மறைக்க முடியாமல்) ஆமா: கொடுத்திருக்கிறாள் தான் (என்றார்)

இன்ஸ்—என்னென்ன நகைகள்.

இரா—பவுன் ஒட்டியாணம், அட்டிகை, கொலுசு, காப்பு இன்னும் ஒரு பவுன்மாலை ஆகமொத்தம் 5.

இன்ஸ்—இவையின் விலை என்ன இருக்கும்?

இரா—சுமார் 2000 வெள்ளி என்று மதிக்கலாம்.

இன்ஸ்—இது யாருடைய நகைகள் என்பது உமக்குத் தெரியுமா?

இரா—நன்றாய்ச் சொல்லமுடியாது.

இன்ஸ்—சரி: இந்தப் பத்திரத்தில் கை சாற்றிடும். அதாவது நீர் சொல்லிய இந்த நகைகள் உம்மிடத்தில் நம்பிக்கைக்குக் கொடுக்கப்பட்டன வென்றெழுதிக் கைசாற்றிடும். எழுதினதின்பின் பத்திரத்தை வாங்கி என்னிடங்கொடுத்தார்.

இராசையா நகைகளை அபகரிக்கும்படி ஆழமாய் யோசனை செய்து பறை பக்கிரியிடம் பிடரியில் வாங்கினதுபோல் முடிந்தது. இவர்முகம் வெளுத்துக் குற்றமுள்ள சிந்தையாகையால் என்னைப் பார்க்கவுமியலாமல் தொப்பியையும் அடி தலைமாறி மாட்டிக்கொண்டு ரோட்டுக்குப்பக்கத்துக்கு இறங்கும் வாயிலென்னும் எதிர்ப்பக்கத்தில் இறங்கினார்.

போலீஸ் ஒருவன் கிரமமான வழி காட்டினான். வெட்கங்கெட்டு அரையில் துணி நழுவ நடந்தது போல் சென்றார்.

டிரெஸர் (ஒரு செருப்பலோடு) துப்பாசியார் வரப்போகிறீர்கள் போலிருக்கே? இருட்டில் தனியே போக முடியுமா? (என்று நளினமாய்க் கேட்டார்.)

இரா—ஊம்—(என்று அடித்தொண்டையால்) சொல்லிக்கொண்டு, வெட்குண்டமுகத்தோடு ஒருவரையும் பார்க்காமல் சென்று மறைந்துபோக, இன்ஸ்பெக்டர் டிரெஸரைப்பார்த்து, நீர் இந்தப் பெண்ணை ஜாமீனில் மீட்டுக்கொண்டு போகலாம், பிணையின் தொகை ரூ 100 என்றார்.

இதைக்கேட்டவுடன் நான் பட்டுக்கொண்ட சந்தோஷம் எவ்வளவென்று சொல்லவென்றால் இயலாது. உண்மையில் என் தலையிலிருந்து ஒரு மலைச்சுமை இறக்கிவிட்டது போலிருந்தது. வாரண்டு என்று கேள்விப்பட்ட நேரந்தொடங்கி கலங்கினமூளை, ஒரு வாறு தன்னிலையான நிலையில் கொஞ்சம் கொஞ்சமாய் வந்துகொண்டிருந்தது. ½மணி தேசகாலத்தில் நான் போலீஸ்ஸ்டேஷனைவிட்டு என்னிஷ்டமான இடத்துக்குப் போவேனென்று நினைத்தவுடன் அடங்கா மகிழ்ச்சி கொண்டேன். இவ்வளவுகாலமும் யாவருக்கும் ஒளிந்திருந்த நான். இனி வெளிரோட்டால் செல்ல அஞ்சேன் என்று குதூகலித்தேன், ஆனால் நான் ஸ்டேஷனை விட்டுப் புறப்பட முன்னே, ஜானகியும் அவள் புருஷன் ஓவர்சியர் முத்துசாமி நாயக்கரும் அங்கே வந்திருந்தார்கள்.

அவர்களைக்கண்டவுடன் என் சந்தோஷம் இன்னும் பன்மடங்கு அதிகரித்தது.

டிறெஸர் தானே கையெழுத்து வைத்து ஜாமீன் பத்திரத்தை யொப்பேத்தினர். அதன்பின் ஜானகியும் புருஷனும் வந்த ரிக்ஷா விலேறி நானும் டிறெஸரும் இன்றென்று தருவித்து அதிலுட்கார்ந்தோம். ஒன்றையும் ஒளியாமல் உங்களுக்குச் சொல்லின் டிறெஸரில் எனக்கு இருந்தஅன்புக்கு ஒரு அளவில்லை. இந்தப் புண்ணியமே அன்றைக்குத் கொண்டுவந்து என் முன்விட்டது, நாளை நீலாக்ஷி யல்லவென்று யாரேனும் மறுப்பார்களா?

ஜானகிவீடு சேருமுன் டிறெஸர் தன்வீட்டுக்கு என்னை யழைத்துச்செல்லவே அடங்காத ஆசை காட்டினர். இருந்தும் நான் ஜானகி வீடுசென்று பின்வருகிறேனென்று காதலுடன்வேண்ட அவருமிசைந்து—பதினாயிரம் முத்தத்துடன்—ஜானகி வீடு சென்றோம். ஜானகியும் புருஷனும் உண்மையில் அதிக அன்பியும் உபசாரமும் டிறெஸருக்குக்காட்டினார்கள். ஜானகி என்னைக்கட்டி அணைத்துக் கண்ணீர்விட்டுப் பிடித்த சனியன் இன்றோடு போய்விட்டது. இனி நீ கலங்கவேண்டாம். உன் குணத்துக்கேற்றபடியும், உன் முகலக்ஷணத்துக்கேற்றபடியும், நீ செல்வமாயிருப்பாய் என்று சொன்னாள். அதற்கேற்றபடி நானும் உபசாரங்கூறினேன். அதன்பின், ஜானகிக்கு இரகசியமாக நான் டிறெஸருடன் அவர் வீட்டுக்குச் செல்கிறேன் என்று தெரிவித்து, விடைபெற்றுக்கொண்டு, வந்த ரிக்ஷாவிலேயே இருவரும் சென்றோம். அடுத்தநாள் நான் ஜானகி வீட்டுக்குப்போகப் புறப்பட்டாலும், டிறெஸர் தன்னுடனே நான் தங்கவேண்டும் என்றும், வழக்கு விஷயமாய்த்தான் யாவும் உதவி புரிவேனென்றும் சொல்லி அங்கேயே தங்கும்படி வேண்டினர். ஆகையால் அவர் வீடே என் தங்குமிட மாக்கினேன். இடைக்கிடை ஜானகியைப்பார்க்கிற நேரம் தவிர டிறெஸர் என்னை ஒரு நிமிஷமும் பிரியவிடாமலே என்னுடனிருந்தார். ஸ்நானம் செய்தாலும் கூட சாப்பிட்டாலுங்கூட, காப்பி அருந்தினாலுங்கூட சுருக்கிச் சொல்லின் என் கூடவே இருந்தார்.

டெல்லிக்கஞ்சனிலிருந்து புறப்படுமுன் வழக்கு விஷயமாய் டிரெஸர் எனக்குச் சொல்லவேண்டியயாவும் சொல்லிக்கொடுத்தார். இன்ஸ்பெக்ரிடமும் போய் வழக்கு எப்படி முடியும் என்று கேட்டிருந்தபொழுது, அவர் நீலாக்ஷி தப்பிவிடுவாள் என்று நான் பூரணமாய்ச் சொல்லமுடியாது. நான் அறிந்தளவில் நகைகள் யாவும் நீலாக்ஷியினுடையதென்றதற்கு ஐயமில்லை. ஆனால் நான் இப்பொழுது அறிகிற அளவில் இந்த நகைகளைக் குற்றவாளியும் அவளுடைய முன் பாதுகாவலன் வேலுப்பிள்ளையும் செட்டிக்கு விற்றுவிட்டார்களாம். அதுண்மையானால், குற்றவாளி செட்டியை ஏமாற்றினாள் என்பது ஸ்தாபிக்கப்படும். குற்றவாளி கோலாலம்பூரைவிட்டு இங்கு ஓடி வந்ததே பிரதானமாய்க்கோர்ட்டாரால் கவனிக்கப்படுமென்று சொன்னார் என்று டிரெஸர் எனக்குத் தெரிவித்தார்.

நான்—அப்பொழுது நான்நகையை விற்றுவிட்டதாய்ச் செட்டி சொல்லமாட்டான். நான் கையெழுத்துப் போடவில்லையே! விலக்கிரயம் எழுதவில்லையே! என்று டிரெஸருக்குச் சொன்னேன்.

டி—நீ விலக்கிரயம் எழுதாமலிருப்பது உனக்குச் சார்பான நியாயமானாலும் உன்னுடைய நகைகளை அடகு வைக்கும்படி நீ கொடுத்ததே உன் சம்மதத்தை வெளியாக்குகிறது அல்லவா! எப்படியென்றாலும் நீ நகைகளை விற்கவில்லையென்று கோர்ட்டுக்குச்சொல்லு. நகைகள்யாவும் என்னுடையது. என்னைக் கோயிலுக்குப் போகவிட்டு, பின் பிடித்தடைக்கும் நோக்கமாயும் என்னுடைய வீட்டுச்சாமான்களை அபகரிக்கும் நோக்கமாயும் செட்டி வழக்குக் கொண்டுவந்தானேயொழிய இவனுக்கும் எனக்கும் ஒருவகையான கணக்குவழக்குக் கிடையாது என்று சொல்லு என்றார்.

டிரெஸரின் புத்திமதி இவ்வளவுந்தான். ஆனாலும் அதுவே உண்மை. அப்படியே அவருஞ் சொல்லு என்று எனக்கு உறுதியாகச் சொல்லி வழக்குமுடிந்ததின்பின் டெல்லிக்கெஞ்சனுக்கு வரவேணும் என்று வேண்டிவேண்டிக்கேட்டார் நானும் (ஒன்றையுமொளியாமல் சொல்லின்) அவர் தலையில் கை வைத்து ஆணையிட்டேன்.

கோர்ட்டு வாய்தா (தவணை) நெருங்கிவிட்டது. டெல்லிக்கஞ்சீனை விட்டுப்புறப்பட வேண்டிய நாள் நெருங்கிற்று. கப்பலில்தான் வருகிறது சௌக்கியம். ஆகையால் வண்ணானிடம் கொடுத்த உடுப்புகள் யாவும் தருவித்தும், கப்பலுக்கு உண்டிமுதலிய செய்வித்தும், ௨-ம் கிளாஸ் டிக்கட் எடுத்தும், டிறைவர் தேவையானதெல்லாம் ஆயத்தஞ்செய்தார். நான் ஞானலிக்கும் அவர்பெயருக்கும் நன்றிபாராட்டிப் பிரயாணமாய்ப் புறப்பட்டேன். டிறைவர் என்னுடைய கப்பலுக்குவந்து எனக்கென்று அமர்த்தின அறையில்விட்டு என்னுடன் முறை முத்தமிட்டு இன்னுமொருமுறை என்திரும்புதலின் உறுதிமொழிகேட்டு வள்ளத்திலிறங்கினர்.

என்னைப் பிரியும்பொழுது 100 வெள்ளி நோட்டாகப் பத்துப்பத்து வெள்ளி நோட்டைக் கையில்வைத்து செலவுக்குத் தேவையாயிருக்கும் இதை வைத்துக்கொள் என்றார். வள்ளத்தில் செல்லும்போது கைலேஞ்சியைக் காட்டிக்கொண்டே சென்றார். அருமையான ஆள், கிடையாத ஆண். தங்கமான குணம்.

கப்பலில் வரும்பொழுது நான் இருந்த காபினுக்குள் வெப்பம் பொறுக்கமுடியாமலிருந்தது. என்னுடைய உடம்பு முழுவதும் வியர்வையால் நனைந்துவிட்டது. சொற்பநேரம் வெளியில் போயிருப்போமென்றாலும் மேல் தட்டில் ஆண்பிள்ளைக்கூட்டம் அதிகம். ஆகையால் கீழ்த்தட்டுக்குச்சென்று அங்கேகொஞ்சநேரம் காற்று வாங்கிக்கொள்ளுவோமென்று அறையைப்பூட்டிக்கொண்டு கீழ்த்தட்டுக்குச் சென்றேன். கப்பல் அசைவில்லாமல் தாராப்பட்டிபோல் ஓடிக்கொண்டேசென்றது. கப்பலின் பெயர் "டியூற்றோனியா" சின்னக்கப்பல் என்றாலும் ஓட்டத்தில் கெட்டியன். மின் சார வெளிச்சம் பகல்போல், இருந்த ஜனங்களைக் காட்டியது. பலர்தலைக் கிறுதியில் கவிழ்ந்து படுத்திருக்க, சிலர், கொஞ்சங்கொஞ்சம் உணவுசாப்பிட இன்னுஞ்சிலர் தூக்கத்திலிருக்க— இப்படிப்பார்த்துக்கொண்டு நின்றேன். அப்பொ பின்னால் ஒருவர் வந்து நின்று "வழக்கு நீ வென்றிடுவாய். அதைப்பற்றி யொன்றும் யோஜியாதே" என்று சொன்ன

சத்தங்கேட்டுத் திரும்பிப்பார்த்தேன். ஆ! யாரைப் பார்த்தேன்!! துப்பாசி இராமையாவை!!! கோரந்த முகத்திலுள்ள பற்களைக்காட்டி இளித்துக்கொண்டு நின்றார். இவர் சிரித்தார் என்று நான் சொல்ல முடியாது. ஏனென்றால், அந்த நேரத்தில் இவர் பற்காட்டினதே யன்றி சிரித்தவரல்ல சிரிப்பாயிருந்தால் அவர் உள்அன்பை வெளி விட்டிருக்கும். அன்பார்ந்தகளிப்பு முகத்தில் காணப்படாமல் பற்களை மாத்திரம் இளித்துக்காட்டினதினால் அதைநான் சிரிப்பு அல்ல வென்றேன்.

நான்—(இராமையாவைப் பார்த்து) என்ன என்று சினந்த முகத்துடன் கேட்டேன்.

இராமையா—வழக்கப்படி போஜித்து திரும்பி வந்திருந் தது. அதுதான் பயப்படவேண்டாம், அது ஒன்றுஞ்செய்யாது என்று நான் சொல்லவந்தேன்.

நான்—நல்லது பக்கிரியும் இந்தக்கப்பலில் வந்திருக்கிறான் போலிருக்கே?

இரா—பக்கிரியென்றது யார்?

நான்—ஏதோ நினைத்துக்கொண்டு சொல்லிவிட்டேன்.

இரா—இல்லை அது யார்?

நான்—போர்வைபிடிக்கிறவள்.

இரா—போனதெல்லாம் போகட்டும். அதைப்பற்றி இங்கே பேசுவானேன்.

நான்—அதைவிட்டு இப்பொ புதிதாய்ப் பேசப்போகிறா யோ என்றேன்.

இராமையா நான் கோபமாய்ச் சொன்ன சொற்களோடு திரும் பினான். நான் 'இன்னும் துடப்பக்கட்டைதான் கிடைக்கும்' என்று யாவருங் கேட்கக் கூடியதாகச் சொன்னேன். இதைக்கேட்ட மூன் றாம் கிளாஸ் ஜனங்கள் "பாபி" (பன்றி) "சிலாகா" (பிருகம்) என்று ஏசினார்கள். அவர்களுள் சிலர் இப்போது காப்டனுக்குச் சொல்லிவிட்டு வருகிறேன். இவனென்ன பெண்கள் இருக்கிற இடத்

துக்கு வந்தவன்? அவனைப்பிடி, இரண்டு உதைகொடு— என்று இஷ்டப்படி பேசினார்கள். இராசையா இவைகளைக் கேட்டுக்கொண்டு, பெட்டைநாயிடம் கடிவாங்கிக்கொண்டு வாலையும் பின்னங்காலுக்குள் இடுக்கிச்செல்லும் வீரியமிழந்த கிழட்டு நாய்போல் சென்று மறைந்து, போஸ்தட்டில் தானும் ஒரு ஆண்பிள்ளையென்று அங்கிருந்தவர்களோடு உட்கார்ந்தான்.

இராசையா சென்றதின் பின் எனக்குச் சமீபத்தில் மூட்டாக்கிட்டு தூக்கத்தினால் மிகமெலிந்து சந்தோஷமின்றி வதங்கின முகத்துடன் ஒரு இளம்பெண் என்னை அடிக்கடி பார்த்துக்கொண்டிருந்தாள். நான் அவள்கிட்ட நெருங்க அவள் "நெடுக நிற்கிறீர்களே இதில் உட்காருங்க" என்று வேண்டினாள். காற்றுவேண்டியும் அவள் செய்த மரியாதையை யேற்று அவளைச் சந்தோஷப் படுத்த வேண்டியும், அதில் உட்கார்ந்தேன். அப்பொழுது தான் தாப்பாவில் ஆலம்பூந்தோட்டத்தில் இருந்து வந்தவளென்றும், தன்தாயார் ஒன்றரைவருஷத்துக்கு முன் இறந்துவிட்டாளென்றும், தான் பக்குவப்பட்டு மூன்று மாதம் ஆயிற்றென்றும், தான் இருந்த தோட்டத்திலுள்ள ஐரோப்பியன் தன்னை பங்களாவுக்கு அனுப்பும்படி தன்னுடைய தகப்பனிடம் சொல்ல, அவன் "நாங்கள் வறுமையினால் தோட்டக்கூலிவேலை செய்ய வந்தோமேயன்றி வியபிசாரத்தொழில்செய்கிறவர்களல்ல என்றும் தோட்டத்ததிபனுக்குச்சற்றே கோபமாய்ச் சொன்னதால் அவன் தன் தகப்பனை அடித்தும் உதைத்தும் குற்றுயிராக்கிவிட, கூலிகள் லயனுக்குத்தூக்கிக்கொண்டு வந்தார்கள்" என்றும் தெரிவித்தாள். இன்னும் அவள் 'இறந்த 5ம் நாள் போலீஸ் இன்ஸ்பெக்டரும் டாக்டரும் வந்து விசாரணை செய்தார்கள். தோட்டத்ததிபன் பெரிய கங்காணியிடம்சொல்லி அன்றிரவு தன்னிடம் நான் போகவேண்டும். அல்லாவிடின் போலீஸில் அடைத்துவிடுவான் என்று தெரிவித்தான் என்றும் தான் அந்தச்செய்தி கேட்டவுடன் இரகசியமாய்ப் புறப்பட்டு சப்பர்தோட்டத்துக்குள் ஒளித்துநின்று, அன்று ராத்திரியே யாவரும் தூங்கினதின்மேல் தோட்டத்தை விட்டுப்புறப்பட்டு றயில்ரோட்டு மார்க்கமாய் நடந்துசென்று, கூலி லயன்களில் தங்கியும், இடைக்கிடை காட்டுப்பழங்களைப் புசித்துக்கொண்டும், டெல்லிக்கெஞ்சனுக்கு வந்து சேர்ந்தவளென்றும்,

டெஸ்லிக்கெஞ்சனில் வந்தபின் தான் ஒருபிடி அன்னம் சாப்பிட்டவள்' என்றும், சொன்னாள். அவள் அப்படிச் சொல்லும்பொழுது, நானும் வாரண்டில் பிடிபடாமல் ஒளித்திருந்தபொழுது என் மனம்பட்ட பாதவிப்பை யுணர்ந்து அதிகமாய் அனுதாபப்பட்டு கண்கலங்கி 'பின் போலீஸ் இன்ஸ்பெக்டர் விசாரணை செய்தபொழுது நீ உண்மை சொல்லியிருக்கலாமே' என்றேன்.

அவள்—போலீஸ் இன்ஸ்பெக்டர் யாரென்று தெரியாதா? அவரும் ஐரோப்பியன்தான். அவருக்குச்சொன்னால் ஏதும் ரக்ஷிப்பாரென்று நினைக்கிற மடைச்சி நானல்ல.

ஒரு போத்தில் பீர் அல்லது ஒரு கிளாஸ் விஸ்கி யாரேனும் கொடுக்கிறேன் என்றால் ஒரு டஜன் குமாரிகள் ஐரோப்பாவில் 'நான் வருகிறேன் நான்வருகிறேன்' என்று பின் ஓடுவார்களாம். இவைகளை அறிந்தபின்னும் அவருக்குச்சொல்லவேண்டுமென்கிறீர்கள். அம்மா இந்த ஊருக்கு நான் வந்து சுமார் ௭ வருஷமாகிறது. அந்த ஆலம்பூர் ரப்பர் தோட்டத்தில் நானும் அம்மாளும் எங்கப்பாவும் வேலை செய்துகொண்டிருக்கிற நேரங்களில் அந்தத்தோட்டத்தியனின் செய்கைகளை இந்தக்காதால் நான்கேட்டது கொஞ்சமல்ல. உண்மையில் வானத்தைக காகிதமாக விரித்துக் கடல் ஜலத்தை மையாகக்கொட்டி எழுதினாலும் அவைகளும் போதாது. எத்தனைபறைச்சி எத்தனைசக்கிலிச்சி! இவர்கள் எங்களுக்கு நாகரீகம் படிப்பிக்க வந்தவர்களாம். இந்த உலகம் சந்தோஷம் அனுபவிக்கும்படி கடவுளால் இவர்களுக்கென்றே உண்டாக்கப்பட்டதாம். சீச்சீ! மானமழிய உயிர் வாழ்ந்திருத்தலின் தானே அழிதல் தரும்:—

நான்— ரப்பர் தோட்டத்தில் வேலைசெய்துகொண்டிருந்த நீ இதெல்லாம் எப்படி அறிந்தாய்? (என்று புன்னகையுடன் கேட்டேன்.)

அவள்—(புன்சிரிப்புடன்) அம்மா! நாங்கள் கூலிவேலை செய்ய வேண்டிவந்த சங்கற்பம் இடையில் நிகழ்ந்தது. எங்கள் வம்சத்தில் பாரம்பரையாக ஆயிரக்கணக்கான கூலியாட்களை வைத்து வேலை செய்வித்து வந்தோம். அதை நினைக்க என் வயிறு பத்தியெரியுதம்மா என்று அலறி அழ ஆரம்பித்தாள். நானும் கண்ணீர் விட்

1000 ரூபா கொடுத்துவந்தாராம். இதை அறிந்த மதுரை கனகாம்பாள் அந்தவிதமாய் தனக்கும் செய்துகொடுக்காவிட்டால் அப்பொழுதுதானே தன்னுயிரைமாய்க்கிறேனென்று கயிற்றைத்தன் கழுத்தில் மாட்டி தாத்தாவுக்கு முன் நின்றாளாம். அவர் உடனே உடல் பதறி "ஐயோ! என் அன்னமே! என் அன்பானகிளியே! இளங்குயிலே! முத்தே! கற்கண்டே! நீமனம் வருந்த நான் பார்ப்பேனோ?" என்று தேற்றி கனகாம்பாளுக்கும் அப்படியே செய்து கொடுத்தாராம். இந்த விதமாய் காலம்செல்ல தாத்தாபட்டணத்தில் அநேக மாமாக்கிறதால் மதுரை கனகாம்பாள் குதிரைக்காரனைத்தொடுத்[illegible] [illegible]டிருந்தாளென்றும் கேள்வியுற்று மனமுடைந்து இருக்க, [illegible]த்தில் திரிபுரசுந்தரி தாத்தா தனக்குக்கொடுத்த ஆபரணங்கள் [illegible]தவிப கொடைகளைப்பற்றி யோசித்து கவலைப்படத் துவங்கி[illegible]ன்றும், கடனாளியாய்விட்டாரென்றும் கேள்வியுற்று, அவரை நீக்கிவிடும் நோக்கமாய் இன்னுமொரு செல்வனைச் சினேகித்துக்கொண்டு அயல் வீட்டில் சயனிக்கத்தொடங்கிவிட்டாளாம். அதன்பின், தாத்தா அங்கே நின்றால் அவமானமவருமேபோலிருந்தபடியால் எங்களூருக்கு வந்தாராம். ஊரிலே தங்குவோமென்று நினைக்குமுன் ஜெமின்டாரி பாழாய்ப்போச்சு. நஞ்சையும் போச்சு, புஞ்சையும் போச்சு. கடனும் சுமார் 3 லக்ஷமாய்விட்டது. இப்படியிருக்கிறபொழுது கம்பெனி ராஜாங்கத்துக்கு வருஷம் 15000ரூ ஜெமின்டாரிபோல் திறை கட்டவேண்டுமாம். விளைந்தாலும் சரி விளையாவிட்டாலும் சரி. அந்தப்பணம் 15000 ரூபாயும் கட்டியே தீரவேண்டுமாம். அல்லாவிடின் வீடுவாசல்களை விற்றுவிடுவார்களாம். இந்த லக்ஷணங்களுக்குள் கல்யாணம் செய்தாராம். அதன்பின் வருஷமொருபெண் சேர்த்துக்கொண்டாராம். தாசிகளோடு இருந்தபொழுது பழகினசுகமும் இல்லாமலிருக்க முடியவில்லையாம். கடன்கொடுத்தசெட்டிக்கு இடைக்கிடை வட்டிகொடுத்தும் சிலவேளைகளில் கொடுக்க இயலாமலும் விட்டுவந்ததால் கடன் வளர்ந்து 5 லக்ஷமாய்விட்டது. தாசிகளிடம் லக்ஷம் கொடுத்து வாங்கிய சாக்குகளும் வெளியாகத் துவங்கின. மருந்து வகையில் கொஞ்சம், உடம்பு தேற்றுகிறவகையில் கொஞ்சம், இப்படியாக எல்லாம் சுந்தரியும் கனகமும் அவர் பொருளைப்பாழாக்கினதுமன்றி அவர் உடம்

பையும் கெடுத்துவிட்டார்கள். அவரால் யாதொன்றும் செய்ய இயலாமல் வந்துவிட்டது. கட்டளைப்படி பேசிவிட்டு தாங்கமுடியாத மனத்துன்பத்தோடு இருந்தார். அப்பொழுது நான் 4 வயசாயிருந்தேன். மூத்தமகளின் குழந்தையென்று என்னிடத்தில் அதிக அன்பாயிருந்தார். என்னை அதிகப்பிரியமாக வளர்த்தார். பள்ளிக்கூடத்தில் கல்விகற்கப்போகவிடாமல் வீட்டிலேயே ஒரு உபாத்தி வைத்து எனக்கும் என் மாமிமகனுக்கும் கல்விகற்பித்தார். நான் ஐந்தாம் வகுப்பில் வாசித்துக்கொண்டிருந்த பொழுதே அவர் சிவபதம் எய்தினார். அவரின் மரணத்தோடு கல்விகற்கிறதும் நின்று விட்டது. எனது பேர் மங்கையர்க்கரசி நாச்சியார். ஆனால் தாத்தா வேடிக்கையாக கறுப்பாயி என்றே என்னை அழைப்பதில் அவருக்கு ஆனந்தம். நானும் அவர்மேல் அன்பாகவே இருந்தேன். இது இப்படியிருக்க.

தாத்தாவின் மரணத்தின் பின் கடன் கொடுத்தசெட்டி ஒரு முறையோ இருமுறையோ எங்கள் வீட்டுக்குவந்து எனது தகப்பனாருடன் கடன் விஷயமாய்ப் பேசிக்கொண்டிருந்ததும் எனக்கு ஞாபகமிருக்கிறது. என் தகப்பன் 5 லெக்ஷத்துக்கெங்கேபோவார்? அதன் பின் செட்டி வியாச்சியம் போட்டிருக்கிறானென்று என் பெற்றோர் பேசிக்கொண்டிருந்ததும் எனக்கு ஞாபகமிருக்கிறது. இரண்டு வருஷம் சென்றது. நாங்கள் யாவரும் தாத்தாவின் அமாவாசை விரதத்திற்குச்சாப்பாடுசெய்துவிட்டு தமாஷாய் விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது செட்டியின் கணக்கனும் இன்னும் இரண்டு பேர்களும் வீட்டுக்கு வந்தார்கள். வந்தஇருவரில் ஒருவன் எங்களைப்பார்த்து அதிக அனுதாபப்பட்டான். அப்பா அவர்களை நோக்கி 'ஏன் வந்தீர்கள்' என்றார். அவன் (அப்பாவின் முகத்தைப்பார்த்து) சிவ சிவா என்றான்.

அம்மாள்—அவனை நோக்கி 'என்னப்பா' என்றார்.

அம்மா! எனக்குச்சொல்ல நாவெழவில்லை: என்னசெய்வேன்? இவ்வளவு காலமும் மகாராசிகளாய் இருந்தீர்களே! என்று சொல்லி உண்மையில் கண்கலங்கினான். தகப்பனார் அப்பொழுது ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? கடனுக்கும் இந்தமாளிகைக்கும் ஒருபாத்தியமும் கிடையாதே?

அவன்—இந்த அரண்மனையையும் விற்கும்படி ஆர்டர் செட்டியார் எடுத்துக்கொண்டு எங்களிடம் இதைப்பூட்டி சீல் வைத்துவரும்படி ஆர்டர் கொடுத்திருக்கிருரே என்றான்.

இதோ ஆர்டர் இருக்கிறதென்று காட்டினான். என் தாயார் இதைக்கேட்டவுடனே ஹோ ஹோ வென்று அலறினாள். எனது அத்தை விரிட்டுக்குழறினாள். என் தகப்பனார் மரம்போல விரைத்து நின்றார். நான் அழுகிறவர்களைப்பார்க்கமுடியாமல் அனேகமாய் என் அன்னை அழுகிறதைப்பார்த்துச் சகிக்கமுடியாமல் தேம்பித்தேம்பியழு தேன். எங்களுடைய ஏவலாட்களும் அழுகை கேட்டு ஓடிவந்தார்கள். வீட்டுக்கு சீல்வைக்க வேண்டாமென்றும், வேறு எவ்வளவோ நிலங்களும் பங்களாக்களும் இருக்கென்றும் சொன்னார்கள். ஷெறிவ் என்னுடைய எண்ணத்துக்குச்செய்யவரவில்லை. அம்மா! என் முதலாளி சொன்னபடி செய்யவந்தேன். ஆகையால் நான் கட்டளையை நிறைவேற்றவேண்டுமே என்ன செய்வேன்? அம்மா. வீட்டைவிட்டு வெளியேற வேண்டியதும் வந்ததா? ஓ ஜெகதீசா! உனக்கே சொல்லுகிறேன். பூஞ்சோலைகளுக்கிடையில் பங்கயமலரையொத்த பாதத்தை மெல்லெனவைத்து சித்திரப்பதுமைபோல் சுமார் ஒரு டஜன், வேலைக்காரப்பெண்களால் சூழப்பெற்றும், துதிக்கப் பெற்றும் மகாராணிபோலிருந்த என் அன்னை, இருக்கக்குடிசையில்லாமல் கேவலமான ஒருவன் ஆக்ஞாபிக்க வீட்டைவிட்டு வெளியேறவும் வந்ததா என்று நான் நினைத்தபொழுது என் தலைசுழன்றது. என்னுள்ளம் துடித்தது. என் புத்தி என்னை விட்டகன்றது. அடுத்தவீட்டு ஜனங்களைக்காண வெட்கமதிகரிக்க நானும், அம்மாளும், மாமியும், அங்கேதானே வீட்டில் வாரண்டாவில் விழுந்தோம்: தத்தளித்தோம்: புலம்பினோம். ஷெறிவ் (அமீன்) ஒவ்வொரு அறையாகப்பூட்டி சீல் வைத்து ஒருபோலீசையும்காவல்வைத்துவிட்டுச்சென்றான்.பொழுது மேற்குத் திசையில் எங்கள் பரிதாபத்தைப்பார்க்க இயலாது கெதியாய் மறைந்தது. இராவுக்குச் சாப்பிடவும் ஒன்றும் வழியில்லை. மதியானம் சாப்பிட்டபொழுது நெய்வேண்டாம் என்றேனே! பாயசம் இனிக்கவில்லையென்று ஊற்றினேனே! சாதம் வேண்டாமென்று சிணுங்கினேனே? என் வேலைக்காரப்பெண்கள் ஒருத்தி கீதம்பாட ஒருத்தி என்முன் ஆட, ஒருத்தி அன்னம் ஊட்ட, அருவருத்தது

இராவுக்கு ஒருபிடி சோற்றுக்கூழுக்கும் இயல்பில்லாமல் வந்ததா ஜெகதீசா! என்று நான் எனக்குள் நினைத்தேன். என் அன்னை என்னைப் பார்த்து மனம் பொறாமல் தேம்பித்தேம்பி அழுதாள். அயலவர்கள்வந்து தங்கள் தங்கள் வீட்டுக்கு வரும்படி வேண்டினார்கள். அப்பா வேண்டாமென்று மறுத்துவிட்டார். நேரம் சுமார் 10மணி ஆனது. என் தகப்பன் அம்மாவை யெழுப்பி என்னையுங் கையில் பிடித்துக்கொண்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டார். எங்கே போகிறோம். என்று எங்களில் ஒருவருக்கும் தெரியாது. சுமார் 6மைல் தூரம் நடக்கிறதற்கிடையில் அம்மாவும் நானும் மூன்று இடத்தில் களைப்பாறித்திரும்ப நடக்கவேண்டியிருந்தது. இராவிராவாய் நடந்தோம். பொழுது விடிந்தது. ஒரு கிராமத்தில் வந்தோம். அங்கே இருந்தவர்கள் எங்கள் ஜாதியாரைச் சேர்ந்தவர்கள். எங்களைக்கண்டவுடன், ஓடிவந்து முன்போலவே மகாராஜா! ராணி அம்மா! என்று போற்றிக்கும்பிட்டார்கள். அவர்களின் எண்ணத்தில் நாங்கள் அப்பொழுதும் மேலான நிலைமையில் இருக்கிறோமென்றே! அன்று ராத்திரி அந்தக் கிராமத்தை விட்டு அகன்றோம். வருகிறவழியில் எங்களை ஒரு இல்லாமதத்தினன் சந்தித்தான். எங்கே செல்லுகிறோம் என்று கேட்டபின் என் தகப்பன் சொன்ன கதைகளில் அவன் எங்கள் அந்தஸ்தை மட்டிட்டுக்கொண்டு பிறகு ஒரு பட்டணத்தில் கரும்புத்தோட்டத்தில் சீனி செய்யும் ஆலைகளில் மிகவும் தொழிலாள வேலைகிடைக்குமென்றும் சம்பளம் நாள் ஒன்றுக்குவெள்ளி 1-12-0 என்றும் விளங்கப்படுத்தினான். பெண்கள் சீனியில் இலேசான மரும்பு மொய்யாமல் பார்க்கிற வேலை யென்றும் அங்கே போனால் விருப்பப்படி சீனிசாப்பிடலாமென்றுஞ் சொன்னான். என் தகப்பனை ஊரில் தங்க வெட்கமடிக்கிறதினாலும் இயல்பில் பிரபுக்களுடனை பழகிவந்ததாலும் அவனை நம்பிவிட்டார். பின்னைதுப் போகவேணுமானால் எப்படிப்போகலாம் என்று அவனிடம் விசாரணைசெய்தார்; போகவிரும்பினால் நான் உங்களை அனுப்பும்படி உதவிபுரிவேனென்று அழைத்து வந்து மதுரையில் ஒருகம்பெனியின் ஆபீஸில் விட்டுப் போயினான். இங்கே வந்ததால் ஆடுமாடுகள் படாதபாடுபட்டோம், ஐயோ! அந்தப்பாட்டை என்னால் சொல்லமுடியுமா? சீனி தோட்டத்தைக் கண்டார். கரும்புதோட்டத்தைப் பார்த்தார்.

துலுக்கன் சொன்னபாஷை மிகவும் சரியென்று கண்டேன். விருப்பப்படி ஜீனி சாப்பிடலாமென்று அவனும் தெரிந்துதான் "ஜீனியில் இலையான் விழாமல் பார்க்கிறவேலை" என்று சொன்னான். ஆலம்பூ தோட்டத்து ஐரோப்பியனும் அப்படிநினைத்துதான் என் தகப்பனிடம் கேட்கத்தகாத கேள்வி கேட்டான் என்பதும் புலப்பட்டது. மண்வெட்டி பிடித்து புல் வெட்ட வேண்டும்: காலமே 5-மணிக்கு லயனைவிட்டு புறப்படாவிட்டால், பிரப்படிபோட்டு தோல்கிழித்தவன் சப்பாத்தால் இரண்டு உதையும்போட்டுத்துரத்துவான்: களை வந்து விட்டதென்று சொற்பநேரம் நிற்கலாமோ? வயிற்றுவலி என்று ஆறலாமோ? இந்த லக்ஷணத்தில், மங்கையர்க்கரசி என்ற பேர் எனக்கு வேண்டாமென்று வெறுப்பு வந்தது. ஆகையால் என் தாத்தா அழைத்தபடி, கறுப்பாயி என்று பெயர் கொடுத்தேன். தோட்டத்தில் இன்னும் இரண்டு கறுப்பாயி இருந்ததினால் எனக்கு கறுப்பாயி 3ம் நிர். என்று பேர் கொடுத்துவிட்டார்கள். ஆகையால் நான் ரப்பர் தோட்டத்தில் வேலை செய்தாலும் கல்வி கற்றவழிவாறு சொல்லி விட்டேன். என் தலையில் கடவுள் இப்படி யலைவாய் என்று எழுதி விட்டானா? அல்லது என் தாத்தாவின் துன்மார்க்கத்தால் வந்த பலாபலனா? என்னுடைய எண்ணத்தில் தாத்தாவே எங்களுடைய கேவலநிலைக்கு காரணமாயிருந்தார். மடைத்தனமாய் பொருளை வீசியெறிந்துவிட்டு 'கடவுள்எனக்கு இப்படிவிதித்தார்' என்பது எங்கள் ஜாதியின் மடமைத்தனம் என்று நான் திடமாய் சொல்லுவேன். என்னுடன் கப்பலில் வந்தவர்கள் கிள்ளானில் 3ம்கட்டை தோட்டத்தில் இருக்கிறார்கள். ஆகையால்தான் அங்கே போகலாமென்று கப்பலில்வந்து ஏறினேன் என்று முடித்தாள்.

இதைக்கேட்டு இடைக்கிடை உண்மையில் நானுங்கண்ணீர் விட்டேன். ஒரு ஜமீன்தாரின் புத்திரிக்கு இவ்வளவு கஷ்டம் ஏற்பட்டிருக்க, அவளும் இன்னும் உயிருடன் இருக்கிறாளே! எனக்கு என்னதான் வந்துவிட்டது? தரித்திரமான விஸ்வபிராமணகுலத்தில் அவதரித்தேன். ஏதோ சொற்பளவில் செல்வமாயிருந்தேன். கஷ்டமு மேற்பட்டது. இது எனக்குத்தாள்வில்லை. இப்படி என்

மனதுக்குள் நானே யோசித்துக்கொண்டு, அப்பெண்ணுக்கு அன்பான வார்த்தைகூறி, டிரெசர் கொடுத்த 100வெள்ளியில் 50வெள்ளியை எடுத்து அவள் கையில் வைத்து "நீ ரப்பர் தோட்டத்துக்கு போய் கூலி வேலை செய்யாதே ஏதோ ஒரு சிறு தொழில் செய்து உன் ஜீவனஞ் செய்' என்றும், இன்னும் கோலாலம்பூருக்கு வா என்னும் சொன்னேன். அதன் பின் அவளைவிட்டு என் காபினிக்குள் நுழைந்தேன். "மங்கையர்க் கரசிநாச்சியார் 3ம் நம்பர் கறுப்பாயி', யாக மாறினது கப்பலால் இறங்கும்வரையில் என் மனதைவிட்டகலவில்லை.

ஏ ஜெகத்தீசா! நாங்கள் எங்கள் நாடிழந்தோம்: பொருள் இழந்தோம்: எங்கள் சுயாதீனத்தையும் இழந்தோம்: ஈற்றில் பெற்றோர்கள் எங்களுக்கு அன்போடு சூட்டிய நாமதேயத்தையும் இழந்து ஆடுமாடுகள் போல் நெம்பரும் பூட்டப்பட்டோம்!

கோலாலம்பூருக்கு வந்ததன்பின் கோர்ட்டில் நடந்த விஷயம் உங்களுக்குத்தெரிந்ததுதானே? என்று நீலாக்ஷி நிலத்தில் படுத்தாள். உடனே துளசி "இதைக்கேட்டும் இந்த உலகத்தில் இருக்கவும் வேண்டுமோ" என்று நீலாக்ஷியின் கன்னத்தைத்தழுவி முத்தமிட்டு "மேல்வீட்டில் போய் தூங்கு" என்று சொல்லி சமையல் மண்டபத்துக்குப் போய்விட்டாள்.

## 4-ம் அத்தியாயம்.

நீலாக்ஷியை நித்திரை செய்ய விட்டு ருக்குமணியும் துளசியும் பாரும சமையல் மண்டபம் சென்று பலவித கறிகளுடன் அன்னம் சமைத்தார்கள். அப்பொழுது துளசி தனக்குள் பின்வருமாறு யோசித்தாள்: "நீலாக்ஷி முதல் முதல் தைபூசத்திருநாளன்று இங்கு வந்தாள். அன்று சானிடரி போர்ட் கிளர்க் ஆப்வொர்க்ஸ் துரையப்பா சொல்லிக்கொடுத்த யோசனையின்படி சுந்தரியை மனைவியென்று பாசாங்கு செய்யும் படி உபாயஞ்செய்து அவளுக்கு ஐந்து வெள்ளி கொடுத்தேன். நான் அவரின் தாயென்று நடித்ததற்கு 20 வெள்ளி கூலிவாங்கினேன்.

போஸ்டுமாஸ்டர் தம்பையாவுக்கு நீலாக்ஷியை வசப்படுத்துகிறேன், என்று ஆணையிட்டு விளக்குகளை அவித்து நீலாட்சி என்று ருக்குமணியைக் கொடுத்து 25 வெள்ளி மடக்கினேன். இப்பொழுதும் நீலாட்சியின் பேரினால் ஒரு ஐந்து பத்து—ஆம் அதிகம் ஆசையாகாது—ஒரு 50வெள்ளி எப்படி? ஒரு 5ம் வட்டமும் பற்றிக்கொள்ளுவேன்—ருக்குமணி பருப்புக்கு புளிவிட்டாயா?

ருக்குமணி:—என்னம்மா! பருப்புக்குபுளி விட்டாயா? என்று கேட்கின்றாய்?

து.—என்னமோ நினைத்துக்கொண்டுசொல்லிவிட்டேன் (என்று திரும்பியும் தனக்குள் பின்வருமாறு நினைக்கிறாள்):—
நீலாக்ஷி வழக்கு முடிந்ததின்பின் டெல்லிக்கஞ்சனுக்கு திரும்பியதென்றும் டிரெஸர் வைத்திலிங்கத்துடன் நிற்கிறதென்றும் தெரிவித்திருக்கிறாள். அங்கே போகாமல் இங்கேயே நிற்பாட்டவேண்டும். எப்படி? ஜகஜாலப்பிரட்டில் 3 அத்தியாயம்: மயேந்திரசாலகொத்தில் 2 அத்தியாயம். ஆமாம். எனக்காதெரியாது. சொர்ணம் என்ற குட்டியை தணிகாஜலம்செட்டியுடன சேர்த்துவிட நான்துவங்கி எவ்வளவு கஷ்டம் பட்டேன். ஈற்றில் நான நினைத்தபடி முடிந்ததேனு இல்லையா? ஆனால் நீலாக்ஷி சற்றே மூளையுள்ளவள். கொஞ்சளவில் உலகானுபவம் இருக்கு. இலேசல்ல. ஆமாம். இன்றைக்கு அங்கே போய் 50வெள்ளிபற்றிக்கொண்டு அதன்பின் பார்த்துக் கொள்ளுகிறேன்'—ருக்குமணி புளிக்கு உப்பு போட்டாயா?

ருக்—ஆமா உப்பு போட்டேன் (என்று குலுங்கக் குலுங்க நகைத்தாள்.)

து—எனம்மா நான் சொல்லுகிறது உனக்கு நகைப்பை உண்டாக்குகிறதா? என்னைப்பார்க்க உனக்கு சிரிப்பாயிருக்கா?

ரு—யாரும் புளிக்கு உப்புபோடுவார்களா? நீ என்னமோ நினைக்கிறாய்.

து—என்னம்மா? என்னமோ நினைத்துக்கொண்டு சொல்லிவிட்டேன். பின்னும்—'நீலாக்ஷியை எப்படியென்றாலும் இங்கேவைத்துக

கொண்டால் 1000 வெள்ளி நான் சம்பாதிப்பேன். அவளின் ரூபமும் ஒரு ரூபந்தான்! தேவதச்சன் கடைந்தெடுத்தானோ? அவள் என் வீட்டில் ஒருநாள் தங்கினதற்கு வந்தவெள்ளி 50. ஒரு மாசம் நின்றால் 1000 வாராதோ? இன்றைக்கு சாயரக்ஷை போய் ஒழுங்கு பண்ணி விட்டு பின் நீலாக்ஷியை என்னுடைய போதனையால் திருப்புவேன். நல்லாயிருக்க வைப்பேன் என்று போதனை செய்யவா தெரியாது.''—ருக்மணி பொரியலுக்கு குளம்புவிட்டாயா?

ருக்மணி - ஆமா; விட்டேன். பொரியலுக்குளம்பு விடு இருந்து? வைத்தியம் பிடிக்கக்கொண்டு நில்லாதே: இந்த புதை கண் விழிக்க விடாதாம். நீ என்ன நினைக்கிறாய்? அதென்னவென்று எனக்கும் சொல்லு.

து—என்னமோ நினைத்துக்கொண்டு சொல்லிவிட்டேன்.

ரு—இப்போநேரம் என்ன இருக்கும் அம்மா?

து—ஒரு மணி யிருக்கும்: நீங்கள் இரண்டுபேரும் ஸ்நானம் செய்துசாப்பிடுங்கள். நான்உனது அத்தை மனோன்மணியிடம்போய் இராத்திரிக்குத்தான் திரும்புவேன்.

ரு—அத்தையிடம் நானும் அநேக நாளாய் போகவில்லை.

து—இன்றைக்கு போகமுடியாது. நீலாக்ஷியை தனியேவிட்டு போகலாமா? இன்னொருவேளை அழைத்துப் போகிறேன்.

ரு—இன்றைக்கு நான் போகவேணுமென்று சொல்ல வில்லை. இருக்க: அத்தை தன்னுடைய மகள் நாகரத்தினத்தை அனந்தராமனுடைய மகனுக்கு கொடுக்கப் போகிறாளாமே? அனந்தராமன் குமாரன் கவர்ன்மென்ட் ஆடிட்டர் ஆபீசில் கிளார்க் உத்தியோகமாம்: சம்பளம் 120 வெள்ளியாம்.

து—நல்லதுதானே கொடுக்கட்டுமே.

ரு—ஜாதி பார்க்க வேண்டாமா?

து—இந்தக்காலத்தில் இரண்டு ஜாதிதான்உண்டு அது, ஆண் சாதி- பெண்சாதி- வேறென்ன ஜாதி யிருக்கு? இரகசியத்தில்

குறைந்தஜாதியில் பெண்ணும் கீழ்ஜாதியில் புருஷனும் வைத்திருப்பவர் எத்தனை பேர்? பறைப்பெண் என்றும் தீண்டக்கூடாத ஜாதியென்றும் நாங்கள் எட்டத்தில் வைக்க ஐரோப்பியன் பறைச்சியை பெண் வைத்திருந்ததினால் இப்பொழுது யூரேஷியர் என்ற ஜாதி ஒன்று உண்டானது. அவர்களுக்கு முன்னால் பெரியஜாதிக்காரர் கைகட்டிக்கொண்டு நின்று வணக்கத்துடன் நடிக்கவில்லையா? ஜாதிஜாதியென்று நாங்கள் சொல்லுகிறதன்றி ஜாதிபெண்கேயிருக்குது? ஜாதி யிருக்கிற இடத்தை எனக்குக்காட்டு.

ரு—அப்படியானால் நீ பறைபனை வீட்டுக்குள் நுழையவிடு வாயா?

து—வீட்டுக்குள் நுழையவிடாதது ஜாதியினாலல்ல. அவனின் அழுக்கான நிலையாலும் அழுக்கான உடையாலும் ஸ்நானம்செய்து புனிதமாயிராததினாலேயேயன்றி பறைஜாதியென்றதனாலல்ல. போலீஸ் கான்ஸ்டேபிள்பறையனாயிருந்தால் அவனை உட்பிரவேசிக்கவேண்டாமென்று சொல்லுகிறோமா? சானிடரி இன்ஸ்பெக்டர் கீழ்ஜாதியாயிருந்தால் வீட்டுக்குள் நுழையவிடாமல் ஓட்டிவிடுகிறோமா? இந்த ஜாதியென்ற எண்ணத்தைவிட்டுவிடு; ஏதோ இருக்கும் வரைக்கும் ஒருவருக்கும் அடிமைத்தொழில் செய்யாமல் இருக்கவே யாவரும் தெண்டிக்கிறார்கள்.

ரு—அப்பொழுது ஜாதியில்லை? இந்தியர்கள் யுடையர்களா?

து—இந்த ஜாதி என்ற எண்ணம் சின்ன வயசு தொட்டு உன் மனதில் குடி கொண்டிருக்கிறபடியால் நீ அதை நினைத்திருக்கிறாய். ஆனால் உண்மையளவில் ஜாதிஎன்ற வர்ணாசாரம் அன்னியர் எங்கள் தேசத்துக்கு வந்த காலந்தொடங்கி தோறறமல் சென்றுவிட்டது. தோட்டிச்சி கக்கூஸ் சுத்தம்செய்யும் நோக்கமாய் வீட்டுக்குள்பிரவேசிக்கலாம்; ஏதோ ஒருவிஷயமாய் வீட்டுக்குள் நுழையக்கூடாது! ரெயில் கப்பல் முதலிய இடங்களில் தீண்டாத ஜாதியாரோடு பிரயாணஞ் செய்யலாம்; அப்பொழுது தீண்டலாம்; வீட்டில் தீண்டவைத்துப்பேசினால் வர்ணாஸ்ரமம் தப்பிவிடும்! மேனாட்டார் நம்மை மூட ஜனங்கள் என்று சொல்லுவதில் தப்பிதமிருக்கா?

ரு—அப்போ ஜாதி வேண்டாமென்கிறாயோ?

ஜு—ஜாதியும் வேண்டாம், வியாதியும் வேண்டாம். யென்ன ஜாதி? பறையனும் யெங்களுக்குத்தேவை, தோட்டியுந் தேவை, பிராமணனும் தேவை. ஆகையால் அவர்கள் கல்வி கற்று நாகரீகமடையாமல் வைத்துக்கொள்ள வேண்டுமென்று எங்கள் ஜாதியார்கள் எப்பொழுதும் கீழ்நிலையில் வைத்து மிருகஜாதியிலும் தாழ்மையானவர்போல் நடத்தினார்கள். அவர்கள் தாங்கமுடியாமல் அன்னியர்களுடன் சேர்ந்துகொண்டு எங்கள் தேச உயிர் நிலயத்தைக் காட்டிக்கொடுத்தார்கள். ஈற்றில் ஜாதி இந்தியாவுக்குச் செய்த நன்மை பறையரை நாம் அடிமையாக்கினதுபோல் அது எங்களை வேறு புலையருக்கு அடிமையாக்கிவிட்டது. ஜாதியென்று பெருஞ்சத்தம் போடுகிறவர்கள் இதையோசிக்கவில்லை.

இந்தக்கதையிருக்க நீலாக்ஷிக்கு பசியாயிருக்கும்; மணங்கலங்கினதால் நெடுகத்தூங்குகிறாள். போய் எழுப்பி ஸ்நானம் செய்யும்படி சொல்லு. நான் கறிகளுக்கு தாளிதஞ் செய்கிறேன்.

•

நண்பர்காள்! இந்தத்துளசியிடம் இருக்கும் தேசாபிமானம் எங்கள் இந்திய ஆரிய திராவிட குலாத்தினங்களிடம் இல்லாமல் போனதென்ன? இவர்கள் மூன்றுதரம் ஸ்நானம் செய்து, தங்கள் உடைகளை நன்றாய் துவைத்து திரிபுண்டரம்விளங்க நீறணிந்து, இலதமும் தீட்டி, ஒய்யாரகெம்பீர நடைநடக்க இவர்களின் அண்டைவீட்டிலுள்ளவர்கள் விலங்கு ஜாதிகள் போல் இருப்பதை இவர்கள் கவனியாமலிருந்ததென்ன? இவர்கள்மாத்திரம் செல்வமாய் ஜீவியஞ் செய்ய அயலவர்கள் யாவரும் பட்டினியாயிருக்க இவர்கள் கவனியாமலிருந்ததென்ன? அவர்கள் பேசும்போது கை கட்டி வாய் பொத்தி 10 கஜதூரத்தில் நின்று "எஜமானே" என்று தொழ வேண்டுமென்று இவர்கள் நினைப்பதென்ன? இவர்களின் எண்ணத்தில் கடவுள் சிலரைத்தாழ்மையாக உண்டாக்கியிருக்கிறார்போல தோன்றுகிறது. இந்தியருக்குள் "சிலர் அடிமையாயிருக்கவேண்டும் அவர் தீண்டப்படக்கூடாதவர்கள்" என்கிறார்கள். அப்படியானால் இஸ்லாம் மதத்தி

ணர் தங்களுக்காக "அல்லா சகலவஸ்துக்களையும் உண்டுபண்ணியி ருக்கிறார், நாங்கள் அவைகளை யனுபவிக்கவே பிறந்திருக்கிறோம்" என்பதுவும்.

கிருஸ்தவர் கோழி ஆடு மாடு முதலியவைகளைக்கொன்று தின் னும்பொழுது "இவைகளைக்கடவுள் எங்களுக்கு உணவாகும்படி உண்டாக்கினார்" என்பதுவும் குற்றமாகுமா? அவ்விதம் ஆங்கிலேய இந்தியா தங்களுக்காகவே உண்டாக்கப்பட்டது இந்தியர்கள் யாவ ரும் தங்கள் ஆணைக்குள்ளிருந்து தங்களுக்கும் தங்கள் தேசத்தவர்க ளுக்கும் உழைக்கவே பிறந்திருக்கிறார்கள். ஆகையால் இந்தியாவை விட்டகலமாட்டோம்: இந்தியாவுக்கு சுயராஜ்யம் கொடுக்கமாட் டோம்: என்பது குற்றமாகுமா? குற்றமாகுமேல் என்னத்தினால்? எங் கள் தேசம் எங்களுடையது; இதில் எங்களுக்கு சுயாதீனமுண்டு. இங்கே நாம் பிறவியெடுத்த அன்றே அது எங்கள் சிருஷ்டி கர்த்தா வின் கட்டளையின்படி சம்பவித்தது. ஆகையால் ஜெர்மன் ஜனங்க ளுக்கு எவ்வளவு சுயாதீனம் தங்கள்தேசத்தில் உண்டோ; பிராஞ்சி யர் ஷோன் ஒவ் ஆக் என்னும் பெண்மணியின் சேனாதிபத்தியத்தின் கீழ் பிரித்தானியரை பிரான்சில் நின்றும் ஏன் துரத்தினார்களோ; அமெரிக்கர் ஏன் ஜப்பானிலிருந்து வன்கோவர் பட்டணத்துக்கு சென்ற ஜப்பானியரை பிடரிபிடியோடு கப்பலேற்றி ஊரைவிட்டோட் டிவிட்டனரோ; அவ்வளவு உரிமை எங்களுக்கும் எங்கள் தேசத்தில் உண்டு. ஆகையால் எங்கள் சுயாதீனத்தை இல்லையென்று மறுப் பின் அது எங்கள் ரத்தத்தைகொதிக்கச்செய்யும். எங்கள் ஹிருத யத்தில் அக்னியை உண்டாக்கிவிடும்: எங்கள்கண்களை சிவக்கச்செய் யும்: அது அடாத செய்கை; ஆகையால் நாம் அதைச் சகிக்கமாட் டோம் என்றே சொல்லுவீர்கள். அப்படியானால் தீண்டக்கூடாத ஜாதி யென்று உங்களால் புறக்கணிக்கப்பட்டவர்கள் இந்தியர் களன்றி பிறிம்பானவர்களல்ல. இந்தியாவில் பிறவி யெடுத்து உங்க ளுக்குதவியாயிருக்கும் ஜனங்களை எட்டநில்: கிட்ட வாராதே: என் கிணற்றில் ஜலம் மொள்ளாதே: என்று நீங்கள் சொல்ல அல்லது எழுதி முடியாத ஹிம்சையெல்லாம் செய்ய, தீண்டக்கூடாதவர்கள்

"நீங்கள் இப்படி செய்வது சரியா?" என்றுகேட்டால் உங்கள் பதிலென்ன? ஒருசமையத்தவர் ஒருபாஷைபேசுகிறவர் ஒரு ஜாதியாருக்கு சகோதரர் என்பார்; ஆனால் இந்தியாவிலே எங்களைச் சகோதரர்கள் என்று நடத்துகிறீர்களா? என்று கேட்டால் உங்களிடம் என்னபதில் இருக்கு? தீண்டக்கூடாமை என்னத்தினால் உண்டானது? உடையாலா? அல்லது சாப்பாட்டினாலா? கருமையினாலா அல்லது ரத்தத்தினாலா? தலைமயிர்க்கட்டாதத்தினாலா? அல்லது அழுக்கினாலா? பிறவியினாலா? அல்லது வேதவ்யாசரின் வகுப்பினாலா? இவைகளை ஆராய்ச்சி செய்யுமிடத்து நாம் எதனால் என்று நிச்சயமாய்ச்சொல்லமுடியாது. ஆனால் அழுக்கினால் மாத்திரம்—அதாவது வறுமை யென்ற பிணியினால் மாத்திரம் தீண்டக்கூடாமை வந்திருக்கலாம். ஏன்? எல்லா உலகிலும் எல்லா ஜீவபிராணிகளிலும் சுருக்கிச்சொல்லின் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் நீக்கமறநிற்கும் ஆதிரக்ஷகன் தீண்டக்கூடாதவர்களின் ஹிருதயம் என்னும் பதுமமலரிலிருந்து நீங்கிவிட்டாரா?

அப்படியாகில், நந்தனுக்கு மோக்ஷம் கொடுத்தது எங்ஙனம்? நீலகண்டருக்குமதேவிக்கும்யௌவனபாலியம் கொடுத்ததெவ்விதம் கண்ணப்பனார்க்கு காட்சிகொடுத்ததெப்படி? நியாயமான பதில்சொல்லவியலாமல் அவர்கள் ஞானிகள் என்பீர்? சரி தீண்டக்கூடாதவர் ஞானியானதெவ்விதம்? தீண்டக்கூடாதவர் பரமபதியுடன் சேர்ந்துகொண்டதெவ்விதம்? தீண்டக்கூடாதவரைச்சேர்த்துக்கொண்ட கடவுளை நீங்கள் இன்னும் தொழுதுகொண்டிருப்பது எவ்விதம்? "மோருக்கும் போருக்குப்போதாது முட்டிபிறகாலையா? என்று ஒரு பழமொழி"

"நாங்கள் இந்த உலகிலிருக்கும்வரைக்கும் வர்ணாஸ்ரமமிருக்கவேண்டும். அதின்றி உலகஜீவியஞ் செய்யவியலாது" என்பீர். நல்லதும்! அப்படியே!

உலகஜீவியஞ்செய்கிறதானால் நீங்களும் மற்றும் மற்றும் ஜாதியார் போல் ஜீவியஞ்செய்யவேண்டும். மற்றஜாதிபோல் தற்கால நாகரீக ஜீவியந் செய்யவேண்டும். லௌகீக உன்னதமின்றி உலகஜீவியஞ் செய்யவியலாது. நீங்களும் மற்றைய ஜாதிகள்போல் பஞ்ச

பூதியங்களை உங்களாணைக்குட்படுத்தி, உங்களுக்குத்தேவையானவைகளை அவைகள் மூலமாகச்செய்யவேண்டும். உங்கள் பரதகண்டத்திலுள்ளோர் பண்டைகாலத்தில் பூதபௌதிகசக்திகளினால் மனுஷ ஜாதிகளின் மனதுக்கு எட்டாத காரியங்களையுஞ் செய்திருக்கிறார்கள் என்று நீங்களே வாசித்திருப்பீர்கள். ஐயாயிரவருஷங்களுக்குமுன் குருக்ஷேத்திரசண்டையில் அர்ச்சுனன் பற்பல ஆயுதங்களை துரியோதனாதிகளுக்கு பிரயோகம் செய்தான். அதில் மயக்கத்தை வருவிக்கும் புகையாகிய மோகனாஸ்திரமும்; பட்டணத்தையும் சேனைகளையும் எரித்து பஸ்மீகரமாக்கும் அக்னியாஸ்திரமாகிய ஓர்வித எண்ணெயும்; விலங்காதி விருக்ஷாதி முதலிய ஜீவஜந்துக்களையும் பஸ்மீகரமாக்கும் நாகாஸ்திரமாகிய நஞ்சுப்புகையும்; கோட்டைகளை உடைத்துத்தகர்க்கும் பீரங்கியாகிய பாஸ்பதமும்; ஒரேமுறையில் நான்கு ஐந்து லெக்ஷம் சேனைகளை யழிக்கும் அஸ்திரமாகிய தூமகேதுவென்னும் புகையும்; இன்னும் யுத்தகளத்திலிருந்து தன் மூலபலத்துடன் பேசிக்கொள்ளக்கூடியதாகிய ஆகாயத்தந்திகளும்; உங்கள் பாரத மாதாவின் புத்திரர்கள் செய்துவைத்திருந்தார்கள் என்றும், மகாபாரத அமர் அந்தத்தில் அஸ்வமேதயாகஞ்செய்தபொழுது, போர்வீரனாகிய அர்ஜுனன் அநேகதேசத்துக்கு சென்று பலஜாதிகளைபோரில்ஜெயித்து நாகலோகம் (மெக்ஸிகோ வரையில் சென்றான் என்றும், நாம் வாசித்திருக்கிறோம். அதுவுமன்றி ஸ்ரீ ராமபிரானின் தேவியாகிய சீதாப்பிராட்டியை இராவணன் ஆகாயவிமானத்தில் இலங்காபுரிக்குக்கொண்டு சென்றான் என்றும்; துரியோதனாதியரின் பளிங்குமாளிகையில் பாடும் சூத்திரப்பெட்டி ஒன்று இருந்ததென்றும், நிலைக்கண்ணாடியிருந்ததென்றும், நாம் வாசித்ததுண்டு. துரியோதனன் கொலுமண்டபம் பன்னீராயிரம் ஜனங்களையடக்கக்கூடிய தென்றும்; அது நவரத்தினங்களினாலும், விலையுயர்ந்த லோகங்களினாலும், மாபிள் கல்லாலும் இயற்றப்பட்டதென்றும், நாம் வாசித்திருக்கிறோம். துரியோதனனுடைய பட்டணம் 36-மைல்தூரம் விசாலங்கொண்டதென்றும், இராவணனின் மாளிகை பத்துமைல் விசாலமுள்ளதென்றும், சொல்ல சாக்ஷியங்களுண்டு. இன்னும் உலகத்துக்கு உங்கள் பூர்வீகரின் நாகரீகமே பரந்தது

என்று சொல்லுவதும் தப்பிதமாகாது. ஏன்? இந்தியாவிலிருந்தே 1, 2, 3 என்றும் எண்கள் மற்றையதேசத்தவர் அறிந்துகொண்டார்கள். அக்ஷர கணிதம் இந்தியர்களுடையதே! பூகோளகணிதசாஸ்திரமும் உங்களுடையதே! உங்கள் முன்னோர்கள் அக்காலத்தில் அயல் அண்டையிலுள்ள தேசங்களை வெற்றிகொண்டு, தங்கள் ஆணை செலுத்திவந்தார்கள். சீனு, ஜாவா, காம்போதியா ஆகிய தேசம் யாவும் இந்தியரால் ஆளப்பட்டன. கிருஸ்து பிறக்க 1100-வருஷங்களுக்குமுன் இந்தியாவில் தபாலாபீஸுகள் இருந்தனவென்றும், ஆகாயக்கப்பல் வழியாக தபால்கள் கொண்டுபோகப்பட்டனவென்றும் ரூஜுப்படுத்த சாக்ஷியங்களுண்டு. இன்னும் குதிரைபூட்டிய வண்டிகளிலும், காகிதம் அனுப்பப்பட்டிருக்கிறதென்று சொல்ல, ருசுக்களுண்டு. அக்காலே, சக்கிரவர்த்திகளையும் தங்கள் ஆணைக்குட்படுத்தி அரசாண்ட மண்டலேஸ்வரர்களும் இந்தியாவில் இருந்திருக்கிறார்கள். ஆகையால் நீங்கள் உலகஜீவியஞ் செய்யவேண்டுமானல் பழையபடி உயர் நிலைக்கு வரவேண்டும். உங்கள் ஜாதியென்னும் வியாதியால் அடிமையாகிவிட்டீர்கள். அது உங்கள் இயல்பான ஆண்மையை நொருக்கி பெண்ணைபராக்கிவிட்டது. ஜாதியென்ற மடைத்தனம் உங்களை இப்பொழுது அன்னியர்கையிலகப்படச் செய்தது. உங்களின்மடமைத்தனமும் கொடுமைத்தனமும் உங்களை இன்னிலையில்விட்டது. இப்பொழுது ரப்பர் தோட்டக்காடுகளிலும், தேயிலை காப்பித்தோட்டங்களிலும், நீங்கள் படும்பாடு கொஞ்சமல்ல; பாம்பின் வாயில் அகப்பட்ட தேரைப்போல பதைபதைத்து வாடுகிறீர்கள்: தீண்டப்படாத ஜாதியென்று தள்ளிவைக்கப்பட்டவன் பிரம்படிபோட ஆறுதவருத்தத்தை அடைகிறீர்கள். இதை எப்போவாவது யோஜித்திருக்கிறீர்களா? உங்கள் இந்தியாவாசியாகிய நீச்ச ஸ்திரீ என்கப்பட்டவள் கடலுக்கு அப்பாலிருந்து வந்த கழுதையோடு கூடிக் கோவேறுகழுதை பெற்றாள், தெரியுமா? ஆகையால் உங்கள் ஜாதியென்ற வியாதியில் நீங்கள் யெடுத்துக்கொண்ட மகிமை என்ன? சிலாக்கியம் என்ன? நீங்கள்தள்ளிவைத்த இந்தியர்கள் நீங்கள் செய்த கொரோத்தினால் அன்னியரிடம் அடைக்கலம் புகுந்து உங்களுக்கு சத்துருவாகிவிட்டார்களென்பதை எப்போவாகு

தல் சிந்தித்திருக்கிறீர்களா? உங்கள் உயிர் நிலயத்தை அன்னியர்களுக்குக் காட்டிக்கொடுத்தவர்கள் யார்? உங்களால் தள்ளிவைக்கப்பட்டவர்களல்லவா? இப்படியிருப்பதெல்லாம் கண்ணுற்றும் இன்னும் ஜாதியென்ற சொல்லும் உங்கள் வாயில் வருகிறதா? மான மழிந்து போனதின்பின் மாலையுமா போடுகிறீர்கள்? உயர்நிலைக்கு நீங்கள் வர வேண்டுமானால் உங்கள் ஜாதிக்குள் ஒற்றுமையிருக்கவேண்டும். ஒற்றுமைவரவேண்டுமானால் நீங்கள் கர்வத்தோடு பாராட்டிவரும் வர்ணசாரம் நீங்கவேண்டும். அது அகலவேண்டுமானால் நீங்கள் பல ஜாதிகளின் தற்காலஏற்றத்தின் இரகசியங்களையும், உங்கள்ஜாதியின் கீழ் நிலையின்காரணத்தையும் சிந்திக்கவேண்டும். அப்படி சிந்திப்பின், வர்ணாசாரத்தை இப்பொழுது கைக்கொள்வது ஜாதிவளர்ச்சியை கெடுக்கும் என்பதையும், ஒற்றுமையாயிருப்பது அவசியமென்பதையும், தெரிந்து கொள்வீர்கள். அப்படிச்செய்யாது கதர்துணி மாத்திரம் இந்தியாவை முன்னிருந்த நிலைமைக்குக்கொண்டு வரும் என்ற எண்ணத்தை விட்டுவிடுங்கள். செல்வத்தை வெளியில் போகாமல் தடுப்பதும் அதுவும் ஒன்றேயன்றி அதுமாத்திரமல்ல. அன்னியதேசத் தொழில்சாலைகள் யாவும் அவ்வவ்வூரின் தனவந்தரால் நியமிக்கப்பெற்றவை. அவ்வூரின் ஜனங்களே தொழிற்சாலைகளில் கைத்தொழிலை புரிபவர்.

ஆகையால் அத்தொழில்சாலையிலிருந்து வரும் சாமான்களை நீங்கள் வாங்காமல் நிறுத்தினால் அவ்வூர் வறுமையடையும். உங்கள் பணமுங்களிடத்தில் தான் தங்கும். அப்படிச்செய்வதோடு நீங்களும் உங்களுக்கு தேவையான பொருளைச் செய்து கொள்ளவும். அவைகளைச் செய்யும் முறைகளைத் தெரிந்துகொள்ளும்படி கலாசாலைகளையும், இயந்திரசாலைகளையும் ஒருங்குசேர்ந்து செய்ய இங்கே தீர்மானஞ் செய்யவேண்டும். இப்பொழுது உங்களுக்கு பற்பல வேலைகளைச்செய்துகொள்ளும்படி அநேகதொழிற்சாலைகள் வேண்டும். சாஸ்திர ஆராய்ச்சி கலாசாலைகள்வேண்டும். உங்கள் ஜாதியின் என்புகளும் நரம்புகளும் உருக்கினாலும் இரும்பினாலும் செய்யப்பட்டிருக்கக்கூடிய ஆண்பிள்ளைகள் வேண்டும். இப்படிச்செய்யாமல் அசட்டையாக

விருப்பீரானால் சற்றில் அகப்படுவீர்கள். இப்பொழுதும் திரண்டு நின்று வெளியொழிய முக்கெறிவிடமாட்டார்கள். ஆகையால் இந்தியாவின் ஒவ்வொரு ஜீவ பிராணிகள் செய்யும் செய்கை இந்தியா செய்ததென்றே ஏற்படும். ஆகையால் "எனக்கென்ன" என்று வீட்டிற்குள் அடைபட்டிருக்கும் பெண்ணாலுஞ்சொல்லமுடியாது.

நீங்கள் உலகில் ஜீவியஞ்செய்யவேண்டுமானால் உங்கள்வாழ்நாளில் என்னசெய்யவேண்டுமென்று இப்பொழுதுவிளங்கியிருக்கும் என்று நினைக்கிறோம். நந்தனுக்கு முக்தி கொடுத்து தன்னுடைய ஜோதிப்பிரகாசத்தில் சேர்த்துக்கொண்ட கடவுள் ஜாதியில்லையென்று உங்களுக்கு பலமுறையுங் காட்டிவந்தார். நீங்கள் அவர் காட்டிவந்த செய்கையாலுஞ் ஜாதி பேதமில்லையென்று நடவாமல் உங்கள் சகோதரர்களை விலக்கி தாழ்வினைசெய்ததைக்கண்டு அவர் உங்களை எட்டியும் பாராமல் விட்டுவிட்டார். நீங்கள் புலையர் வாயிலகப்பட்டுக் கஷ்டப்படவும் அவர் உங்களைப்பாராமல் வெறுத்துத் தள்ளிவிட்டார். இரணியன் கொடுமைசெய்த காலத்தும் சூரபத்மன் அதஞ்செய்தகாலத்தும் இராவணன் சிறையிட்டகாலத்தும் உங்களை காத்து ரக்ஷித்த கடவுள் உங்களையிப்போ கைவிட்டுவிட்டார். ஏனெனில் நீங்கள் உங்கள் சகோதரர்களை நிந்தாதூஷணைசெய்தீர்கள்; செய்கிறீர்கள், இன்னும் செய்யவேண்டுமென்றே நினைக்கிறீர்கள். ஆகையால் "ஏழைவிட்ட கண்ணீர் இருந்தறுக்கும்" என்றபடி இப்பொழுது நீங்கள் கண்ணீர் விடுகிறீர்கள். ஆத்மரக்ஷகன் அப்படிச்செய்வது சரியென்றே நினைத்திருக்கிறார். ஆகையால் இன்று தொடங்கி, கல்லாத இந்தியனும் கற்ற இந்தியனும், பறையஇந்தியனும் பாப்பார இந்தியனும், என் சகோதரர் என்று கூப்பிடத்தீர்மானஞ்செய். "ஜாதி இரண்டொழிய வேறில்லை" என்று கலைமகளின் அம்சம்பெற்ற ஔவைப்பிராட்டியேசொல்லியிருக்கிறாள். "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக்கரந்தார்க்கன்பராயின் அவர் கண்டீர் யாம் வணங்குங் கடவுளாரே" என்று சமயகுரவரில் ஒருவர் சொல்லியிருக்கிறார். ஆகையால் ஜாதிபேதம் வைத்திராதே. ஆனால் நீ உன் சுத்தத்தையும் புனிதத்தையும் இதனால் அழிக்கவேண்டாம். புனித

நிலையிலுள்ள ஒருவரை கீழ்ஜாதியென்று தள்ளிவையாதே. அழுக்கு நிறைந்த ஒருவரை மேல்ஜாதியென்று கிட்டவையாதே. உன் சுத்தமான நாயை உன் வீட்டுக்குள் நுழைய விடுகிறாய்; அப்படியானால் சுத்தமான ஒரு மனிதனை ஏன் விடக்கூடாது? ரோட்டுகளிலுள்ள அசுத்தங்களை தன் காலில் பூட்டிவரும் மிருகங்கள் உன் கிரஹத்துள் பிரவேசிக்கின்றன; ஆனால் சுத்தமுள்ள மனிதன் உன் வீட்டில் நுழையக்கூடாது என்று நீ சொல்வது புத்தியின் செய்கையா? அல்லது அதற்கு யாதேனும் ஒரு அர்த்தமுண்டா?

திருப்பித் திருப்பிப் பார்த்தால் உன்னுடைய மடமைத்தனத்தால் இப்பொழுது நீ 'ஜாதி ஜாதி'' யென்று உழறுகிறாய் உண்மையில் ஜாதிஉன்னிடமில்லை. சாப்பிடுகிற ஜீனி எத்தனை பறையன் தொட்டு எடுத்தான் என்று உனக்குத்தெரியுமா? கோதுமை மா யாரால் தொடப்பட்டது என்று தெரியுமா? நீ உன் வீட்டில் சுகவீனம் வந்தால் ஐரோப்பிய லாகிரி கலந்து அல்லது தனியே பிரயோகிக்கும்படி ஏவப்பட்டு அப்படி செய்வதுண்டு. அது எவ்வித பாத்திரத்தில் தயாரிக்கப்பட்டதென்று உனக்குத தெரியுமா? உத்தியோக பேராசையோ அல்லது கூடிய சம்பளமோ சில பெண்களின் பரிசுத்தத்தையும் எஞ்ஞான்றும் மாதர்க்கணிகலமாகிய கற்பையும் அழிக்க ஜாதி ஜாதியென்று நீ உழறுவது என்னமடத்தனம்? உன்னத நிலைக்குவரவேண்டும்: இந்தியா மாதாவானவள் இப்பொழுது நித்திரையை விட்டெழுந்திருக்கிறாள்: அவள் அநேக வருஷமாய் தூக்கத்திலிருந்துவிட்டாள்; அவளின் சந்திரோதயமான வதனவிம்பம் இன்னொருமுறை பிரகாசிக்கப்போகிறது: ஆம்; அக்காலத்தில் அவளிடம் சிறந்திருந்த உன்னத சூரியன் எகிப்து, ஸ்பெயின், பிரான்சு, அமெரிக்கா ஆதியாம் தேசங்களைச் சுற்றியோடி வந்து இப்பொழுது கிழக்கே உதயஞ்செய்கின்றான். இந்தியமாதானவளின் குமாரத்தியாகிய தைரியலெக்ஷ்மி நகைப்புடன் திக்குவிஜயம் செய்கிறாள். ஆகையால் அவளின் புத்திரர்களாகிய நீங்கள் அவளின் கோரிக்கைகளை நிறைவேற்றுவதை தடை செய்யும் யாவையும் திருத்துங்கள்: ''உத்தமனாய்வாழ்; உலக நன்மைக்காக உன் உடம்பையுங்கொடு:'' என்ற உபநிடத கோஷத்தை மறந்துவிடாதீர்கள்.

நிற்க: சாயங்காலம் சுமார் ஏழுமணியளவில், டயமன்சாறு ரோட்டில், வாமைரங்களினால் சூழப்பட்ட 5அல்லது 6அறைகள் உள்ள ஓர் வீட்டில், சந்திரபிரகாசத்தை கீர்த்த வெளிச்சப்பிரவாகம் வீசப்பட்டிருக்க, ஜன்னலில் மெல்லிய பின்னல் துணி தொங்க, நிலத்தில் பூவர்ண மிழைக்கப்பட்ட ஜப்பானிய பாய்கள் விரித்திருக்க, சுவர்களில் நாகரிக காக்ஷியமைந்த படங்கள் தொங்க, அங்கிருக்கும் மேஜை நாற்காலி இன்னும் அலமாரிகளின் வார்னிஸ் பளிக்கமிட, ஓர் அழகிய வாலிபன் டிராயிங்ரூம் என்னும் அறையில் அங்குமிங்கும் உலாவிக்கொண்டு அடிக்கடி ஜன்னல் வழியாய் பார்த்துக்கொண்டு நின்றான். அப்பொழுது ஒருவயோதிக ஸ்திரீ ரிக்ஷா வண்டியில் வந்து வாலிபனைக்காணும்படி வீட்டினுள் புகுந்தாள்.

வாலிபன்—(அதிக சந்தோஷ தோற்றத்துடன்) உன்னுடைய வரவைத்தான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

துளசி— ஆமா: உங்களுடைய வேலைக்காரப்பையனை நான் என் மச்சினி வீட்டுக்கு போகும்பொழுது கண்டேன். அவன் சொன்னவைகளைக்கேட்டு உங்களைப்பார்த்துப் போகத்தான் வந்தேன். அப்படியென்ன "அவசியமான காரியம்" என்று தெரிவித்தீர்கள்?

வாலிபனாகிய துரையப்பா: —அவசியமான தென்று கேட்டுப் போக வந்தியா அல்லது உண்மையில் நான் கேட்கப்போகிற விஷயம் உனக்கு தெரியுமா? (என்று நகைத்தார்.)

து—உங்களுடைய மனசுக்குள் இருக்கிறதை நான் எப்படி கண்டு கொள்ள முடியும்?

துரை—என்னுடைய மனதுக்குள்ளிருப்பதை நீ கண்டுகொள்ளமுடியாது. ஆனாலும் சிலகாரியங்கள் சொல்லாமலும் அறியப்படுகின்றன. அப்படியானவைகளில் இதுவுமொன்று (என்று நகைத்தார்).

து—ஆமா-சிலகாரியங்கள் ஜாடைகளினால் அனுமானிக்கலாம்.

துரை—அப்படியானால் இப்போ உனக்கு தெரியுந்தானே?

து—அப்படியானாலும் உங்களுடையவராயால் நான்கேட்கட்டும்.

துரை—தெரிந்தகாரியத்தை நான் ஏன் சொல்லவேண்டும்? ஆகையால் நீ முன் எனக்கு உபகாரமாயிருந்தது போல் இப்பொழுதும் இருக்கவேண்டும்.

து—நான் உதவியாயிருக்கத்தடையில்லை: ஆனால் நீலாக்ஷி திரும்பியும் டெல்லிக்கெஞ்சனுக்கே திரும்புகிறதாகச் சொல்லியிருக்கிறாள்: ஆகையால் அதை மறந்துவிடுங்கள்.

துரை—நீ நினைத்தால் அவளை நிறுத்தமுடியாதா?

து—அவள் திரும்புகிறேனென்று சொல்லியிருக்க நான் இங்கே நிற்கும்படி எப்படி கேட்கலாம்? அன்றியும் அந்தப் பெண்ணுக்கு வந்த துன்பம் யாவும் என்னால் வந்தது போலிருக்கு: தை பூசத் திருநாளுக்கு வந்தபொழுது நான் சுந்தரியை உங்க மனைவியென்று பாசாங்குபண்ணி இங்கே கொண்டுவந்த பலாபலனினாலல்லவா செட்டி அப்பெண்ணுக்கு வாறண்டு பிறப்பித்தான்! பாவம்! எவ்வளவு கஷ்டம் பட்டுட்டுது! அந்தப்பெண் சொன்னவைகளைக் கேட்டு இன்று முழுதும் அதிகமாய் கண்ணீர் விட்டேன். உங்களுடைய ஆசை நீங்கவைத்து நான் பாவமூட்டை யொன்று கட்டிக்கொண்டேன். இந்தப்பழி காசியாத்திரைக்குப்போனாலும் தொலையாது. இன்னுமா பழி சுமக்கச்சொல்லுகிறீர்கள்?

துரை—நான் இன்றைக்குக் கோர்ட்டில் நின்றபொழுது நீலாக்ஷி யென்னிடம் வந்து மூன்று நாள் கோலாலம்பூரில் தங்கினதால் தான் செட்டி வாரண்டு எடுத்தானென்று அறிந்தேன். உண்மையில் நானும் அதிகமாய் துக்கப்பட்டு விட்டேன். நான் வேணுமென்று நீலாக்ஷிக்குதொந்தரவு ஏற்படுத்தவில்லை. அது உனக்கும் தெரிந்த விஷயம். ஆகையால், எப்படி யென்றாலும் உன்னாலாகும். நான் கேட்ட உதவி செய்து வைக்கவேணும்.

து—நீங்கள் அவளை தொந்தரவுக்குள் விடவேணுமென்று எண்ணினவர்களல்லர்: அது எனக்குந்தெரியும்: நீலாக்ஷிக்குந் தெரியும்:

அப்படியிருந்தும், உங்களுடைய கேள்விக் கிசைந்து அவள் இங்கே யின்றாளல்லவா? அப்படியிருக்க அவளுக்கு வந்த தொந்திரவை விலக்க நீங்கள் என்ன செய்தீர்கள்?

துரை—உண்மையில் எனக்கு அது இன்று வரையுந் தெரியாது. நீலாக்ஷி கில்ளானுக்குத் திரும்பிவிட்டாளென்றே நினைத்திருக்கிறேன். போகிறபொழுது வேலைக்காரப் பையனை யனுப்பி டிக்கெட் எடுத்துத் தருகிறேன் என்று நான் சொன்னபொழுது, அவளே வேண்டாமென்று தடுத்து தனியே ஸ்டேஷனுக்கு புறப்பட்டாள். ஆகையால் கில்ளானுக்கே போய்விட்டாள் என்று எண்ணியிருந்தேன். இன்றைக்குமாத்திரம் தான் டெல்லிக்கஞ்சனிலிருந்து விரக்தில் பிடிபட்டு பின்னையில் வந்தாளென்று அறிந்தேன். ஆகையால் அது விஷயமாய் என்னை குற்றஞ்சொல்லமுடியாது.

து—நீங்கள் உங்களுக்கு யாதொன்றும் தெரியாது என்று சொல்ல நான் நம்புகிறேன். ஆனால், நீலாக்ஷி நம்புவாளோ வென்று நான் சொல்லமுடியாது. எப்படி யென்றாலும்—

துரை—பூரணமாய் எனக்குத் தெரியாது என்று உறுதிப்படுத்தி விடு; அத்தோடு நீலாக்ஷிக்கு பேரில் நான் இரைவிளங்கப்படுத்த விரும்புறேன் என்று தெரிவித்துவிடு; அதன்பின்—

து—ஆனால் நீலாக்ஷி டெல்லிக்கெஞ்சனுக்கு போகிறேன் என்று சொல்லியிருக்கிறாள். ஆகையால் உங்களைக்காண விரும்புவாளோ தெரியாது.

துரை—நான் வந்து காணும் வரையும் நீலாக்ஷியை திரும்பவிட்டிடாதே! நான விரும்பினபடி உதவியாக இருந்து நீலாக்ஷியின் மனதைத்திருப்புவதற்கு மாத்திரம் உனக்கு வெள்ளி 200 பிரசெண்ட்.

து—ஆமா—வெள்ளி யிருக்கட்டும். ஏதோ என்னால் இயன்றமட்டும் பார்க்கிறேன். என்னுடைய எண்ணத்தில் நீங்கள் நீலாக்ஷியை உங்களுடனே வைத்துக்கொள்ளுகிறதானால் அவளை இங்கேயே நிறுத்திவிடலாம். இல்லாவிடின் அவள் போகிறேனென்றே சொல்லுவாள்.

துரை — உன்னுடைய வீட்டில்தானே இருக்கட்டும். இங்கே வந்தால் எனது சிநேகிதர்களுக்கும் உறவினர்களுக்கும் தெரியும். அதன்றி வேறொன்றையும் யோஜிக்கவில்லை. அங்கே யென்னுடைய பொறுப்பாயிருக்கலாம்தானே.

து — என்னுடைய புத்திக்குத் தோன்றினதைச் சொன்னேன். ஆனால் அவளின் எண்ணம் எப்படியோ?

துரை — நீலாக்ஷி டெல்லிக்கெஞ்சனுக்கு போகிறதென்று தீர்மானங்கொண்டிருந்தால் அங்கே அவளின் மனதைக்கவரக்கூடிய தொன்றிருக்கும்; அதுவென்னவென்று எனக்கு நீ தெரிந்து சொன்னால் நான் அதனிலும் மேலானதொரு நிலவரம் அவளுக்குக் கொடுக்கிறேன்: அப்படியானால் இங்கே வருவாளல்லவா?

து — ஆம்: அந்த விதமான நிலவரம் நீங்கள் கொடுக்கும் பக்ஷத்தில் நான் என்னால் கூடியமட்டும் அவளின் மனதைக்கரைக்க தெண்டிப்பேன்.

துரை — அப்படியானால் நீலாக்ஷியை அழைத்துக்கொண்டு நாளைக்கு வரமுடியுமா?

து — நாளைக்கு வருவேன்; ஆனால் நீலாக்ஷியை நாளைக்குக் கொண்டு வரமுடியுமென்று இப்போ சொல்ல முடியாது. ஏதோ இயன்றமட்டும் பார்ப்பேன்.

அடுத்த நாளும் சுமார் 7-மணியளவில் துரையப்பாவிடம் துளசி வந்து பின்னால் காணப்படும் விதம் வார்த்தை யாடினாள்:—

துரை — எப்படி? என்ன சமாசாரம்?

து — நீங்க சொன்னபடி யெல்லாம் சொன்னேன். அவள் டெல்லிக்கெஞ்சனுக்கு போக வேணுமென்றே நினைக்கிறாள்; என்னால் கூடியமட்டும் பார்த்தேன்; ஒன்றுக்கு மிணங்காமலிருக்கிறாள். ஆகையால் இரண்டு நாளைக்கு விட்டு, பின்பேசலாம் என்று யோசித்துக்

சொல்லி நிறுத்திவிட்டேன். (என்று துரையப்பாவின் முகக்குறிப்பை சற்றே கூர்மையாய் நோக்கினுள்)

துரை—(ஆச்சரியத்துடன்) நீலாக்ஷியை என்னுடன் இங்கே வைத்திருக்கும்படி நீ கேட்டாய்: அப்படியானுல் இருக்க விரும்பு வாளா?

ஆ—நான் அவளிடம் கேட்டபொழுது அவள் சொன்னதாவது "இவ்வளவு காலமும் என் காலத்தை வீணுய்க் கழித்து மனம் போன போக்கின்படி நடந்ததில் போலீசாரால் பிடிக்கப்பட்டும், ஸ்டேஷனில் அடைக்கப்பட்டும், மானமழிந்து, யாரும் துணையில்லாப் பாவியானேன். என் அம்மார்கள் என்னை விரும்பி வளர்ப்பதுபோல் என் தாயினும் எனக்கு உபகாரஞ் செய்தார்களா? அல்லது செய்வார்கள் என்று நான் காத்திருப்பேனு? பாலசுந்தரம் சொன்னதுபோல் நன்மார்க்கத்திலிறங்கி ஒரு 'பிச்சைக்காரனை'யாகுதல் கல்யாணஞ் செய்திருப்பேனேயன்றி, காமுகர் கையில் அகப்பட்டு இனியும் மோசமடைந்து இறப்பேன். இந்த சின்ன வயசுக்குள் நான் பட்ட பாடு போதும், அம்மா! உங்களை மன்றாட்டமாய்க் கேட்கிறேன்; இந்தப்பேச்சை இனி பென்னிடம் பேசாதேயுங்கள்" என்று என் கையைப் பிடித்து வணக்கமாய் கேட்டாள் ஆகையால் இரண்டு நாளைக்கு விடவேண்டுமென்று நிறுத்திவிட்டேன்.

துரையப்பா உண்மையில் ஒரு சற்குணன்; நீலாக்ஷியின் மனத் தீர்மானத்தையும் அவள் சொன்னவைகளின் ஆழமான கருத்தையும் யோசித்துவிட்டு பின்வருமாறு துளசிக்குச் சொன்னுர் :—

யோசித்துப்பார்க்குமிடத்து நீலாக்ஷி என்னில் விருப்பீனமுற்று அல்லது இன்னெருவரில் விருப்புற்று உன்னிடஞ்சொன்னவள்போலக் காணப்படவில்லை. அவள் சொன்னவை முழுவதுஞ் சரி. பிற்காலத்துக்கும் ஒரு துணை இருக்கவேண்டும் தானே. வாலிப வயதிருக்கும் வரையும் அட்டபடித்திரிந்தால் பின் என்ன செய்வாள்? ஆகையால், என் ஆயுள் உள்ளளவும் நான் நீலாக்ஷியை என்னுடன் வைத்துக்கொள்வேனென்றும், காப்பாற்றுவேனென்றும், உறுதிசெய்து

கொடுத்தால் ஏற்றுக்கொள்வாள் என்று எனக்குத் தோற்றுகிறது. ஆகையால் நீலாக்ஷியும் நீயும் இங்கே வாருங்கள்: அவளுடைய திருப்திப்படி எல்லாஞ்செய்து வைக்கிறேன்.

து—இந்த விதப்படி சொன்னால் ஏற்றுக் கொள்ளுவாள்; இருக்க:—பெரிய நாராயணஞ் செட்டியாரிடம 300வெள்ளி வாங்கி யிருந்தேன்; அவர் அந்தப்பணம் கேட்கும்படி வீட்டுக்கு வந்தார். அப்பொழுது நீலாக்ஷியைக் கண்டு விட்டார். அதன் பின் அது விஷயமாக நான் கொடுத்த நோட்டைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன் என்றும் நீலாக்ஷியை தன்வசமாக்கும்படியும் கேட்டார். (என்று தன் மயேந்திர சாலத்தைக் காட்டினாள்.)

துரை—செட்டியார் இனி அங்கேவரவேண்டாம்; (அவருடைய 300 வெள்ளியை நாளைக்குக் கொடுத்துவிடு; நாளைக்கு நீலாக்ஷியை யழைத்து வருகிறபொழுது 300 வெள்ளி நான் உன் கையில் கொடுக்கிறேன். (என்று ஆத்திரத்துடன் சொன்னார்.)

து—மகாபாக்கியம் (என்று மனதுக்குள் ஆனந்தமானாள். அத்துடன் துரையப்பாவிடம் விடை வாங்கிக்கொண்டு தனது இருப்பிடந்திரும்பினாள் "50 வெள்ளி போதும் என்ற எனக்கு 300 வெள்ளி! ஆம்: ஒரு பெரிய செல்வம்"

இவள் வந்தவுடன் நீலாக்ஷியும் இவளும் சந்தோஷமாயும் ஆனந்தமாயும் வார்த்தையாடினார்கள். இவர்கள் பேசியது மிகவும் இரகசியமானதால் எங்கள் செவிக்கெட்டவில்லை.

## 5-ம் அத்தியாயம்.

நீலாக்ஷியின் கேஸ் எப்படி முடியுமென்று பார்த்துப்போக வந்த துவிபாஷகர் இராசையாவை "மீ"க்கடையில் விட்டோம். அவரின் பாடெப்படி யென்று பார்ப்போம். அவர் மீக்கடையில் புகுந்தவுடன் ஒரு நாற்காலியிலமர்ந்து, தொப்பியைப் பிடுங்கிப் பக்கத்திலிருந்த மேஜையின்மேல் போட்டுவிட்டு, மிகவும் வாட்டமுகத்துடன் அங்கும் இங்கும் பார்த்துக்கொண்டிருந்தார். ஆனால் ஒன்றைக் குறித்தும் பார்த்தவரல்லர். துரையப்பா தன்னைக் கைப்பிடியாகப் பிடித்து இழுத்து கோர்ட்டின் பின் பக்கத்தில் விட்டு அவமானப்படு

த்தினைதயே திருப்பித் திருப்பி நினைந்தார். இதன்றியும் துளசியும் ருக்குமணியும் இவரை நாரையப்பா இறுத்துக்கொண்டுபோன பொழுது கண்ணுற்றாரென்றும், பெண்கள் யார் என்று தெரியாவிட்டாலும், பெண்கள் முன் தன்னை யொருவர் கேவலப் படுத்தினுரே யென்பதும் தாங்கக்கூடாத மனக் கவலையையும் வெட்கத்தையும் உண்டாக்கினது. ஆனதினால் துக்கேதமே அநேக மணித்தியாலமாயிருந்து விட்டார். அதன் பின் தான் கோலாலம்பூருக்கு வேலைமாற்றி வாங்கிக்கொண்டு போகவேண்டுமென்றும், அதன் பின் நாரையப்பாவின் கர்வத்தை அடக்க தனக்கு வழி தெரியுமென்றும் தீர்மானஞ் செய்தார். "இவன் இன்றைக்கு எனக்கு செய்த அவமரியாதைக்கு பழிவாங்காமல் விடேன்" என்று தனக்குள் தீர்மானஞ் செய்தார். அதன்மேல் "போய்" என்றார் சிப்பாயன் வந்து என்ன வேணும் என்று வினவினன்

இ— ஒரு மங்கு "மீப்".

சி—அதற்கு என்ன மாமிசம் கலக்கவேண்டும்?

இ—கோழியிருக்கா?

சி—ஆம் இருக்கு.

இ—பன்றி?

சி—ஆம்.

இ—அதுதான் எனக்கு விருப்பம்.

'மீப்' சாப்பிட்டுப் புறப்படும்பொழுது, கோலாலம்பூர் கோர்ட்டு துவிபாஷகரானஇராமச்சந்திரய்யர், கோர்ட்டிலிருந்து மத்தியானசாப் பாட்டுக்காக வீட்டுக்குத் திரும்பி வந்தார். அப்பொழுது இராசையாவைக்கண்டு தன் கிரஹத்துக்கு அழைத்துச் சென்றார். ஐயர் அதிகமாய் உபசாரஞ்செய்து சாப்பாடு செய்ய வேணுமென்று வேண்டினார். ஆனால் இராசையா மன்னிப்புச்சொல்லி மறுத்து விட்டார்.

இராமச்சந்திரனை இராசையா சினேகித்தது மூன்று வருஷத்துக் கொருமுறை நடக்கும் துவிபாஷக பரீக்ஷையிலன்று என்றே சொல்ல

வேண்டும். ஏனென்றால் இராசையாவின் தகப்பன் கோலாலம்பூரில் எக்ஸைஸ் கிளார்க்காக வேலைசெய்து எடுக்கும் சம்பளம் 35 வெள்ளி. இதில் இவனுடைய பெண்சாதிக்கும் இராசையனுக்கும் மாசம் 1க்கு 15 வெள்ளி அனுப்பி விடுவார். அதைக்கொண்டுதான் அந்த அம்மணியும் மகன் இராசையனும் காலம் கழிக்க நேரிட்டது. ஆனாலும் அப்பெண்ணின் பேருக்கு வருத்தமில்லை. பெண் வயது தமனுடைய இராசையால் காகிதம் எழுதினாலும் அதைத்து வருகிற தபாலை வாசிக்கவும், அவள் வீட்டுக்குத் தென்பாகத்திலுள்ள வையாபுரி சட்டம்பியார்தான் துணையாயிருந்தார். வையாபுரியின் நடை குணங்களைப்பற்றி சொல்லிலோ அதுவும் அவ்வளவு செவிக்கின்பமுள்ளதாய் இருக்காது. அவர் இற்றைக்கு—அதாவது சரித்திரம் நடந்த காலத்துக்குச் சற்றேற—பதினைந்து வருஷங்களுக்குமுன் கொடிகாமத்தில் மிஷன் பள்ளிக்கூடத்தில் முதல் உபாத்தியாயாயிருந்தவர். அக்காலத்தில் எலிசா நாகரெத்தினம் எனும் ஒரு விதவை "பைபிள் உமன்" என்ற பரிசுத்த நாமத்தோடு மிஷனுக்குத் தொண்டுசெய்து வந்தாள். அத்துடன் பெண் பிள்ளைகளுக்குத் தையலும் கற்பித்து வந்தாள். ஆனால் விதவையானாலும் இளம்பிராயமுள்ளவள். மா நிறமும், கூர்மையான முகமும், வெருண்டமான கண்களும், ஆடவரைக்கண்டால் ஓர் வித நடை அலங்காரமும், வட்டித்த ஸ்தனமும், துவண்ட இடையும், தளுக்கான மேனியும், தவறாத சிங்கார உடையும்,—ஆம், நாகரிகம் குறைந்தவளல்லள். இவள் அடிக்கடி பிரதம உபாத்தியாயர் வீட்டுக்கு அவர் மனைவியிடம் வருவதுண்டு. நாளிலும் பொழுதிலும் அவளுடன் பழகிவந்தமையால் வையாபுரி சட்டம்பியார் இடைக்கிடை நாகரத்தினத்துடன் சரஸமாய்ப் பேசுவதுண்டு. ஒருநாள் தனது பெண் வீட்டிலில்லாத நேரம் நாகரத்தினத்தை நோக்கி இன்று தொடங்கி உன்னை நான் நாகரத்தினம் என்று அழையாமல் "என்—ரத்தினம்" என்று அழைப்பேன் என்றாராம். இது கடந்து 7 மாசத்தால் பள்ளிக்கூடம் தெரிசிக்கவென்று தனது "தேவ ஊழியக்காரியும் அன்பார்ந்த நேசியுமான மிஸ்உவால்ஷ்" என்னும் லேடி யோடு வந்த மிஷினரி பாதிரியார் பைபிள் உமனாயிருந்த நாகரத்தினத்தைப் பார்த்துக் குடும்ப ஸ்திரீகள் பைபிள் உமன் வேலையிலிருப்பது

தனக்கு விருப்பமில்லை என்று சொல்ல, அப்பெண் தன்னில் குற்றமில்லை என்றும், பிரதமஉபாத்தியாயரின் கட்டளைப்படிதான் நடந்துகொண்டாள் என்றும், அப்படி நடக்காவிட்டால் கீழ்ப்படியவில்லையென்னுங் குற்றத்திற்கு ஜவாப்தாரியாயிருந்திருப்பாள் என்றும், ஆக்கிறுடைய குமாரத்திகளும் அக்காரணம்பற்றியே கர்ப்பவதியானர்களென்றும், இன்னும் பாதிரியாய் இருப்பவர்களில் சிலர் வருஷமொரு மகவைப் பெற்றுக்கொள்வதும் பைபிளின் கட்டளையேயென்றும் பேசினாள். இன்னும் தான் செய்ததில் குற்றமில்லையென்று ஸ்தாபிக்கமுடியுமென்றும், அப்படி பாவமென்று காணப்படின் தான் தேவகுமாரனிடஞ் சொல்லி மன்னிப்பு கேட்க ஆயத்தமுள்ளவளாய் இருக்கிறேனென்றும் பேச்சை முடித்தாள். மிஸ்உவாலிஷ் முன்பாய் இப்படி பேசக்கூடாதென்று சொன்னது, வையாபுரிசட்டம்பியாரையும் சாசனத்தையும் "கொடிகாமம்" பழுதாக்கிவிட்டதென்று பாதிரியார் நீக்கிவிட்டார். அப்பொழுது புறப்பட்ட சட்டம்பியார் இப்பொழுதும் வேலையில்லாமல் வீட்டோடேதானிருக்கிறார். ஆகையால் இராசையாவின் அன்னைக்கு வருகிற 15 வெள்ளியை இடைக்கிடை பெறுவதன்றி . இராசையாவின் பள்ளிக்கூடச் சம்பளம் இதனால் ஒழுங்காய் செலுத்தப்பட்டுவருகிறதில்லை. ஆகையால் இராசையா நாலாம் வகுப்பில் வாசிக்கிறபொழுதே சிங்கப்பூருக்கு அவர் அன்னை அனுப்பிவிட்டாள். எக்ஸிரு கிளார்க்கு ஆய் இருந்த இராமண்ணன் (இராசையாவின் தகப்பன்) இருபது வெள்ளியோடு காலம் விட இயலாமலிருக்கிறபொழுது, இவரை ஒரு சோற்றுக்கடையில் தங்கவைத்து பள்ளிக்கூடத்துக்கு வைத்தார். அதன்பின் கொஞ்சநாளானதும், டெல்லிக்கெந்சன் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் ஒரு துவிபாஷகரின் இடம் காலியாய் வந்தபொழுது தன்னுடைய துரையிடத்தில் ஒரு காகிதம் வாங்கி தன்னுடைய மகனையும் அழைத்துக்கொண்டு, டெல்லிக்கெந்சனுக்குச் சென்றார். அங்குள்ள நீதிஸ்தல அதிபதியைக்கண்டு, காகிதத்தைக் கொடுத்து, பக்கத்தில் நிற்கிறவன் தன்னுடைய மகனென்றும், காலியாயிருக்கிற துவிபாஷக உத்தியோகத்தில் . அவனை அமர்த்தி வைக்க வேண்டுமென்றும், அதற்காகவே கோலாலம்பூரிலிருந்து டெல்

விக்சஞ்சனுக்கு வந்தாரென்றும், "இந்த நாய் அப்பெரிய உதவியை ஒருக்காலும் மறக்கமாட்டாது" என்றும், மெலிந்து வேண்டினர்.

மாஜிஸ்டிரேட் காகிதத்தைப்பார்த்தும், இராயண்ணன் கெஞ்சினதினால் மனமிரங்கியும், இராசையனை தன் கோர்ட்டில் துவிபாஷகனாக நியமித்தார். ஆனால் 4th (form) பாரம் கல்வியோடு துவிபாஷக உத்தியோகஞ்செய்தல் இயலாத காரியம் என்பது யாவருமறிந்த விஷயம். ஆகையால் இராசையன் என்ன செய்வான்? வீட்டிலிருந்து தெரிந்தமட்டும் வாசித்துக்கொள்ள ஆரம்பித்தான். இவன் ஆபிசில் சேர்ந்து மூன்று வருஷத்துக்கு பின் பேரீக்ஷையில் பாஸ் பண்ணினால் தான் அந்த உத்தியோகத்திலிருக்கலாம்; அல்லாவிடின் "பழைய குருடி கதவைத்திறவடி" என்பது போலவும், பழையபடி வேதாளம் முருங்கமரம் ஏறிக்கொண்டது என்பது போலவும் முடியும்.

சோதனைக் கூடத்தில் பரீக்ஷைப் பத்திரத்தை பெற்றவுடன் இராசையா ஒன்றும் எழுதமுடியாமலிருக்கிறதையும், இடைக்கிடை கண்ணீர் விடுவதையும் கண்ட இராமச்சந்திர ஐயர், அழவேண்டாமென்று சொல்லி, தன்னால் கூடியமட்டும் சகாயஞ் செய்தார். ஒரு கடுதாசித் துண்டில் சில கேள்விகளுக்கு விடையெழுதிக் கொடுக்க, அதைப்பார்த்து இராசையா காப்பி பண்ணினன். சோதனை நடத்தும்படி வந்தவர் கரடு, வஞ்சனை, சூது தெரியாத சுத்த ஆத்மா. அன்றியும், கடுமையான சோதனையில் ஒருவரும் பாஸ்பண்ண மாட்டார்கள் என்று சற்றே இரக்கங் காட்டினர். இது இராசையா மாட்டில் யோகமாய் முடிந்தது. பரீக்ஷையில் "தேறினேன்" என்று இவர் சொன்னாலும் அப்படியே சத்தமிருந்தாலும் இவர் தொழுக்குச்செய்யும்பொழுது சிரிப்பாய் சிரிக்கக்கூடியதாய் பலமுறைகளிலும் தொழுக்குச்செய்திருக்கிறர். உதாரணமாய் "நான் ஒரு கைபார்த்துக் கொள்ளுவேனென்று" ஒருவன் சொல்ல இவன் அதை "I will see a hand" (நான் ஒரு கையை பார்ப்பேன்) என்று மொழிபெயர்த்தானும். இன்னும் ஒரு கேசில் ஏற்பட்ட வக்கீல் "Was there any

cork-screw on the table?" என்று ஒரு சாக்ஷிக்காரனை கேட்டபொழுது, இவன் மேஜையிலிருந்து சாவல் கூவினது? என்று தொனுக்கு (அர்த்தம்) செய்தானும். இன்னுமொரு தருணத்தில் ஒருவன் ஒரு தாயையும் இரண்டு குட்டிகளையும் காசாங் என்னும் பட்டணத்துக்கு அனுப்பும்படி ரெயில்வே பாரத்தை இவனிடங் கொடுத்து அதை எழுதித் தரும்படி கேட்க, அதில் one dog and two sons of a dog (ஒரு நாயும் இன்னும் ஒரு நாயின் இருபுத்திரர்களும்) என்று எழுதினதும் இதன்றியும் இன்னும் ஒரு தருணத்தில் ஒரு வலையக்காரன் தன் வீட்டிலிருந்த கொல்லையை இராவில் பன்றிக்கூட்டம் வந்து அழிவு செய்கிறதென்று சொல்ல இவன் அதை "Father, mother and children all came" என்று மொழிபெயர்த்ததும். சுருக்கிச் சொல்லின் இவனுடைய துவிபாஷைத் திறமை 'ஆலையில்லாவூருக்கு இலுப்பைப்பூ சர்க்கரை' என்ற விதந்தான். இவ்விதமானவனை ஏன் கோர்ட்டில் வைத்திருக்கிறார்கள் என்று ஒரு கேள்வி வரும். ஆனால் இவன் சிலவேளைகளில் கும்பகோணத்தையர் வேஷம்போட்டு கொண்டிருக்கிறதாலும் தன யஜமானனுக்கு பின்னின்று னைவொத்தும்பசு நானைப்பிடித்துக்கொண்டு அவரைவெழுத்திட அதைதொற்றி, அவரின் எளிமையான வேலைக்காரனுப் பதுங்கி நிற்கிறதாலும், அவர் வீட்டுக் குசினி கணக்கை இலவசமாய் வைத்துக் கொள்வதாலும் இவன் தேடிக தப்பிவிட்டான். அல்லாவிடின் சப்பாத்துகையோடிவந்தனவே வெளியேறியிருப்பான். பிற்கு: இராமசந்திர அய்யர் சாப்பாடுசெய்த பின்னர் இராசையாவுடன் சம்பாஷணை செய்தார். அப்பொழுது தனக்கும் தன்குடும்பத்துக்கும் கோலாலம்பூருக்கு வந்ததன்பின்னதான் தேகசௌக்கியமிருக்கென்றும், கோலாலம்பூரில் இன்னும் இரண்டு மூன்று வருஷத்துக்கு தான் இருக்க விருப்பமுள்ளவனாயிருக்கிறானென்றும் இராசையனுக்குத் தெரிவித்தார்.

இரா—நீங்கள் இப்பொழுது முதல் வகுப்பிலிருக்கிறபடியால் கோலாலம்பூரில் தேடிக இருக்கலாம் என்று நான் நினைக்கிறேன்.

இராம—முதல் வகுப்பிலிருந்தாலும் எந்த விடத்திற்கும் மாற்றிவிடலாம் என்று சர்க்குலர் கட்டளை யிருக்கிறதல்லவா?

இ—அந்த 'சர்குலர்' எப்பொழுது வந்தது? ஏறக்குறைய நாலு வருஷத்துக்கு முன் அப்படியொரு சர்குலர்வந்ததாக நானும்கேள்வி: உங்களுக்கு அதின் நம்பர் தெரியுமா?

இராம—97.

இ—எந்த வருஷம் என்று சொல்ல முடியுமா?

இராம—சுமார் 5 வருஷத்துக்குமுன் என்றே சொல்ல வேண்டும்; வருஷம் ஞாபகமில்லை.

இ—துவிபாஷகர்களுக்கு சம்பளம் உயர்த்த இன்னும் ஒரு "ஸ்கிம்" வருகிறதாக ஒருவதந்தி; மெய்தானா?

இராம—நானும் உங்களைப்போல கேள்விதான்: நிச்சயமாய் சொல்ல முடியாது. இதிருக்க; உங்கள்பேரில் லக்ஷ்மி என்றொரு பெண் எழுதிய பெட்டிஷன் எப்படி முடிந்தது?

இ—விசாரணைக்கு வந்த மாஜிஸ்டிரேட் விசாரணை செய்து டிஸ்றிக் ஆபீஸருக்கு அனுப்பியிருக்கார். அவர்கள் காண்பிடென்ஷியல் (இரகசியமானதென்று) கவரில் அனுப்பினார்கள். விபரம்தெரியாது: ஆனால் லக்ஷ்மி யெழுதினவைகளை பொய்யென்று மாஜிஸ்டிரேட் எழுதினார். அவ்வளவும் எனக்குத்தெரியும்.

இந்தளவில் இராமசந்திரய்யர் கோர்ட்டுக்கு போகும்படி புறப்பட்டார். இராசையன் பிரதமசெக்ரிடரி ஆபீஸ் 3-வது கிளார்க் வேலை பார்த்த யோனுதன் என்பவனைக் காணும்படி அங்குசென்றான்.

யோனுதனுடைய வீட்டின் முன்அறையின்மத்தியில் ஒரு பின்னல் துணியிடப்பட்ட வட்ட மேசையொன்றின்மேல், ஒரு பூச்செண்டு நின்றது. அந்த மேசையைச் சுற்றி அதேவித பின்னலினாலாய துணியிடப்பட்ட நாற்காலிகள் ஆறு இருந்தன. இன்னும் பக்கங்களில் இரண்டு பஞ்சணையடக்கிய சோபாக்களிருந்தன. சுவர்களில் 2 ஜதை மான் கொம்புகள் மரத்தினால் செய்யப்பட்ட மான் தலைகளில், வைக்கப்பட்டிருந்தன; யோனுதன் சுத்தோபதேசிக்க சபையத்துவ

னுகையால், ஒரு ஜெபப்பெட்டியும் அதற்குள் கன்னிமரியாளுக்கு புத்திரகலி தீர்த்து இன்னும் யாவராலும் தேவகுமாரன் என்று போற்றப்படும் இயேசு நபியின் சிலையும் இருந்தது. தவிர ஐரோப்பிய அரசர்களின் படமும், அரசிகளின் படமும் சுவர்களில் தொங்கின. நிலத்தில் ரத்னக்கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. கதவுவாயலில் பின்னலினலாய துணி இருபிரிவாய் கட்டப்பட்டு நடுவில் போக்குவரவுக்கு இடமும் விடப்பட்டிருந்தது. மேசைக்கு நேரே ஒரு தூங்கு தீபம்தொங்கினது.

யோனதன் செக்ரிடரி ஆபிசில் மூன்றாவது கிளார்க் என்று கூறினோம். அவனுடைய வேலை ஸராவ் கிளார்க். அதாவது கிளார்க், துவிபாஷகர் முதலியோரை தேவையான இடங்களுக்கு மாற்றல் செய்கிறதே. இந்த உத்தியோகம் சற்றே கௌரவமானது என்று சொல்லாமலறியப்படும். தருணம் வரும் சமயத்தில் தனக்கு விருப்பமானவரை நல்ல இடத்துக்கும், விருப்பமில்லாதவரை கெட்ட இடத்துக்கும் மாற்றிவிட இந்த ஸ்தானத்திலிருக்கும் உத்தியோகஸ்தரால் முடியும் தனது யஜமானனாகிய செக்ரிடரி ஒரு இடத்துக்கு ஒருவரை யனுப்பவேணுமென்று தெரிவிக்க, யோனதன் தன் மனதிலுள்ளவர்களின் பேரைக் கொடுத்து அவரை யனுப்பலாம் என்று முடித்துவிடுவான் இந்த நியாயம்பற்றி இடைக்கிடை இவனுக்கு 50, 100, இன்னும் மிப்படித்தொகை வருவது வழக்கம்.

இவனுடைய சம்பளம் 95 வெள்ளியாயினும் இவனுடைய செலவு மாசமொன்றுக்கு 150 வெள்ளிக்கு குறையாது. இவன் அப்படி செலவழித்தாலும், குச்சிகள் செலவான வெறுமையான தீப்பெட்டிகளை சேகரஞ்செய்து, தான் இருக்கிற டிராயிங் ரூம் என்னும் நடசாலையில் 12 அடி அகலமான சுவருடன் 10 அடி உயரத்துக்கு 8 அடி அகலத்தில்அடுக்கி வைத்திருந்தான். இதைப்பற்றி யாரேனும் வினவில் அவையும் ஒரு காலத்தில் தேவைப்படும். எறிந்துவிடுகிறதிலும் வைத்திருத்தல் கூடாதா? என்று பதில் சொல்லுவான். எந்தப்பொருளேயும் (விலையுள்ளதோ அல்லவோ) வழுவருஷ

த்துக்கு வைத்திருப்பின், அது பிரயோஜனப்படும் என ஆங்கிலத்தி யில் நான்வாசித்ததுண்டு. ஆகையால் இவைகளைநான்சேர்த்துவைக்கி ன்றேன்: இவைகள்முழுவதும் என்வீட்டில் சிலவுக்காகவாங்கினவை என்று பதில்கொடுப்பான். உண்மையில் இவனிடம் தங்களைமாற்ற வேண்டாம் அல்லது குறிக்கப்பட்ட இடத்துக்கு மாற்றவேண்டும் என்ற கேள்வியோடு இவன்வீட்டை தரிசித்தவர்கள், இவனுக்கு 50 அல்லது 100 வெள்ளி கொடுத்தாலும் இவன் அடுக்கிவைத்திருந்த வெற்றுத் தீப்பெட்டியிலிருந்து ஒரு பெரியபடிப்பைப் படித்துக்கொ ள்வார்கள். அதிலிருந்து பலமுறைகளிலும் "எங்கள் ஜீவியத்தில் வேண்டாம் என்று நாம் வெளியே வீசியவை திரும்பவும் எத்தனை தடவை எங்களுக்குத் தேவையாயிருக்கக் கண்டோம்? அப்படியி ருந்தும் ஒரு வஸ்துவையாகுதல் நாம் தேவையென்று காப்பாற்ற வில்லையே! ஒருவிதகட்டுப்பாடு, ஒழுங்கு, தீர்மானம்—யாதொன்றும் செய்யாமல் நாம் பாடுபட்டு உழைக்கிற பொருள் வாதுக்கும் சூதுக் கும் வம்புக்கும் பரத்தையர்க்கும் ஆகிய தீநானமார்க்கமாய் போக விட்டோமே! யோனுதன் வெற்றுத் தீப்பெட்டியைத்தானும் கைவி டாமல் வைத்திருந்ததைக்கண்டு "வேண்டுவார் வேண்டுவதை ஈவான் கண்டீர்" என்றதற்கிணங்க பொருள் வந்து சேரக்கூடிய ஸ்தானத் தில் ஆதிரக்ஷகன் வைத்தார். ஆகையினாலல்லவா நான் இப்பொ ழுது இவனுக்கு 100 வெள்ளி கொடுக்கும்படி இங்கே வந்து இவ னைக் காத்திருக்கிறேன். இந்த நூறுவெள்ளி அதிகமல்ல; ஆனால் இவன் பாடுபட்டுக் கவனத்துடன் சேகரித்த வெற்றுத்தீப்பெட்டி யிலிருந்து இன்றுகற்றுக்கொண்ட பாடம்இருக்கே; அது இந்த நூறு வெள்ளியிலும் பன்மடங்கதிகம். இன்று தொடங்கி நான் கண்டறியா தன கண்டேன்; தெரிந்துகொள்ளாதன தெரிந்து கொண்டேன். ஆம், இன்று தொடங்கி என்ஜீவியம் அரிநயோவென்று துவக்கம்" என்று யோனுதனுடைய வெற்றுத் தீப்பெட்டி அடுக்கினால் மனமா றுதல் கொண்டவர் அநேகர்.

இந்த விதமான யோனுதனிடம் இராசையா வந்து 'குட்மீனிங், மிஸ்டர் யோனுதன்' என்று வணக்க வந்தனம்செய்தார். இரா

ஷையன் போனதினை பார்த்த பொழுது கொஞ்சமார் சாயரக்ஷை 7 மணிக்கெல்லாம் போனதால் அப்பொழுது வழக்கமான ஜெபம் கன்னி மரியாளுக்கும் அவள் புத்திரனுகிய கிருஸ்துவுக்கும் சொல்லி டிராயிங்ரூமில் தானே ஒரு சாய்மானத்திலிருந்து அன்றைக்கு வந்த "மெயில் மெயில்" என்னும் பத்திரிகை வாசித்துக்கொண்டிருந்தான். இராஜையாவின் சொற்கள் காதில்விழ, தலையை நிமிர்த்தி வந்தவரை நோக்கி "குட் ஈவினிங்" என்று பதில் வணக்க உபசாரஞ் செய்து இராஜையாவை முன் அறியாதவனாகையால் "வந்த நோக்கமென்ன" என்று கேட்டான்?

இ—நான் டெல்லிக்கெஞ்சன் கோர்ட்டில் இருக்கின்ற துவிபாஷகர்.

யோ—மெல் இராஜையா? உட்காரும்.

இ—ஆம், அப்படியே.

யோ—(புன்னகையுடன்) இங்கே வந்த நோக்கம் ? லெட்சுமி யெழுதின பெட்டிஷனின் நோக்கமாகவா? (என்று நகைப்புடன் வினவினன்).

இ—ஆம், அது விஷயமாகவும் இன்னும் ஒரு சகாயம் வேண்டியும்.

யோ—அந்தப் பெட்டிஷனில் சொல்லியவைகளை உமது யஜமானுகிய மாஜிஸ்டிரேட் பொய்யென்று எழுதினலும், உம்முடைய டிஸ்டிரிக் ஆபிஸர் அது சொற்பனவில் உண்மையுள்ளதாக இருக்கிறதென்று யெழுதியிருந்தார்.

இ—டிஸ்டிரிக் ஆபிஸருக்கு என்னில் அதிக விருப்பமில்லை. ஆகையால் அப்படி எழுதியிருக்கிறார். உண்மையில் லெக்ஷிமி எழுதினவை முழுவதும் பிரளி.

யோ—நான் நீதிஸ்தல அதிபதியல்ல. அது பிரளியாயிருந்தாலுஞ்சரி; பிரளியாயில்லாமலிருந்தாலுஞ் சரி; எனக்கதிலென்ன

டிஸ்டிரிக்ட் ஆபீஸர் உம்மில் கொண்டிருக்கிற அபிப்பிராயத்தையே சொன்னேன்.

இ—வாஸ்தவமே; அதற்கு நான் என் அபிமானமும் கடமைப்பாணவுமான ஸ்துதி கூறுகிறேன். ஆனால், உண்மையில் லெட்சுமியை நான் வீட்டுக்கு வரும்படி செய்யவேண்டுமென்று யோசனைசெய்து, ஒரு ஆளை விட்டழைக்கும்படி சொல்லவுமில்லை: அல்லது அவள் என் வீட்டுக்கு எப்போவாவதுகள் வரவுமில்லை. அந்தப் பெட்டிஷன் யாரோ வேணுமென்று லக்ஷ்மியின் பேரைப் போட்டு அனுப்பினார். அதுவன்றி வேறல்ல. இது ஒரு புறமிருக்க, இப்பொழுது நான் வந்தநோக்கம் உம்முடைய தயவை வேண்டும்படிக்கே; நான் டெல்லிக்கெஞ்சனை விட்டு வேறு இடத்திற்குப் போக வேண்டும் என்று பிரதம செக்ரிடரி தீர்ப்புச்சொல்லின், என்னைக் கோலாலம்பூருக்கு மாற்றிவிடவேணும். அந்தஉதவியைவேண்டும்படிக்கே வந்தேன். அப்படிச் செய்யின் எப்பொழுதும் கடமையுள்ளவனாயிருப்பேன். அதுவுமன்றி என்னலானமட்டும் பதிலுபகாரியாயிருப்பேன். (என்றுஒரு 100 வெள்ளி நோட்டை மேஜையில் வைத்து யோனுதனை பெற்றுக் கொள்ளும்படி வேண்டினார்.)

யோனுதன்—இதை இப்போ நான் எடுக்கிறது சரியல்ல (என்று உபசாரத்துக்காக மறுத்தான்.)

இ—அப்படியல்ல: எனக்கு உதவி செய்யும்படி கேட்க வந்தேனே யொழிய இதைக் கொடுத்து உம்முடைய கடமையை வாங்க வரவில்லை. இது என் சந்தோஷக்கொடையேயன்றி அதற்காக கொடுத்தேனென்று சொல்லவேண்டாம். நினைக்கவும் வேண்டாம்.

யோ—மிகவும் சந்தோஷம் [என்று அந்த நோட்டை அங்கீகரித்தான்.]

இ—என்னை இங்கே மாற்றின் இங்கேஇருக்கிற இராமசந்திர அய்யரை என்ன செய்வீர்கள்?

யோனுதன்—அவருடன் நீர் உபதுவிபாஷகராக யிருக்கும்படியே விட யோஜிக்கிறேன்.

போனதன் இராஜையாவுடைய மனதுக்குள்ளிருப்பதை நன்றாயறிந்து கொண்டவனாகையால் இவரிடம் இன்னும் 0பவெள்ளி அப்பிச்சொள்ள வேண்டுமென்றே இவரை இராமச்சந்திரய்யரின் கீழ் விடுவேனென்று பயமுறுத்தினன். இந்த வார்த்தை இராஜையாவின் மூளையை கலக்கினது. ஆகையால் அவர்: —

என்னை இன்னுமொரு வருக்குக் கீழ் விடும்படி கேட்கவா இவ்வளவு தூரம் வந்தேன்? (என்று இஞ்சிதின்றகுரங்குபோல போனதனை யேறெடுத்துப் பார்த்தான்.)

போ—அப்படியானல் நான் என்ன செய்யவேணும்?

இ—இராமச்சந்திர ஐயரின் இடத்தை எனக்குத்தரும்படி கேட்கவே இங்கு வந்தேன்.

போ—இராம சந்திரன் ஆறு மாசத்துக்குமுன் என்னை வந்து பார்த்து மரியாதைசெய்து தன்னை ஒரு இடமும் மாற்ற வேண்டாம்என்று கேட்டுச் சென்றான். ஆகையால் அவனை மாற்றுகிறது சரியல்ல.

இ—இராமசந்திரனுக்கு கோலாலம்பூர் சீதனமா? அவன் கோலாலம்பூரில் இப்போ ஐந்தாறு வருஷமாயிருக்கிறானே.

போ—எப்படியென்றாலும் என்னிடம் கேட்டதற்கு வாக்களித்து விட்டேன். அதனல்தான் யோஜிக்கிறேன்.

இ—நீர் வாக்களித்தது ஆறு மாசத்துக்கு முன். ஆனல் இப்பொழுது வருகிற மாறுதலில் மாற்றுதல் செய்தால் அந்த வாக்கையளிக்காதல்லவா? அந்தவாக்கு நெடுக நிலைக்குமென்று இராமசந்திரனும் நினைத்திருக்க மாட்டான்!

போ—ஆனல் இராமசந்திரனும் சும்மாகேட்டவனல்ல: இதிலுள்ள துகையோடுதான் கேட்டவன், ஆகையால் அதை நினைக்கவேண்டாமா?

இ—அப்படியானால் இந்தத் துகையோடு இன்னும் அவ்வளவு தொகை வருமென்று காத்திருக்கும்படி நான் வாஸ்தவமாய் சொல்லுகிறேன் (என்று கரைந்த முரசு வெளிப்பட நகைத்தான்.)

யோ—நான் அதற்காக இராமசந்திரனுடைய கேள்வியைபற்றிச் சொன்னவனல்ல, இருக்கட்டும் இராமசந்திரனை மாற்றுகிறதானால் எங்கே மாற்றவேண்டுமென்று எனக்குத்தெரியவில்லை.

இ—டெல்லிக்கெஞ்சனுக்கே மாற்றிவிடலாமே.

யோ—அது "இரண்டாவது கிரேட்" (வகுப்பு) அல்லவா?

இ அதற்கென்ன? எவரையும் எங்கேயும் விடலாந்தானே?

யோ—அப்படி நானும் கேள்வி; அதைப்பற்றி நான் சர்குலரை பார்க்கவில்லை.

இ—சர்குலரின் நம்பர் 97 .5-வருஷத்துக்குமுன் வந்திருக்க வேணும்.

யோ—அப்படியானால் கூடியமட்டும் நீர் கேட்டபடி உதவி பண்ணுவேன்.

இ—அப்படியானால் டெல்லிக்கெஞ்சனிலிருந்து வந்தவுடன் எஞ்சிய வெள்ளி 100ம் கொடுத்துதான் உத்தியோகத்தி லமருவேன்.

யோ—மிகவும் சந்தோஷம்: ஏதாவது (டிரிங்க்) மதுபானம் எடுக்கிறதில்லையா?

இ இன்னும் இந்த வாயில் அந்தத் துளி பட்டிராது.

யோ—உண்மைதானு?

இ—இல்லையய்யா?

யோ—அப்படியானால் லெக்ஷிமி உம்மில் எழுதினது முழுக்க பொய்யென்று நான் நம்புகிறேன்.

ஐவாய் மிருகத்தின் வாயிலகப்பட்டு இவர்கள் சாண்வயிறு வளர்க்க வழியில்லாமல், தங்கள் அபிமானத்தை விற்க நீ பார்த்துக்கொண்டிருப்பது சரியோ? இதுமுறையோ? இதுதருமமோ? பக்ஷிஜாதிகளிலும் சில தன் ஜோடி பட்சியைத்தவிர இன்னொன்றை தீண்டாமலிருக்கே! உன்னுடைய ரூபம் பிரதிபிம்பிக்கும் மனுஷஉடம்பை எடுத்த பெண்கள், தங்கள் உடம்புகளை விற்று ஜீவியம் செய்யவா நீ படைத்தாய்? இது உனக்கு கேவலமில்லையா? உன் பக்கத்தில் வீற்றிருக்கும் உமையவளும் பார்த்துக்கொண்டிருக்கிறளே! இதனிலும் உன் படைத்தல் தொழிலை நிறுத்தி விடுதல் நன்மையல்லவா?

இவ்விதமான வீடொன்றில் இராசையா புகுந்தான். இவனுடைய பலவித செய்கைகளை கேள்வியுறும்பொழுது, எங்கள் மனதில் அநேகமாய் பின் வரும் பாக்கள் தோற்றி அவைகளைச் செய்த குருபாத தாசரின் அறிவு மிகவும் வியக்கற்பாலது என்றுறுத்துகின்றன.

பாக்கள்:—

கட்டியெருவிட்டுச் செழுந்தேனை வாக்கினுங்
காஞ்சிரங் கைப்பு விடுமோ
கழுதையைக் கட்டியே ஹோமம் வளர்க்கினுங்
கதிபெறுங் குதிரையாமோ
குட்டியரவுக்கு அமிர்தத்தே வளர்க்கினும்
கொடுவிட மலாதுதருமோ
குக்கனெடுவாலுக்கு மட்டையைக்கட்டினுங்
கோணுமலது நிமிருமோ
ஒட்டியேகுறுணிமையிட்டாலும் நயமிலா
யோனி கண்ணுகி விடுமோ
உலவுகன கற்பூரவாடை பலகட்டினும்
முள்ளியின் குணமாறுமோ
மட்டிகட் காயிரம் புத்தி சொன்னுலுமதின்
மார்க்க மரியாதை வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே.

குணமிலாத் துஷ்டமிருகங்களையு நயகுணங்
 கொண்டுட்படுத்திவிடலாம்
கொடியபல நோய்கள் யாவு மவுஷதமது
 கொடுத்துத் திருப்பிவிடலாம்
உணவிலாப் பிரமராக்ஷிகிமுதற் பேய்களை
 யுகந்து கூத்தாட்டிவிடலாம்
முபாயத்தினாற் பெரும் பறவைக்கு நற்புத்தி
 உண்டாக்கலா முயிர்பெறப்
பிணமதை யெழுப்பலா மக்கினி சுடாமற்
 பெரும்புனலெனச் செய்யலாம்
பிணியையு மகற்றலாங் காலதூதுவரையும்
 பின்புவருகென்று சொல்லலாம்
மணலையும் கயிராய் திரிக்கலாங் கயவர்குண
 மட்டும் திருப்பவசமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே.

சிங்கார வனமதிலுதிப்பினுங் காகமது
 தீஞ்சொல் புகல்குயிலாகுமோ
திரை யெறியு வாவியிற் பூத்தாலுமே கொட்டி
 செங்கஞ்ச மலராகுமோ
அங்கானகத்திற் பிறந்தாலு முயலான
 தானையின் கன்றாகுமோ
வாண்மையாகிய நல்லகுடியிற் பிறந்தாலு
 மசடர் பெரியோராவரோ
சங்காடு பாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
 சாலக்கிராமமாமோ
தடமேவு கடனீரிலே யுப்புவிளையினுஞ்
 சால சர்க்கரையாகுமோ
மங்காத செந்தமிழ் குறுமுனிக்குபதேசம்
 வைத்த மெஞ்ஞானமுதலே
மலையேறி விளையாடு குகனேபுல் வயனீடு
 மலைமேவு குமரேசனே.

—:0:—

## 6-ம் அத்தியாயம்.

வானத்தில் நக்ஷத்திரங்கள் அடர்ந்து பிரகாசித்திருக்க, களங்கமற்ற பிரவையோடு நிசாபதி பயங்கரமுண்டாக்கும் இருளை ஓட்டி, ஜீவ ஜந்துக்களுக்கு இன்பத்தை ஊட்டி, வானத்தில் நின்றனன். அவனின் குளிர்ந்த கிரணங்கள் ஜீவஜெந்துக்களை உற்சாகப்படுத்தி வெய்யவனாகிய ஆதித்தனாலுண்டான வதக்கத்தைத் தீர்த்து, மனதில் ஆனந்த சந்தோஷத்தை வருவித்தன. அப்பொழுது பட்டணவாசிகள் உல்லாச பவனியாய் ரோட்டில் சென்றுகொண்டிருக்கும் ஸ்திரீகளைப்பார்த்து மனங்குலைய, இன்னும் சிலர் அவர்களுள் பரநாரியரின் கிருகமடைய, பக்ஷிஜாதிகளும் மன்மதனுடைய பாணத்தினால் அடிபட்டு ஒன்றோடொன்று காதலிக்க, புஷ்பசெடிகள் குளிர்மையான சோமனை வாழ்த்தி ஆனந்திப்பது போல் புஷ்பங்களை விரிக்க, இன்னும் சிறுவர்கள் பகல் போல நிலா வெளிச்சத்தில் இன்னும் விளையாடி நகை கொட்டி இன்புற, டமன்சாரு ரோட்டில் ஒரு வங்களாவில் சாளாவழியாய், ஒரு வாலிபன் அடிக்கடி பார்த்துக்கொண்டு, வீட்டுக்குள் அதிக பிரவையோடு வெளிச்சப்பிரவாகத்தை கொடுக்கும் தற்கால நாகரீக சுவர் ஒட்டித்தீபத்தின்முன் அங்குமிங்கும் உலாவிக்கொண்டு, அடிக்கடி பிரான்சு தேசத்தில் இருந்து வந்த "கொக்நாக்" கைத்திறந்து கொஞ்சம் கொஞ்சமாய் "போட்டு"க்கொண்டு நின்றார். இவருடையவீட்டின் நாற்காலிகளும், மேசைகளும், அலமாரிகளும், வெளிச்சத்தில் பளிச்செனத் துலக்கி, லக்ஷணத்தையும், நாகரீகமான வாழ்வையுங், காட்டின. ஜன்னலில் தொங்கிய துணிகளுக்கிடையில் உட்பக்கத்தை பார்த்தவர்கள், அவ்வீட்டதிபனின் உன்னத ஜீவியத்தைப்பற்றிப்பேசுவதுண்டு. இவர்யாரெனில் சானிடரி இன்ஸ்பெக்டர் துரையப்பா. இப்படி நின்று உலாவிக்கொண்டு இருக்கும்பொழுது, இவர் மலாய் தேச சாற்மணிந்து ஓர் மெல்லிய துவாயல் மேலங்கத்தை போர்த்திருந்தார் : துவாபால் முகத்திலுண்டாகும் வேர்வையை இடைக்கிடை துடைத்துக்கொண்டும் நின்றார்.

அப்பொழுது இவர் வீட்டின் சுவரிலிருந்த கெடியாரம் நேரம் 11-மணியென்று சப்தமிட்டது. ஒரு ஐந்து நிமிஷத்தில் ஒரு ரிக்ஷா

வண்டி முடிக்கட்டினபடி வந்து இவர் வீட்டின்முன் நிற்க, அதற் குள்ளிருந்து இரு பெண்கள் இறங்கி இவர் வீடு சென்றார்கள். ஆனால் வந்தவர்களிலொருத்தி உள்செல்லாது வெளியிலே விறாந் தையில் மறைவாய் நாணத்துடன் நின்றாள். மற்றவள் உள்சென்றாள்.

துரையப்பா பார்த்தமாத்திரத்தில் என் ஆள் வரவில்லையோ? (என்று ஆத்திரத்துடன் கீழ்க்குரலில் கேட்டார்).

வந்தபெண்—வந்திருக்கு; ஆனால் அதுகேட்கிறதின்படி நீங்கள் வாக்கு கொடுத்தால் முடியும் (என்று அவசியமாகச் சொல்லி) வெளி யே நிற்கிறது. நீங்கள் போய் அழைத்து வாங்க.

துரை—(வெளியே வந்து பெண்ணின் கையைப் பிடித்து) என்? ஏதாவது மனஸ்தாபமுண்டா? ஏன் வெளியில் நிற்பான்? குனியாமல் என்னைப்பார்த்து மறுமொழி சொல்லு (என்று தன் வலக்கையால் அவளின் முகத்தை நிமிர்த்தினார்.)

பெண்—(கீழ்க்குரல்) எனக்கொரு மனஸ்தாபமுமில்லை. அப் படியிருந்தால் இங்கே ஏன் இப்பொழுது நிற்கிறேன் (என்று முகத் தை மறுபுறம் திருப்பினாள்.)

கூ—(இருவரையுங் கூட்டிவிடும் நோக்கத்தோடு) நீலாக்ஷி என்னிடஞ் சொன்னவைகளை நான் உங்களிடம் இதற்குமுன் சொல்ல தருணமில்லாமல் விட்டுவிட்டேன். நீலாட்சிக்கு தொந்திரவு நேரிட் டது முங்களுடைய கேள்விக்கிசைந்து இங்கே தங்கினதாலெ ன்பது உங்களுக்கும் தெரியும். இனி யாரையாவது கலியாணஞ் செய்து ஜீவியஞ்செய்துகொள்ளவேணுமென்று தீர்மானம் நீலாட்சிக் கிருக்கிறது. அந்தக்கேள்விக்கு நீங்கள் இசைந்தால் தான் இங்கே நிற்பேனென்றும் அல்லாவிடின் நாளைக்கு டெல்லிக்கெஞ்சனுக்கே போகிறேனென்றும் என்னிடம் தெரிவித்தாள்.

துரை—(யோசனையோடு)நான்நினைத்தவுடன் கல்யாணஞ்செய்ய முடியுமா; அன்றியும் கலியாணஞ்செய்கிறதானால் என் பந்துக்களின் சம்மதம் வேண்டாமா? நீலாக்ஷியை நான் கல்யாணம் செய்யவேணு

மென்று தீர்மானித்து அவர்களை வரும்படி கேட்டால் வருவார்களா? நீலாக்ஷி மனதில் கொண்ட தீர்மானத்தை குழப்பவேண்டாம். ஆனால் ஒன்றுமாத்திரம் சொல்லுகிறேன். என்னுயிருள்ளளவும் என் காயமுள்ளளவும் உன்னை நான் கைவிடேன். நீ எப்படி செல்வமாயிருந்தாயோ அப்படியே செல்வமாய் வைத்திருப்பேன்; இது சத்தியம். (என்று நீலாக்ஷியின் தலையில கைவைத்துஆணையிட்டார்)

து—உங்களுடைய பந்துக்கள் இவளை விட்டுவிடும்படி நெருக்கினால், சிநேகிதர்கள் புத்திசொல்லி விலக்கிவிடும்படி கேட்டால், நீங்கள் எப்படியென்றாலும் இணங்க வேண்டிவருமல்லவா?

துரை—நான் கலியாணஞ்செய்துகொள்ளுகிறதற்கும் பாதுகாவலாயிருப்பதற்கும் வித்தியாசமுண்டு. அது விஷயத்தில் என் சிநேகிதருக்காகுதல், பந்துக்களுக்காகுதல், பாத்தியங்கிடையாது. அவர்கள் சொன்னால் நான் கவனியேன்.

து—நீங்கள் மற்றவர்கள் போலல்ல, மகாஉத்தம புருஷன்: பரமயோக்யன்: ஆனாலும், நீங்கள் நீலாக்ஷியை கைவிடமாட்டீர்கள் என்பதற்கு அவளுக்குகொடுக்கும் அத்தாக்ஷியென்ன? இப்படி கேட்கிறாள் என்றுமனவருத்தம் வரக்கூடாது.

துரை—ஒருவருத்தமும் வராது: நியாயமான கேள்வி: எப்படியான உறுதி வேணுமென்று நீலாக்ஷியே சொல்லவேணும்.

நீலா—நீங்கள் சொன்னால் போதும்: நான் சொல்லவேண்டியதில்லை.

துரை—(துளசியைப்பாத்து) நீ தான் சொல்லிவிடு.

து—நீங்கள் இருவரும் ஒருவரிலொருவருள்ள பக்ஷத்தில் வெளியே சொல்லமாட்டீர்கள் ; நான் சொல்லிவிடுகிறேன். நீலாக்ஷியின் பேரில் ஒரு 1000 வெள்ளி செட்டிவீட்டிலிருக்கவிட்டிருங்க: ஏதாவது நகை பண்ணிப்போடுகிறதும், துணிமணி வாங்கிக்கொடுக்கிறதும் உங்களைப் பொறுத்தது.

துரை—அவ்வளவு நான் இப்பவும் செய்து வைக்க ஆயத்தம்; நீ கேட்ட கேள்வி என்னை மிகவும் சந்தோஷமாக்கி விட்டது.

து—இங்கேதான் நீலாக்ஷியிருக்கிறதா? அல்லது எங்கள்வீட்டி லிருக்கிறதா?

துரை-[நீலாக்ஷியைப்பார்த்து] உன்னுடைய சம்மதம் எது வென்று சொல்லு.

நீ—எது உங்கள்சம்மதமோ அது எனக்குஞ் சம்மதந்தான்.

துரை—நீ துளசி வீட்டிலிருந்தால் என் சிநேகருக்கும் சுற்றத் தாருக்கும் வெளியாகாது.

நீ—அப்படி பயப்படுகிற ஆளுக்கு இதுவெல்லாம் ஏன்? [என்று முல்லையரும்பனைய பற்கள் தெரியும்படி புன்னகை செய் தாள்]

துரை—நான் உன் மனத்தையறியும்படி சொன்னேன். நீ இங் கேதான்இரு; நான் உன்னை யடிக்கடி பார்க்கவேணும்; இந்த சந்திரவ தன விம்பம் எனக்குமுன் பிரகாசம் செய்ய நான்பார்க்கிறது [என்று சரசமான வார்த்தையுடன் நீலாட்சியின் கையைப்பிடித்து] நெடுக நிற்க கால்வலிக்கும்: கட்டிலிலிருந்து பேசுவோம் [என்று உள்ளுக்கு வரும்படி இழுத்துச் சென்றார்.]

து—எப்படி யென்றாலும்உங்களுடைய சொல்லை நம்பிவந்தவள் அலைய விட்டுடாதேயுங்க: நானும் இருக்கிறேன் பார்த்துக்கொள்ள வேணும் [நீலாட்சியைப்பார்த்து] நான் போய் வரட்டுமா? அம்மா [என்று தன்கையாலவளை அணைத்தாள்.]

நீலாக்ஷி—[அன்பான வார்த்தையுடன்] போய் வாங்க: நாளை க்கு காலை வருகிறீங்களா?

து—ஆம்: வருகிறேன் [என்று துரையப்பாவிடமும் முன் பேசி யவெள்ளி 300ம் பெற்றுக்கொண்டு திரும்பினாள்.]

இது பூரணப்படுத்தினதற்கு துளசிக்குசம்பளம் வெள்ளி 300! இவளையனுப்பிவிட்டு நீலாக்ஷி துரையப்பாவுக்கு தான் தைபூசத்துக்கு வந்து நின்றதன் பின் நடந்த விஷயம்யாவும் ஒளிக்காமல் சொன்னாள். அவளின் கதையை கேட்கும் பொழுதே துரையப்பா கட்டிலிலிருந்து பேசுவோம் "என்று சுமார் அரைட்ஜன் தரம் சொல்லிவிட்டார். ஈற்றில் "கட்டில்கட்டில் ஏன் நிற்கிறீர்கள் சரி: அங்கே தான் வந்து விடுகிறேன்" என்று படுக்கையறை சென்றார்கள்.

*　　　*　　　*　　　*

அடுத்தநாள் சாயங்காலம் துளசி நீலாக்ஷியை பார்க்கும்படி வந்தாள். அவளுடன் நீலாக்ஷி தாங்கமுடியாத சிரிப்புடன் பின்வருமாறு சம்பாஷித்தாள்:—

துரையப்பா அவிடம் இல்லாததினால் இருவர்களும் மனக்கிலேசமின்றி பேச வசதியாயிருந்தது.

நீலாக்ஷி—(துளசியை நோக்கி) நீங்கள் நல்ல யோஜனையோடு 1000 வெள்ளி யென் பேருக்கு செட்டி வீட்டில் வட்டிக்கு போடவேணுமென்று சொன்னீங்க.

து—வாயால் சொன்னதை நம்பிக்கொண்டிருந்தால் போதுமா? செட்டிவீட்டில் சீக்கிரம் அந்தப்பணத்தைப் போடவேணும் என்று முயற்சிபண்ணிவிடு. ஆறின கஞ்சி பழங்கஞ்சி யென்பார்.

நீலாக்ஷி—இன்றைக்கு என்பேருக்கு ஆயிரமும் போட்டுரசீது கொண்டுவந்து கொடுப்பேன் என்று என் தலையில் கைவைத்து ஆணையிட்டார். நம்பலாம்: யோக்கியன்.

து—யோக்கியன் என்றது எனக்கும் தெரியும்: "ஆம்" என்று சொன்னால் பின் என்ன வந்தாலும் பிரளாத ஆள் என்றது நான் நன்றாயறிவேன். ஆகையால்தான் உறுதியானவாக்கு பெற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் அப்படி சொன்னேன்: எப்படியென்றாலும் நாள் போகமுன் வாங்கிவிடவேண்டும்.

நீலாக்ஷி—அவர் என்னில் வைத்திருக்கும் ஆசை சீக்கிரத்தில் மாறிவிடாது. இன்று காலை நாங்கள் இருவரும் நாற்காலியில் உட்

கார்ந்து கொண்டிருக்கும் பொழுது வேலைக்காரன் ஒரு தாம்பாளத்தில் சில சிற்றுண்டிகள் கொண்டுவந்து மேஜையின்மேல் வைத்தான். அப்பொழுது அவையில் சிலவற்றை எடுத்து என் வாயில் வைத்து ஊட்டினர். அதன்பின் தன்னுடைய மடியிலுட்காரும்படி என் கையைபிடித்திழுத்த பொழுது கொண்டை குலைந்தது. கூந்தலைப் பார்த்து இதை யெப்படி இவ்வளவு நீளமாய் வளர்த்தாய் (என்றார்.)

நான்—விசேஷமாய் ஒன்றும் பூசிவளர்க்க வில்லை: தானே வளர்ந்தது (என்றேன்).

து—இந்தக்கண்கள் கெண்டைமீனைப்பழிக்கும்படி பிரமன் உண்டாக்கினனா? (என்றார்).

நான்—பிரமனைக்கேட்டு வந்து பதில் சொல்லுகிறேன் (என்றேன்).

து—இப்படிச்சொன்ன பவள இதழுக்கு நன்கொடை இது தான் என்று முத்தமிட்டார். (அதன்பின்) இந்தப்பற்கள் இவ்வளவு சிறிதாயும் ஒரே உயரமாயும் அடுக்காயும் உன்னிடத்தில்தான் பார்த்தேன் (என்றார்).

நா—அவைகளும் அப்படியே உண்டானவை; நான் தச்சனிடம் போய் ஒரே மட்டமாய் செய்துவைக்கவில்லை (என்றேன்)

து—இந்த மூக்கு எள்ளுப்பூ விதமாய் எப்படி உண்டானது (என்றார்)

நான்—உண்டாக்கினவனைத்தான் கேட்கவேணும் (என்றேன்.)

து—இந்த உடம்பு பத்தரைமாத்துத் தங்கத்திலும் அதிக காந்தியுள்ளது (என்றார்).

நான்—அது அப்படியிருந்தால் நல்லது தானே (என்றேன்)

து—இந்த மார்பு இரண்டும் பொற்கிண்ணங்கள் (என்றார்)

நான்—இதென்ன நீங்கள் என்னைப் பரிகாசம் செய்கிறீர்கள். இதில் இருக்க விடமாட்டீர்கள்: நான் இதில் இருக்கமாட்டேன்: கெட்டகதையெல்லாம் சொல்லுகிறீர்கள் (என்று எழுந்தேன் )

து—(என் வலக்கையைப் பிடித்துக்கொண்டு) இதுவா செட்ட கதை? ஆதாமுக்கும் ஏவாளுக்கும் அறிவைக்கொடுத்தகதை: கடவுளுடைய கட்டளையை மீறி கனிபுசித்தகதை? நன்மை தீமையை தெரிவித்த கதை: சிதம்பரஞ்செட்டி உனக்கு 100 வெள்ளி எண்ணிவிட்ட கதை (என்றுசிரித்தார்)

சிதம்பரஞ்செட்டியின் பேர் காதில் விழுந்தவுடன், கிள்ளானில் நானிருந்த வீட்டுச் சாமான்களையும் உடுப்புப்பெட்டிகளையும் விற்க, அவனுக்கு அதிகாரமில்லையென்று கண்டுதுரையப்பாவுக்கு சொன்னேன்.

அவர் உடனே செட்டிக்கு ரிஜிஸ்டர் காகிதம் அனுப்பவேண்டுமென்றும், செட்டி இன்னும் கொஞ்சவெள்ளி கொண்டுவந்து கொடுப்பானென்றும் சொல்லி, ஒரு காகிதம் எழுதினார். அதில் பின்னால்காட்டப்பட்டவிதம் வாசகமெழுதப்பட்டது:—

வ. உ. சிதம்பரஞ்செட்டி, கிள்ளான்.

"இதனால் உமக்கு அறிவிப்பது யாதெனில், நீர் என்மீது பொய்பிராது கொண்டுவந்து, வாரண்டில் பிடித்து, என்னை போலீஸார் காவலில் வைத்து, என் வீட்டுச் சாமானகளையும், என் உடைகளாகிய பட்டு வஸ்திரங்களையும், கைப்பற்றி விற்று பணத்தை அபகரித்து, எனக்கு நஷ்டமும் மானக்குறைவும் மனச்சஞ்சலமும் உண்டாக்கின அநீதத்துக்கு, உம்மிடம் 5000 வெள்ளி கேட்கிறேன் என்றும் நீர் கொடுக்கவில்லையென்று ஆக்ஷேபணை செய்தால், கோர்ட்டார் மூலம் அற விடும்படி பிராது கொண்டு வருவேனென்றும், இக்காகிதம் அனுப்புகிற தேதி தொடங்கி ஒரு வாரம் வரையும் உம்முடையபதிலை பார்த்திருப்பேனென்றும், பதில் இல்லையாபக்ஷம் நான் செய்யவேண்டிய ஒழுங்குகள் யாவுஞ் செய்வேனென்று அறிவீராக."

என்று எழுதி என்னைக் கைசாத்திடும்படி கொடுத்தார். அதில் நான் வெங்கிடாஜல நடேச பத்தர் மகள் நீலாக்ஷி என்று, கை

யெழுதிட்டேன். அதன் பின் காகிதத்தை எடுத்து உறையிலிட்டு விலாசமெழுதி ரிஜிஸ்டர் செய்து அனுப்பும்படி கொண்டுபோய் விட்டார். எப்படி யென்றாலும் செட்டி வீட்டில் 1000வெள்ளி சீக்கிரத்தில் என் பேருக்கு போட்டு விடுவார் என்று நம்புகிறேன்.

து—அதிகம் இடம் கொடுத்து விடாதே; நான்போய் வருகிறேன். நாளைக்கு சாயரக்ஷை வருகிறேன். கொண்டைக்கு பூச்சூட்டி நல்ல லெக்ஷணமாயிரு. ஆளைக் கைதப்பவிட்டிடாதே? நானும் பிள்ளை குட்டி யில்லாதவள். என்னை உன்னுடைய தாய் என்று நினைத்துக்கொள்.

நீலாக்ஷி—(புன்னகையுடன்) உங்களுடைய மகன் சானிடரி போர்டில் 200வெள்ளி சம்பளம் எடுக்க, என்னை மகள் என்று சொல்லலாமா? (என்று குலுங்க நகைத்தாள்.)

து—அப்படி ஒருமகன் இருந்தபடியால்தானே இப்பொழுது நான் மருமகளைப்பார்க்க வந்திருக்கிறேன். (என்று இரண்டு கைகளையும் விரித்து தானும் நகை காட்டினாள்.)

நீ—[நகையுடன்] மருமகள் மகளாவதெப்படி?

து—ஏன் ஆகாது? [மறு] மகள். மறுவை விட்டு வாசித்தால் மகள் அல்லவா?

நீ—எப்படி யென்றாலும் நீங்க ரொம்ப சமத்தாக காரியம் முடித்துவிடக்கூடிய ஆசாமி தான். சுந்தரி இப்போ எங்கே? இங்கேவந்தால் தன் புருஷனை நான் பிடித்துக் கொண்டேனென்று சண்டை போடுவாளோ? [என்று சொல்லி இருவரும் ஆனந்தமாய் நகைத்தார்கள்.]

து—நீ சாமர்த்தியமுள்ளவளாகையால் சுந்தரியின் புருஷனைப் பிடித்துக்கொண்டாய். நல்லாயிருக்கடி அம்மா. நான் நாளைக்கு வருகிறேன். [என்று எழும்பினாள்.]

நீ—என்னுடைய கல்யாணத்துக்கு இது தான் தருவேன் [என்று ஒருடஜன் வாழைப்பழம் கொண்டுவந்து கொடுத்தாள்.]

துளசி அதை பெற்றுக்கொண்டு திரும்பினள். அடுத்தநாள் சாயரக்ஷை சுமார் 6-மணி யளவில் துளசிக்கு பதிலாக ருக்குமணி நீலாக்ஷியை பார்க்கும்படி நீலாக்ஷியிடஞ் சென்றிருந்தாள். துரைய ப்பா வழக்கமாக அந்த நேரம் அங்கு நிற்கமாட்டார் என்று இவளு க்கு தெரியும். ருக்குமணி வந்தவுடன் நீலாக்ஷி எழுந்து, அன்புடன் நகைசெய்து, கையாலணைத்து அழைத்து அறைக்குள்சென்று, ஆன ந்தம் கொண்டாடினள். அதன்பின் இரண்டுபேரும் பின்வருமாறு சம்பாஷித்தார்கள்:

ருக்குமணி—[புன்னகையுடன்] புதுப்பெண்ணுக்குமாப்பிள்ளை என்னென்ன கொடுத்தார்?

நீ—புதிதல்ல, பழையது தான்.

ருக்மணி—பழையது என்றாலும் இப்பொழுது புதிதுபோலத் தான் தோணுது. எப்படியென்றாலும் ஏதாகுதல் கொடுத்திருப் பார். நானறிந்தாலென்ன? சும்மா சொல்லு அக்கா!

நீ—இன்னும் ஒன்றும் முடியவில்லை. வாக்குப் பண்ணினபடி தானிருக்கு. செட்டி வீட்டில் இன்றைக்கு என் பேருக்கு 1000 வெ ள்ளி போட்டு ரசீது கொண்டுவந்து கொடுப்பேனென்று தன்னிஷ் டத்துக்கே சொன்னர். எப்படி முடியுமோ தெரியாது.

ரு—தானே அப்படி சொல்லியிருந்தால் நிச்சயமாய் அப்படி செய்வார். நம்பியிருக்கலாம், யோக்கியன்.

நீ—என்னுடைய எண்ணமும் அதுவே. என்னுடைய சேலை துணிகள் யாவும் செட்டி ஏலம்போட்டுவிட்டான் என்று நான் சொன் னேன். அப்பொழுது அவர் அதிக விசனத்தோடு "உனக்கு வந்த கஷ்டத்துக்கு நானே முதற்காரணம். துளசி உதவிகாரணம். ஆகை யால், உனக்கு வந்த நஷ்டத்தில் நான் ஒரு பாகம் பொறுத்துக் கொள்ளவேண்டும் என்றே என் மனதில் தோன்றினது. இதோ சேலைகள் கொண்டுவருகிறேன்" என்று இன்றுகாலைவெளியேசென்று நாலு சேலைகள் கொண்டுவந்தார்.

ரு—எங்கே இருக்கு? நான் பார்க்கட்டும்.

நீ—(அலமாரியைத்திறந்து நாலையும் எடுத்து) இவை அவ்வளவு நல்லவையல்ல. வீட்டுக்குக் கட்டலாம்.

ரு—இது இங்கே ஒவ்வொன்று இருபத்தைந்து வெள்ளி விற்கிறது அக்கா. இது கும்பகோணம், இது கோயம்புத்தூர், இது காஞ்சிபுரம், இது கொரநாடு.

நீ—வீட்டுக்குத்தான் கட்டலாம்.

ரு—இந்த சேலையைக் கட்டிக்கொண்டு சயனிக்க கட்டில் சின்னதாயிருக்கே? (என்று நகைத்தாள்).

நீ—அவளின் தோளில் ஒருதண்டை கொடுத்து, இது இரண்டு பேருக்கும் போதும். அப்படி போதாதென்றால் நீ இன்னொரு விசை வருகிறபொழுது, இன்னொன்று வைத்திருப்பேன் பாரடி (என்று) புன்னகையுடன் பதிலுரைத்தாள்.

ரு—போனவை எல்லாம் வரவேண்டுமென்ற பிரார்த்தனை செய்தேன். அது கைகூடும் என்று காண சந்தோஷமாயிருக்கு. நானும் சகோதரி இருக்கிறேனென்று கவனிப்பாயோ அல்லது—

நீ—நீதான் வீடு வாசலுள்ளவளாயிருக்கிறாய். அக்கா ளிருக்கிறாள் என்று கவனித்துக்கொள்—அதிகம் பேசிவிட்டாய்: கொஞ்சம் காப்பிசாப்பிட்டு அதன் பின் பேசுவோம் வாடி.

ரு—இப்போதான் காப்பி சாப்பிட்டு வந்தேன்: விசேஷமான காப்பி என்றால் சாப்பிடுவேன். [என்று சிரித்தாள்.]

நீ—ஆக்ஷேபணை யில்லாமல் விசேஷ காப்பி என்றே சொல்லுவாய்.

ரு—சரி: ஆகட்டும் [என்று இருவரும் துரைபப்பாவின் அலமாரியைத் திறந்து பிராஞ்சு தேசத்தார் அனுப்பிய 'போத்தில் காப்பியில்'' ஒவ்வொரு கிளாஸ் சாப்பிட்டார்கள்.]

ருக்மணி கொஞ்ச நேரத்தில் தன் வீடு திரும்பினாள். மீனாக்ஷி துரையப்பா வீடமர்ந்து ஒரு வாரஞ்சென்றது. சுக்கிரவாரமாதலால் வீட்டைப்பெருக்கி சாணமிடுவித்து, அலங்கார புனிதமாய்த் தோற்றவைத்து, ஸ்நானபானங்கள் முடித்து, துரையப்பாவுக்கு காப்பி முதலிய காலைப்பசி யாற்றினாள். அவரும் உத்திபோக வேலைக்குச் செல்ல, டிராயிங்ரூம் என்னும் நடசாலையில் ஓர் சார்மனைநாற்காலியில் சாய்ந் திருந்து கொண்டு, கூந்தலை உலரும்படி தொங்க விட்டு, கையில் அக்காலத்தில் கீர்த்திபெற்ற "திராவிட கோகிலம்" என்னும் தமிழ் பத்திரிகையைபிடித்து வாசித்துக் கொண்டிருந்தாள். அதில் பாலசுந்திரத்தினால் எழுதப்பட்ட கடிதம் ஒன்று இருந்தது. பாலசுந்தரம் என்ற பேர் கண்களில் தோற்றவே, ஆவலோடு பார்த்துபின் வருமாறு வாசித்தாள் :—

பெண்கள் கல்வி.

தற்காலத்தில் பெண்கள் கல்வி கற்க வேணுமா வேண்டாமா? என்று ஒரு பெரிய எழிற்சி எங்கள் தேசத்திலுண்டா யிருக்கிறது:- உண்டாயிருக்கிறதென்று நாம் சொல்லுகிற பொழுது இதற்குமுன் எங்கள் தேசத்தில் ஸ்திரீகள் கல்வி கற்கவில்லை யென்றதை குறிப்பிடு மாகையால், பண்டைக்கால வழக்கு என்ன என்பதையுந் தற்காலத்தில் தேவை என்ன என்பதையும் எம்மா லியன்ற மட்டும் இங்கே காட்டக் கோருகின்றோம்.

பண்டைகாலத்தில் பெண்கள் கல்விகற்றதுமன்றி பாண்டித்யம் அடைந்திருந்தார்களென்றும், இராஜாங்கபாரத்தைசுமந்து செவ்வனவே நடப்பித்தார்களென்றும், புருஷர்களுக்கு பலமுறைகளிலும் மதியூகிபோல் துணையாயிருந்தார்களென்றும், நாம் வாசித்ததுண்டு. துரோபதை, ஜானகி, தமயந்தி, கார்க்கி, சாவித்திரி முதலிய மகுடரத்தினங்கள் தங்கள் கலவித்திறமையினால் இந்தியாவுக்கு இன்னும் மங்காதபுகழை யுண்டாக்கியிருக்கிறார்கள் என்பது சிறுவரும் தெரிந்து கொண்ட உண்மை. இவர்கள் இடுக்கண்வந்தகாலத்தும்;

"இனமோரிடுக்கண் வந்துற்றாலும் வேங்கைதோல்
ஜீவனளவிற் கொடாது

திறமான பெரியோர் சரீரங்கள் போகினும்
    செப்புமுறை தவறிடார்கள்
வணமேறு கவரிமான்உயிர்போகுமளவும்தன்
    மயிரி னொன்றுங் கொடாது
வாராத வாபத்து வருகினுங் கற்புடைய
    மாது நிறை தவறி நடவாள்"

என்று கற்புவிடாமை யென்னும் விரதத்தையே பூண்டிருந்தார்கள். அக்காலத்தில் ஆன்ம லாபமும் மறுமைச் சுகமுமே கடைப்பிடியாக கைக்கொள்ளற்பாலதுஎன்று இந்தியமாதாவின் புத்திரர்களும் புத்திரிகளும் பின்பற்றுவதை கேள்வியுற்று, அயல் தேசத்திலிருந்த ஓநாய்களை நிகர்த்தஜாதிகள், தங்கள் தேசங்களினின்றும் இதுவே தருணமென்று சேனைகளை திரட்டி இந்தியாவிற்குள் புகுந்து,

குணமான கிளியருமை வளர்த்தவர்களே
யறிவர் கொடிய பூனை யறியுமோ
குலவு பெரியோரருமை நல்லோர்களேயறி
வர் கொடுமூடர் தாமறிவரோ.

என்றபடி, இந்தியர்களின் கோவில்களை பிடித்தும், கழஞ்சியங்களை யுடைத்தும், பெண்களை வலோர்க்காரித்தும், அதஞ்செய்தும், திரவியங்களை வண்டி வண்டியாய்க் கொண்டு சென்றார்கள். அன்றியும் இந்தியரின் பூர்விக நாகரீகத்தை யழிக்க வேண்டுமென்ற உட்கருத்துடன், எஞ்ஞான்றும் தேடற்கரிய சாஸ்திரங்களையும் அக்கினியின் வசம் ஒப்புவித்தார்கள். அதுமாத்திரமா? பெண்களின் கற்புக்கும் பங்கமுண்டாக்கினார்கள். அப்படியான அபாய நிலையிலும் இந்திய பெண்கள் தங்கள் விலை மதிக்கக் கூடாத ரத்தினமாகிய கற்பை காப்பாற்றுவதையே கடைப்பிடியாகக் கொண்டார்கள். அவ்விதமான தைரியம் படிப்பினால் உண்டானதே யன்றி வேறொன்றினாலல்ல. ஆகையால் தற்காலத்தில் பெண்கள் கல்வி கற்கவேண்டும். ஏனெனில், கல்வியால்தான் ஞானவொளியை விளக்கலாம். சிறுமை வரினும், ஆபத்து வரினும், உயிர் போகவேண்டிய சந்தர்ப்பங்கள்

வரினும், கல்வியே நீதி நெறியினின்றும் விலக விடாமல் காப்பாற்று கிறது. இன்னும் மண்ணுலகிலுள்ள வரையும் ஜீவியத்திற்கு வழி காட்டுவதும் ஞானமே யன்றி மௌடீகமல்ல. தற்காலத்தில் மேல தேசவாசிகள் லௌகீக உன்னத நிலையிலிருக்க வைத்ததும் அப்பால் அண்டைகளிலுள்ள தேசங்களை தங்களாணைக்குட்படுத்தி அத்தேச ங்களிலுள்ள திரவியங்களை தங்கள் தேசத்துக்கு அள்ளிச்செல்ல உதவியதும் கல்வியால் வளர்ந்த மூளையின் வலுவாலன்றி தேகபலத் தாலல்ல. ஜூலிய ஸீஸர் காலத்தில் மரவுரியுடைஅணிந்து, முகத்து க்கு கரும்புள்ளி செம்புள்ளி குத்துவதே நாகரீகமென்று முகங்க ளில் புள்ளி வைத்து, மலாய் தேசத்திலுள்ள கேஷனிஸ் போலவும், இலங்கையிலுள்ள வேடுவர்போலவும் இருந்த ஐரோப்பா, அமரிக்கா ஆதியாம் தேசங்கள் 20ம் நூற்றுண்டில் ருக்கு, யஜீர், சாமம், அதர் வணம் என்று சொல்லப்படுகின்ற வேதங்களை, இயேசு அவதரிக்க எத்தனையோ வருஷங்களுக்கு முன் எழுதிய இந்திய ஜாதியை சீர்தி ருந்தாத மடையர் என்றும், ஆகையால் அவர்களுக்கு தாம் நாகரீகம் பழக்க வேண்டும் என்றும், அச்சமின்றிச் சொல்லும்படி மனதைரி யங் கொடுத்தது, பணச்செருக்கும் கல்விசெருக்குமே யன்றி வேறொ ன்றல்ல. ஆகையால் கல்வி எவருக்கும் இன்றியமையாத ஒரு பெ ரும்பேறு. ஆகையால் பெண்கள் கல்வி கற்றல்வேண்டும். ஆனால் எப்படியான கலாசாலையில் கற்கவேண்டும்? என்பதை நாம் பிரதான மாய் கவனிக்கவேண்டியது.

தற்காலத்தில் மேலதேசவாசிகள் தங்கள் இராஜாங்கத்துக்குத் துணைக் கருவியாகவும், தங்கள் மதம் பரவச்செய்யும்நோக்கமாகவும், தங்கள் வியாபாரம் ஓங்கி விருத்திக்கக்கூடியதாகவும், உட்கருத்தை வைத்து பாடசாலைகளை எங்கள் தேசத்தில் உண்டு பண்ண, தேசா பிமான மில்லாதவர்கள் அவர்களின் வெளியன்பில் மயங்கித் தங்கள் குழந்தைகளை அப்பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பிவிடுகிறார்கள். இது வே தருணமென்று மேலதேசக்குருக்கள் அக்குழந்தைகளுக்கு உங் கள் "பெற்றோர்கள் மூடர்கள்: அவர்கள் கல்லை வணங்குகிறவர்கள்: அவர்கள் வணங்குகிற கல்லுக்கும் அதோயிருக்கிற கல்லுக்கும் வித்

நியாசமென்ன? ஒன்றுமில்லை. ஆகையால் நீ இதோ நிற்கிற கிறிஸ்துவ பிள்ளைகளைப் போல் வரத்தெண்டிக்கவேண்டும்" என்று உப்போதனைகளைச் செய்து விட நேரிடுகின்றது. அன்றியும் இவர்கள் பிள்ளைகளுக்கு தெரிவசெய்து கொடுத்த புஸ்தகங்களை பார்த்தாலோ அவை யின்னும் அடிப்படையிலென்ன விருக்கென்று தூரதிருஷ்டி கண்ணாடிபோல் கிட்ட இழுத்துக் காட்டுகின்றது. அதில் பிரதானமான பாடங்கள் ஐரோப்பாவில் எத்தனை மலைகள் எத்தனை நதிகள், எத்தனைதொழிற்சாலைகள், இங்கிலாந்தில் எத்தனை தீவுகளடங்கியிருக்கின்றன, அதற்குள்ளாகப்பட்டு அடிமையாயிருப்பவர்கள் எத்தனை கோடி: இன்னும் யோன்தாமாஸ் என்ற பையனும் லில்லிவிலெஸ் என்ற பெண்ணும் எப்படிச்சாப்பிச்சாப்பிட்டார்கள். ரெயிலில்எந்த வகுப்பில் பிரயாணஞ் செய்தார்கள், கட்டிலில் சயனித்தார்களோ கீழே தூங்கினார்களோ. பள்ளிக்கூடத்துக்கு செல்லும் பொழுது மோட்டார்கார் வண்டியா, குதிரைவண்டியா, சாப்பிட்டது பாலா அல்லது காபியா? இந்தப் புஸ்தகங்களில் தானும் கல்வியறிவு குவிந்துகிடக்கு. இவைகளை படிப்பிக்கத்தானும் அமிரிக்காவிலிருந்து கலைஞானிகள் வந்திருக்கிறார்கள். இப்படி கல்விக்கற்க மாசசம்பளம் ரூ 2 தொடங்கி, 5 அல்லது 6 வரையும் கட்டவேணுமாம். தவணை தப்பிவிட்டால் வட்டியுமாம். பலே! நல்லாயிருக்கு!

இத்துடன் பெண்பிள்ளைகளினுடைய உடுப்பை மாற்றவேண்டும் என்றும், பாவாடை தாவணியே நல்ல உடையென்றும், கையால் சாப்பிடக்கூடா தென்றும், கரண்டி முள்தான் பாவிக்கவேணுமென்றும் தோசை இட்டலி முதலியவை முரட்டுதீனியென்றும், தேங்காய் புண்ணாக்கினால் செய்த பிஸ்கோத்தே நலமென்றும், தயிர், மோர் கூடாதென்றும், டின்பால், காபி, தேயிலை, சொக்கோ முதலியவையே உடம்புக்கு நலம் என்றும் போதித்து 'வேட்டை வாழிக்குழவி காட்டிலிருந்த புழுவை யெடுத்துவந்து அதற்கு முன்னிருந்து அடிக்கடி இரைந்து தன்வசமாக்குதல்போல' இவர்களும் குழந்தைகளுக்கு முன்னின்று பலவித போதனையாலும் இரைச்சலாலும் இந்து மதத்தினின்றும் திருப்பிவிடுகிறார்கள். அதனால் பலமுறைகளிலும் பெண்களுக்கும் பெற்றோர்களுக்கும் பிரிவுண்டாகிவிடுகின்றது.

கல்யாணமானவுடன் பெண்கள், ஐரோப்பிய பெண்கள் போலத்தான் நடனஞ் செய்ய எண்ணங் கொள்ளுகிறார்கள். புருஷன் மன மாற்றுமையால் கருமாயுறும் இருவரும் ஒருநுகத்தில் கட்டப்பட்ட எருமையும் குதிரையும் போல் (ஒன்று அங்கிழுக்க, மற்றது இங்கிழுக்க,) சமுசாரம் என்னுங் கடலைத் தாண்ட இயலாமல் திமிங்கிலம் என்னும் வறுமையின் வாயிலகப்பட்டு, மன முடைந்து, உணர்வழிந்து, ஈற்றில் மானமுமழிந்து விடுகிறார்களே! என்ன பரிதாபம்! என்ன கேவலம்! என்ன மடமை!

இவ்விதமான கேடுகளை உணர்ந்து தங்கள் பெண்களுக்கு செவ்வனே கல்வி கற்பித்துவைக்கும்படி எம்மவர்கள் செய்த வழியோடு யாதுமுண்டா?

யோசித்தும் ஆராய்ந்தும் பார்க்குமளவில் நாம் ஒன்றையும் அறியவில்லை. ஆகையால் (1) எப்படி கல்வி கற்போம். (2) எவ்வித கலாசாலையில் கல்வி கற்பிப்போம். (3) எவ்வித புஸ்தகங்களை தெரிவோம். (4) என்னென்ன விஷயங்களை முக்கியமாய் நம்முடைய பெண்கள் அறியவேண்டுமென்று விரும்புவோம் என்றவையே நாம் இங்கே காட்ட உன்னி இதை யெழுதுகின்றோம்.

(1) கல்வி கற்பிப்பவராகிய ஆசிரியர் சன்மார்க்கராயிருத்தல் வேண்டும். சன்மார்க்கர் என்றால் கொலை களவு ஆதிய பஞ்சமா பாதகங்களை மாத்திரம் ஒழித்தவரல்லர். அழுக்காறு நீங்கினவராயும், தேசாபிமானம், மதாபிமானம், பாஷாபிமானம் முதலிய அபிமானம் நிறைந்தவராயும் இருக்கவேண்டும். மாணாக்கர்களுக்கு ஐரோப்பா, அமெரிக்கா, ஆதிய தேசங்கள் இக்காலத்தில் மகிமையடைந்திருத்தலின் இரகசியமென்ன வென்பதை பன்முறைகளிலும் காட்டிவைக்கக்கூடிய வராயிருத்தல் வேண்டும். ஜாதி வளர்ச்சிக்கு ஒற்றுமையே மூலவேராயிருப்பதால், யாவரும் ஒற்றுமையே குலதெய்வமாக வணங்கவேண்டும் என்பதைப் புகட்டவேண்டும். தற்காலத்தில் அதி உந்நத நிலைமை அடைந்திருக்கும் தேசங்களிலுள்ள நற்கொள்கைகளை நாங்களும் அனுபவத்தில் கொண்டுவரவேண்டுமென்று போதிக்

குமாசிரியராய் இருக்கவேண்டும். தன் வயிறு வளர்க்கும் நோக்கமாய்ப் பத்து அல்லது பதினைந்து ரூபாய் பெறுகிறதற்கு சட்டாம்பிள்ளையென்று திரிபவர்களைப் போன்றவர் ஒரு பொழுதாவது ஆசிரியர் ஸ்தானத்தில் அமரவிடக்கூடாது. மேலே காட்டப்பட்ட குணங்களடங்கிய ஆசிரியரை பாடசாலையில் வைப்பது அவைகளை நடத்தும் அபிமானிகளின் கடமை.

(2) எவ்வித பாடசாலைகளில் கல்வி கற்கவேண்டும்? இந்துக்களால் ஸ்தாபிக்கப்பட்ட கலாசாலைகளிலேயன்றி கிருஸ்துவரால் ஏற்பட்ட பாடசாலைகளில் பெண்களை ஒரு பொழுதாகிலும் கல்வி கற்கவிடக்கூடாது. தங்கள் மதாசாரத்தையும் சமய நூல்களையும் கற்குமுன், அன்னிய மதத்தை அவர்கள் கற்கவேண்டிய அவசியம் இல்லை. தங்கள் மதத்தின் இரகசியத்தையும் பெருமையையும் அறிந்த பின்னர், அவர்கள் எவ்வித மதத்தையும் அறியலாம். கிறிஸ்துவ பாடசாலை சிறுமிகளின் மனதை இளவயதிலேயே பழுதாக்கிவிடுகிறதாகையால் அப்பள்ளிக்கூடங்களினின்று விலக்கவேண்டும்.

(3) எவ்வித புஸ்தகங்களை எங்கள் பெண்கள் வாசிக்க வேண்டும்? நான் அறிந்த மட்டில் இக்காலத்தில் பாரதம், இராமாயணம் நைடதம், பெரியபுராணம் ஆதியாம் புஸ்தகங்களை இந்துக்கள் திருப்பித்திருப்பி வாசிக்கிறார்கள். பெண்களும் அதுவே கேட்கிறார்கள். பாரதம், இராமாயணம் பூர்விக காலத்து சண்டைகளையும், சண்டை செய்த போர்வீரர்களின் ஜீவியங்களையும், அவர்களின் பராக்கிரமத்தையும், அவர்களுக்கு பன்முறையும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி உபகாரம் செய்ததையும், சந்தேகமின்றி உணர்த்துகின்றன. அதனால் அதையே திருப்பித்திருப்பி வாசிப்பதில் பிரயோஜனமென்ன? ஒரு முறை வாசித்து அல்லது கேட்டால் போதாதா? ஊழியமுள்ளளவும், மதியமுள்ளளவும், இவ்வுலகமுள்ளளவும், பாரதம் இராமாயணம்தானா படிக்கவேணும்? ஆயுளுள்ளளவும், அமரபக்ஷம் ஆரம்பம் தொடங்கி பூர்வபக்ஷக் கடைசிவரையிலும், இராமாயணமும் பெரிய புராணமும் கேட்டால் உலகில் பெருத்துவிடலாமா? இப்படி நாமெழுதுகிறோமென்று சிலருக்கு கண் சிவக்கலாம். அவர்கள்

"எங்கள் பெரிய புராணத்திலும் குற்றஞ் சொல்லலாமா? ஆன்ம லாபத்திலும் எங்களுக்கு உலகில் பெரியது ஒன்று உளதா?" என்று கேட்கலாம். ஆனால் அதற்கு எங்களின் விடை யென்ன? மேற்குறிக்கப்பட்ட புஸ்தகங்களையே வாசித்து காலத்தை கழித்தல் மாத்திரம் கூடாது என்றே சொல்லுகிறோம். மற்றைய ஜாதிபோல் நாம் முன்னேறி வருவதற்கு தெரிந்து கொள்ளவேண்டியவை அநேகமுண்டு. தற்கால கேவலநிலையிலிருந்து நீங்க நாம் எடுத்துக் கொள்ளவேண்டிய முயற்சி அநேகமுண்டு, வறுமையை இவ்வூரிலிருந்து ஓட்டிவிட செய்யவேண்டியவை அநேகமுண்டு. எங்கள் ஜாதி அன்னியரின் ரப்பர் தோட்டத்தில் வேலைசெய்து அடியும் உதையும் வாங்க, பெண்கள் தங்களுக்கு அருமையான அபிமானத்தை இழந்தும் கஷ்டத்துடன் படுந் துன்பங்களை விலக்க செய்யும் கடமைகள் அநேகமுண்டு. எங்கள் ஜாதி முகத்தால் வியர்வைசிந்த செய்கைபண்ணிய நெல், பருத்தி, முதலான உணவுப் பொருள்களை அன்னியர்கள் தங்களுடைய தேசத்துக்குக் கொண்டு போக, எம்மவர் "பிச்சை போடுதாயே" என்று அவயவத்திலுள்ள எலும்புகள் யாவும் எண்ணப்படக்கூடிய கேவலமான நிலையை மாற்றும்படி நாம் யாவருந் திரண்டு செய்யக்கூடிய யுத்திகள் பல கோடி. யுண்டு, ஆகையால் எங்களுக்கு அவசியமான நூல்களை கற்றல் வேண்டும். மற்றைய ஜாதியாரின் பிரயோஜனமான நூல்களை மொழி பெயர்த்து எங்கள் பாடசாலைகளில் மாணவர்களுக்கு பயின்று வைக்க வேண்டும். என்? குழந்தை பருவத்தில்தானே மேற்குறிக்கப்பட்ட விஷயங்களை கற்று வளர்ந்து தேசாபிமானம் பூண்ட தாயானவள், தன் மகவுகளுக்கும் சிறு பிராயத்தில்தானே அச்சாதியை பெருப்பிக்கும் குணதிசயங்களை போதித்து, ஆண்மையையும் உக்கிரமான திட சிந்தையையும் பராக்கிரமத்தையும் உண்டாக்கிவிடுவாள். தன் ஜாதியும், தேசமுந்தான் தங்களின் கடவுளாயிருக்கவேண்டுமென்று தேச பக்தியை உண்டாக்கி விடுவாள். ஆகையால் ஒவ்வொருவருடைய வளர்ச்சியும் கீர்த்தியும் தாயினிடத்திலிருந்து புறப்படுகிறதென்றே சொல்லவேண்டும். உலகத்தில் தோன்றி என்றும் அழியாத கீர்த்தி பெற்றவர்களின் ஜீவிய சரித்திரத்தை நாம் வாசிக்கும் காலை

அவரவரிடம் தோன்றிய ஆண்மையும், வீரமும், அவரவர்களின் தாயிடமே யிருந்து வந்ததென்று சந்தேகமில்லாமல் சொல்லலாம். கல்வி கற்று வளர்ந்த பெண்ணானவள் தன் பர்த்தாவுக்கு உதவியா யிருக்கிறாள்: வாழ்விலும் தாழ்விலும் உதவி புரிந்து அவனின் முயற்சிக்கு துணையாய் இருப்பவளும் கற்றவளேயன்றி மற்றவளல்லவே. தான் கற்ற அறிவை தன் ஜீவியத்தில் பிரயோஜனப்படுத்தி நோய் பிணி அணுகாமல் வீட்டை புனிதமாய் வைத்திருப்பவள் கற்றவளேயன்றி மற்றவளல்லவே. தற்காலத்தில் பிரயோஜனமான நூல்களை பயின்று முன்னேறுவதை விட்டு பழைய சரித்திரங்களை மாத்திரம் கற்று காலம் கழித்தால், ஜீவியம் செய்ய வழி வந்து விடுமா? கல்வி யறிவை ஜீவியத்தில் பிரயோஜனப்படும்படி யல்லவா கற்றுக் கொள்ளவேண்டும். கமம் செய்கிறவன் தாவர சாஸ்திரங்களையும், கல்தச்சன் சிற்ப சாஸ்திரத்தையும், வைத்தியன் வைத்திய சாஸ்திரத்தையும், கற்றுக் கொள்ளுதல் அவசியமல்லவா? இவைகளை விட்டு நாய்போல் வேஷம் பூண்டு இராஜா போலவா நடிக்கிறது? தேவாரத்தை படித்துக்கொண்டு சிவன்கோவிலையா யிடிக்கிறது. தற்காலத்தில் சீரான கல்வி அதாவது தன்னுடைய முயற்சிக்கு தேவையில்லாத கல்வியைக் கற்று) அநேகர் தொழில் செய்கின்றதை நாம பார்க்கின்றோம் அப்படிச் செய்பவர்களுள் நூற்றுக்கு தொண்ணூற்றென்பது பேரும் நஷ்டமடையவும் காணுகின்றோம். அவ்வித நஷ்டத்தின் காரணம் என்ன? அதன் இரகசியம் என்ன என்று அறியவேண்டுமென்று நஷ்டமடைந்தவர்களில் யாராவது பிரயாசை எடுக்கிறார்களா? மற்றபக்ஷத்தில் யாவும் விதி யென்றே சொல்லி விடுவார். கடவுளின் சித்தமென்றே புகன்று விடுவார். யாதாமொரு தொழிலமுறைகளையும் விதிகளையும் அனுசரியாமல், பாலை உலக்கை யென்று கொண்டுவா சௌபீனங்கட்டிக் கொள்ளுகிறேனென்றுசொன்ன பித்தனைப்போல் நஷ்டமடைந்து, பின்விதியென்று யாவுமுணர்ந்த கலைஞ் ஞானிபோல் சொல்லிவிட்டு, தேசத்துக்கு பெரும் பாரமா யிருப்பவர்கள் எத்தனையாயிரம்? இவர்களை கடவுள் கெடுத்து விட்டாராம். இவர்கள் அனுகூல மடைந்து விட்டால் "நான் செய்தேன். நான் லக்ஷம் சம்பாதித்துவிட்டேன்" என்று

கர்வத்துடன் மோட்டார் வண்டியை விட்டு இறங்கவும் மாட்டார்கள். ஆனால் நஷ்ட மடைந்து விட்டாலோ "விதி கிழித்துவிட்டது என்று கடவுள் மேல் பழி சுமத்தி விடுவார்கள். அன்றியும் உருத்திராக்ஷம் கட்டி சாமியுமாய் விடுவார்கள்.

இந்த மடத்தனத்தை விட்டு தற்காலத்துக் கேற்றபடி கல்வியைக் கற்று முன் வர முயற்சிசெய்வது எக்காலம்? மறைய ஜாதி போல் முன்னேறி வருவதும், பழைய உன்னத நிலைமையடைவதும் எக்காலம்?

இங்காவலை வாசிக்கும் நண்பர்களே! இதை வாசித்துவிட்டுப் பராதீனமாய் இருந்துவிடாதீர்கள். உங்களால் ஆனமட்டும் இந்தியமாதாவானவளை இன்புறச்செய்யுங்கள். கலாசாலைகளைக்கட்டி அதில் சாஸ்திர ஆராய்ச்சியுடன் தேவையானவைகளை உண்டாக்க நிர்மாணியுங்கள். வருஷாவருஷம் வீண் செலவில் அழிந்துபோகிற பொருள் எத்தனை லக்ஷம்? திருவிளாப்பார்க்க ரெயில் வண்டிக்கு கொடுக்கிற பணம் எத்தனை லக்ஷம்? கலியாணத்துக்கு நாகசுரத்தில் தீரன் எவன் என்று பார்த்து அவனையழைப்பதில் 1000 அல்லது 2000 ம் செலவாகின்றது. சங்கீதத்தில் புகழ்பெற்ற தாசிகளை வரவழைப்பதில் செலவாகும் பணம் எத்தனை ஆயிரம்! இந்தப்பணங்களைத் திரட்டினால் எத்தனை உயர்தரக் கலாசாலை உண்டாக்கலாம்? நன்றாய் கவனியுங்கள், யோசியுங்கள், சிந்தியுங்கள், வெறுஞ்சத்தத்தில் என்னபுகழ் இருக்கு? காரியத்தில் கண்ணுயிருங்கள்.

——:0:——

## 7-ம் அத்தியாயம்.

நீலாக்ஷி துரையப்பா வீடமர்ந்து 2 வாரஞ்சென்றது. வ. உ. சிதம்பரம் செட்டிக்கு ரிஜிஸ்டர் நோட்டீசு அனுப்பி பன்னிரண்டு நாள் சென்றது. துரையப்பா வேலை ஸ்தானத்துக்கு சென்றதின் பின் இவள் ஸ்நானம் செய்து ஓர் நீலவர்ண ரவிக்கையும், ரோஸ் வர்ண சேலையும் அணிந்து படுக்கையறையிலிருந்த கண்ணாடி அலமாரியில் தன் ரூபத்தை அடிக்கடி பார்த்துச் சந்தோஷித்துக்கொண்டு

நின்றாள். அப்பொழுது முகம் செழிப்பு அடைந்திருக்கிறதென்று தனக்குள் நினைத்தாள். இப்படித் தன் ஜீவியகாலம் முழுவதும் இருப்பாளோ என்று தன்னையே கேட்டாள். நெடுக அப்படியிருந்து விட்டால்தான் பாக்கியவதிதான் என்றாள். ஆனால் தன் வாலிபமும் அழகும் நெடுக நிற்குமா என்று யோசிக்கவுடன் பாலசுந்தரம் சொன்ன சொற்கள் இவள் காதில் கேட்டனபோலிருந்தது. உடனே அவளின் சந்தோஷமான சிந்தை குழம்பினது; கலங்கினாள். "ஆம். ஏமாந்துவிடமாட்டேன். இனியுமா? வேலுப்பிள்ளையை நம்பி நகைகள் யாவையும் அடகு வைத்திருக்கிறதில்லவோ நான் ஊர் ஊராய்த் திரியநேரிட்டது. செட்டியும் கிறுக்கெடுக்க ஒரு சாட்டுக் கிடைத்தது. செட்டியென்று வருபவர்களுடைய காதுவறுத்துவிடுகிறேன். அந்த வடவா—என்வீட்டு சாமான்களை விற்று பணமெடுத்துவிட்டான். வீட்டுச சாமான்கள் 1000 வெள்ளி பெறுமே. சரி பார்ப்போம்? மொட்டையனுக்கு நல்ல பாடம் படிப்பித்து வைக்கிறேன்; கோட்டேறிவிட்டேன். அதுவுமெப்படியென்றறிந்து விட்டேன். என்னை பெண்ணாக வைத்திருக்கிறானிட்டு தருணம் பார்த்து கழுத்தைவெட்டவா வந்தான் வடுவா—சிதம்பரா! பார்த்துக் கொள்ளுகிறேன். ஐயாயிரம் வாங்குகிறேனா இல்லையா பார்ப்போம்,"

நீலாக்ஷி இப்படித்தனக்குள் தானே சொல்லிக்கொண்டிருக்கிற நேரத்தில் யாரோ கதவை தட்டின சத்தம் இவள் செவியில் கேட்டது. உடனே "யார் அது" என்று கேட்டுக்கொண்டே டிராயிங் ரூமுக்கு வந்தாள்.

"ஏன் அம்மா கதவைத்திறவுங்க" என்று வெளியே நின்று பதில் கிடைத்தது.

நீலாக்ஷி கதவைத் திறந்தாள் ஓ! யாரைக் கண்டாள்? வ. உ. சிதம்பரஞ்செட்டியே, கையில ஒருகோல்பாக் பிடித்துக்கொண்டு, திரிபுண்டரம் விழ திருநீறு சாத்தி சந்தனத்திலகமு மிட்டு, அங்கத்தை மூடி யொரு கமிசையும் அதன்மேல் ஒரு அங்கவஸ்திரமும் வழக்கம் போல் முழங்காலளவில் ஒரு மல்வேஷ்டியுமணிந்து, வந்து நின்றார்.

இவர் பெண்களென்றால் கண்ணைச் சொருக்கிப் பார்க்கும் இயல்புடையவர். வயசும் சென்றுவிட்டது. இவர் அப்பொழுது வந்த கிள்ளான் வண்டியால் வந்து, 9-45 மணிக்குத்தான் றெயிலால் இறங்கி, காகிதத்தில் கொடுக்கப்பட்ட விலாசத்தின்படி நீலாக்ஷி இருக்குமிடத்துக்கு யாதொரு விடமும் தங்காமல் வந்தவர். இவரைக் கண்டவுடன் நீலாக்ஷி பின்னுக்கு காலெடுத்துவைத்து உள் அறைக்கு பின்வாங்கினாள். செட்டியார் அறைக்குள்புகுந்து இருந்த நாற்காலி ஒன்றில் அமர்ந்தார். அமரும்பொழுது "இதுதான் நானுங்களுக்கு உபகாரஞ் செய்ததற்கு பலன்" என்றார்.

நீலாக்ஷி—எது?

செட்டி—நீங்களனுப்பிய ரிஜிஸ்டர் காகிதம்தான் [என்றார்]

நீ—அவசியமில்லாத விஷயத்தை பேச வந்திருந்தால் இப்பொழுதே போய்விடும்.

செ—நான் உபகாரஞ் செய்ததற்கு பலன் இதுதான். [என்றார்]

நீ—நீர் உபகாரஞ் செய்தேன் என்று சொல்லுகிறது எனக்கு விளங்கவில்லை. வேலுப்பிள்ளை என்னுடையநகைகளை உம்மிடம் ஈடுவைத்தார். நீர் பணத்தைக் கொடுத்தீர்: எனக்கென்ன உதவிசெய்தீர்?

செ—அந்த நகைகள் நான் கொடுத்த தொகை பெறமாட்டாது என்று கண்டும், உங்களுக்கு ஒரு உபகாரம் செய்யும்படிதானே ஒரே முறையில் 4000வெள்ளியை தூக்கிக்கொடுத்தேன்.

நீ—வேலுப்பிள்ளைக்கா அல்லது எனக்கா?

செ—உங்களிடம் கொடுக்காவிட்டாலும் உங்கள் புருஷன் என்று நினைத்து நன்மை செய்யும் பொருட்டுத்தானே கொடுத்தேன்.

நீ—நன்மை செய்ய நினைத்த நீர் வேலுப்பிள்ளை துணுக்கனை பார்த்து வருகிறேனென்று கோலாலம்பூருக்கு போய்த் திரும்புகிறதற்

கிடையில், நகைகளையும் வீட்டுச் சாமான்களையும் உம்முடையபேரு
க்கு விற்று விட்டதாய் விலைக்கிரயபத்திரம் தரும்படி ஏன் கேட்டீர்?

செ—முதலாளி விடுவானா? நானும் ஒருவனுக்கு கணக்குக்கொ
டுக்கவேண்டுமே. ஆனபடியால்தான் கேட்டேன்.

நீ—முதலாளிக்கு கணக்குக் கொடுக்கும் மனுஷனானால் திரு
ம்ப எப்படி அந்த கேள்வியை மறந்தீர்? அதற் கிடையில் என்னைக்
கள்ளி யாக்கிவிட்டீரல்லவா? போலீசாருக்கு ஒளிந்து திரியும்படி வை
த்தாயல்லவா? ஒருநாளாகுதல் பெண்ணாயிருந்தாள் என்றதை ஒரு
நிமிஷமேனும் எண்ணாமல் விட்டு விட்டாயே.

செ—ஆமா! சுமார் 3000-வெள்ளியும் வட்டியும் வருமதியிருக்க
நான் எப்படி நகைகளையும் இழந்து இருப்பேன்?

நீ—என்னைப் பெண் வைத்திருந்ததற்கு நீ என்னகொடுத்தாய்?
உன்னுடைய எண்ணத்தில் நகைகளையும் அப்பிக்கொண்டு செலவில்
லாமல் பெண் வைத்திருக்க எண்ணி விட்டாய். உன் ஜாதிப்புத்தி
யது இருக்க: இப்பொழுது இங்கே யேன் வந்தாய்.

செ அம்மா கோபிக்கிறதில் என்ன சுகம்? போனதெல்லாம்
போகட்டும். இப்பொழுது என்ன பண்ணச் சொல்லுகிறீர்கள்?

நீ—என்ன பண்ணுகிறது? என்னுடைய வீட்டுச் சாமான்களை
விற்க உமக்கென்ன உருத்திருந்தது? என்னுடைய அருமையான
பட்டுச்சேலைகளை எங்கே கொண்டுபோய் விற்றீர்? எவ்வளவு அருமை
யான செப்புக்குடம், அடுக்குச்சட்டி, லோட்டா, செம்பு, வெற்றிலைத்
தட்டம், இரும்புகட்டில், கண்ணாடி அலமாரி, கண்ணாடி மேஜை,
ரவுண்டுமேஜை, கப்போட், நாற்காலி, தூக்குவிளக்கு, குத்து
விளக்கு, அன்னவிளக்கு, மயில்விளக்கு, நிலத்துக் கம்பளம், சந்
தனக்கும்பா, பன்னீர்செம்பு, இவைகள் எல்லாம் வாங்கி வைத்
திருந்தேனே. என் வயிறு பற்றி யெரிகிறது! எல்லாவற்றையும்
விற்று பணமாக்கிக்கொண்டாய்! உன்னைப்போல் போக்கிரிப் பயலை
நான் இன்னும் பார்க்கவில்லை. உன் ஜாதிக்கு பணம்தான் கடவுள்.

மனுஷருடன் சிநேகம் செய்கிற பொழுதே அவர்களை ஊரைவிட்டு ஓட்டத்தான் யோஜனை செய்வீர்கள். அவர்களின் பொருள் எல்லாம் அபகரிக்கும் வரைக்கும்தான் சிநேகம். அதன்பின் வெற்றிலைப் பெட்டியையும் எடுத்து மறைத்து வைத்துக்கொள்ளும் படுபாவி கள். நீங்கள் தருமஞ் செய்கிறோமென்றும், கோயிலுக்கு சிலவு செய் கிறோமென்றும் கூத்தாடுவது, வெறும் பகடம்; தயைதாக்ஷிண்யம் இல்லாதவனுக்கு தெய்வபக்தியு முண்டோ? அவனுக்குத் திருநீற் றுப் பூச்சுமோ? அவனுக்கு சந்தனப்பொட்டுமோ? இப்பொழுது 5000 வெள்ளி நீ கொடுக்க வேண்டும். என்னைக் கள்ளியென்று சொல்லி எவ்வளவு கஷ்டம் கொடுத்தாய் படுபாவி! கோர்ட்டிலும் விட்டாய்! எத்தனை வீடெல்லாம் ஒளிக்கவைத்தாய்! உன்னைச் சபமாவிட்டேன். யாதாம் ஒரு அட்டி சொல்லாமல் ஐயாயிரம் வெள்ளி கொடுத்தாலாச்சு; இல்லாவிடில் வாங்குகிறபடி வாங்குவேன்.

செ—அம்மா எனக்கு வரவேண்டிய பணத்தை யெடுக்கும்படி தானே விற்று எடுத்தேன்.

நீ—என்? உனக்கு நான் நோட்டெழுதிக் கொடுத்திருக்கிறேனா? அல்லது உன்னிடத்தில் பணம் வாங்கினேனா? அல்லது பிணை நின் றேனா? என்னுடைய சாமான்களுக்கும் உனக்கும் வேலுப்பிள்ளை யினுடைய கடனுக்கும் என்ன தொடர் இருந்தது?

செ—வேலுப்பிள்ளையினுடைய சாமான்கள் என்று விற்றேன்.

நீ—ஆனபடியால் நஷ்டத்தை கொடுக்க வேண்டியதுதானே. வீண் கதை என்?

செ—அம்மா தயவு செய்யவேண்டும்.

நீ—சரி, எழுந்து இப்பொழுதுதானே ஓடிப்போம் : வேறுபேச் சில்லை.

செ—முன் நகைகளைக் கொடுத்து 3000 வெள்ளி நஷ்டங்கொ டுத்தேன். பின்னும் நூறு வெள்ளி அபராதமிறுத்தேன். இன்னும்

என்னில் கேசு கொண்டுவந்து துன்பப்படுத்துகிறேன் என்று தெரிவிக்கிறீர்கள். இது சரியல்ல.

நீ—செட்டியாரே நீர் உம்முடைய வெள்ளியை பத்திரப்படுத்தும். நான் எனக்கு நீர் செய்த நஷ்டத்தை வாங்கிக்கொள்வேன். என் முன்பாய் நிற்கவேண்டாம்: வெளியில் போய்விடும (என்றுவாசலுக்கு கையைக்காட்டி "போ" என்று நின்றாள்).

செட்டியார் உடனேஎழுந்து, நீலாக்ஷிக்கு கிட்டவந்து, தலைவணங்கி, "அம்மா நான் செய்த குற்றத்தை மன்னித்துக்கொள்ளுங்கள், மெத்தவும் பணிந்து கேட்கிறேன். என்னை ஹிம்சைப் படுத்தவேண்டாம்" என்று மெலிந்தார்.

செட்டியாரின் முகத்தைப் பார்த்தாள்: அதிக சேவலமாய்த் தோற்றினது. மெத்தவும் கெஞ்சினார். நீலாக்ஷிக்கு உண்மையில் கோபம் மாறி, இரக்கம் வந்துவிட்டது. எப்படியென்றாலும் பெண்ணல்லவா? அதன்பின் நீலாக்ஷி: "சரி ஐயாயிரம் வெள்ளியில் அரைதம்படியேனும் குறையாமல் வாங்குவேன் என்று எண்ணியிருந்தேன். ஆனால் நீர் மிகவும் கெஞ்சுகிறபடியால் என்னுடைய வீட்டுச் சாமான்களுக்கு விலைபோட்டு 1000 வெள்ளியும், எனக்கு தொந்திரவு உண்டாக்கினதற்கும், அவமானப் படுத்தினதற்கும், 1000 வெள்ளியும் கொடுக்கவேண்டும். இதில் ஒருதம்பிடியேனும் குறையேன் என்று திட்டமாய்ச் சொல்லிவிட்டாள்.

செட்டியார் கூடியமட்டும் வேண்டிக் கேட்டார். பயனென்ன? ஈற்றில், தன்னுடைய தோல்பாக்கை திறந்து 100 வெள்ளி நோட்டில் 18 கோட்டை பெருமூச்சோடு எண்ணிவிட்டு, "நான் சத்தியமாய் இனி ஒருபைசாவும்கூட தரமாட்டேன்" என்று பாக்கை மூடிவிட்டார். அத்துடன் நீலாக்ஷி யனுப்பிய ரிஜிஸ்டர் காகிதத்தை யெடுத்து "இதில் பணம் பெற்றுக்கொண்டே னென்று எழுதி, கைபெழுத்திடவேண்டும்" என்றார்.

நீலாக்ஷி அப்படியே யெழுதிக்கொடுத்தாள். அதை பெற்றுக் கொண்டு பிச்சைவேண்டாம் தாயே நாயைப்பிடி, என்றவிதம் புறப்

பட்டார். போகிறபொழுது "நான் பணங் கொடுத்ததை யாருக்கும் வெளிப்படுத்தவேண்டாம்" என்று நீலாக்ஷியிடம் கேட்டுக் கொண்டார். அவளுமப்படியே வாக்குக் கொடுத்தாள்.

துரையப்பா வேலை ஸ்தலத்திலிருந்து வந்தவுடன் அவரை அன்புடன் நோக்கி "சிதம்பரஞ்செட்டி இன்று காலை இங்கே வந்தான்" என்று நீலாக்ஷி தெரிவித்து ஆனந்தமாய்ச் சிரித்தாள்.

து—என்ன சொன்னான்? உன்னை வெட்கமில்லாமல் பார்த்தானா? பணங்கொண்டு வரவில்லையா?

நீ—தன்னிடம் பணங்கேட்டு இம்சைபடுத்துகிறது தர்மமல்லவாம். தான் எனக்கு செய்த உதவியை நான் மறந்து விட்டேனாம்.

து—நீ யென்ன பதில் கொடுத்தாய்?

நீ—"நீ யென்ன உதவிசெய்தாய் என்னைக்கள்ளியென்று பெயர் கட்டி வாரண்டு எடுத்ததை கருதுகிறாயா என்றேன்". அதற்குப்பதிலாக அந்தமொட்டைச்செட்டி "நீங்கள் உதவியற்று கிள்ளானுக்கு வந்தநேரத்தில் கண்டிராக்டு வேலைநடத்த பணம் கொடுத்து உதவியதை மறந்துவிடலாமா?" என்றான்.

நான்—அதிருக்க: 5000 வெள்ளி கொண்டுவந்தாயா இல்லையா? என்றேன்.

செட்டி—'அம்மா தருணத்தில் உதவிசெய்தவர்களின் மனதை கோதிக்க வைத்தால் கடவுளும் ஏற்றுக்கொள்ளார்' என்றான்.

நான்—'இருக்கட்டும் 5000 வெள்ளி உன்னிடம் வாங்கிற விதமாய் வாங்கிக் கொள்வேன்' என்றேன்.

செட்டி—'(500 வெள்ளி நோட்டை என் முன் வைத்து) உங்களை ரொம்பவேண்டிக் கேட்கிறேன்: என்னை இன்னும் கோர்ட்டுக்கு இழுத்து அவமானம் செய்யாதிங்க; என் முதலாளி யறிந்தால்

என்னைக் கடையிலிருந்துவிலக்கி விடுவான்; கொஞ்சம் தயவு செய்யுங்கள்; அப்பாவை நான் வந்து இன்னொருமுறை பார்க்கிறேன்' என்று மெலிந்தான்.

துரை—சரி. அவன் என்னிடம் வரட்டும். அப்பொழுது பார்த்துக் கொள்ளுகிறேன்.

நீ—செட்டியார் பணம் கொண்டுவந்தால் அம்பாளுக்கு அர்ச்சனை செய்வேனென்று மனதில் நினைத்திருந்தேன். எப்படியாகுதல் 500 வெள்ளி யாயினும் வந்து விட்டதல்லவா? ஆகையால் அம்பாளுக்கு அர்ச்சனைசெய்யவேணும். இன்றைக்கு சுக்கிரவாரம், போக விரும்புகிறேன். நீங்களும் வருகிறீர்களா?

து—நானும் நீயும் ஒருமித்துப் போனால் என் சிநேகர் காணவும் அதைப்பற்றி பேசவும்— நல்லாயில்லை.— ஏன்— நீ நான் போய் அர்ச்சனையைச் செய்துவா.

நீ—நான் தனியே போகட்டுமா?

து—ருக்குமணியையும் அழைத்துப் போகலாமே.

நீ—அப்படியானால் சரி.

து—செலவுக்கு வெள்ளி வேணுமென்றால் அலமாரியைத் திறந்து தேவையானதை எடுத்துக் கொண்டுபோ.

அன்று சாயங்காலம் ருக்மணி வீட்டில் நீலாக்ஷியும், ருக்குமணியும், துளசியும் பின்வருமாறு பேசிக்கொண்டிருந்தார்கள்.

நீ—கோவிலுக்கு போகவேணும். நேரம் செல்லுகிறது; பழனியப்பச்செட்டியை அழைத்து வரும்படி எத்தனை தரம் சொல்லிவிட்டேன்; போகிறேன் போகிறேனென்று இதிலே உட்கார்ந்திருக்கிறீர்களே (என்று துளசியைப் பார்த்து சொன்னாள்.)

து—அழைத்து வந்தால் செட்டிகொடுத்த வெள்ளியில் எனக்கும் பங்கு கொடுக்கிறாயோ.

நீ—நீங்கள் தாயா யிருக்கிற பொழுது பங்கேன்? என்னிட மிருந்தாலும் உங்களிட மிருந்தாலும் ஒன்று தானே.

து—உன்னிடத்திலிருக்கிறதும் என்னிடத்திலிருக்கிறதும் ஒன்றேயானால், என்பேருக்கே போட்டுவைத்து விடுகிறாயா?

நீ—ஒன்றாயிருக்கிறதானால் யார் பேரிலிருந்தாலுமென்ன? என் பேரில் தானிருக்கட்டும்.

து—அப்படியானால் பங்கு கொடு.

நீ—சரியம்மா,—பங்கு கொடுக்கலாம். செட்டியை அழைத்து வாங்க. இந்தப்பணத்தை அவனிடங் கொடுத்துவிட்டு இன்றைக்கு மாரியம்மா கோவிலுக்கு போக வேணும் என்று வந்தேன். நேரம்போக்குறீங்களே; ருக்குமணி! நீயும் என்னுடன் கோவிலுக்குவருகிறாயா?

ரு—ரிக்ஷாசிலவு, புஷ்பச்சிலவு, தாம்பூலச்சிலவு யாவும் நீ கொடுத்தால் நான் வரத்தடையில்லை.

நீ—என்னிடம் பாங்கி இருக்கென்றுதான் நீங்க நினைக்கிறீங்க சரி; நான் கொடுக்கிறேன் புறப்படு, ஜல்தி.

ரு—இன்னும் ஒரு பத்து வெள்ளி நான் சிலவழிக்கக் கொடுத்தால் இதோ புறப்படு வருகிறேன் (என்று நகைத்தாள்.)

நீ—ஆக பத்து வெள்ளிதான் வேணுமா?

ரு—இன்றைக்கு பத்துபோதும்.

நீ—(துளசியைப் பார்த்து) உங்களுக்கு ஒன்றும் வேண்டாமோ?

து—எனக்கு பங்குதான் வேணும்; அப்படியானால் இதோ ஒரு நொடியில் வருகிறேன் (என்று புறப்பட்டாள்.) அரைமணி நேரத்தில் கே. ஆர். எம் பழனியப்ப செட்டியாரும் துளசியும் வந்து சேர்ந்தார்கள். பழனியப்பசெட்டியார் பருமையில் ஒரு கொப்பறை யென்கலாம். நிறையில் ஒன்றரைடன் இருக்கும். 7வருஷத்துக்கு திறக்கப்படாம

யிருந்த கதவு திறக்கப்படின் எப்படிச் சத்தமிடுமோ, அப்படியே இவர் பேசும்பொழுது, அதைத்தொனைடைவீரிடும். இவர் வந்து நாற்காலியில் உட்கார்ந்தவுடன் புன்னகையோடு "நீங்கள் வந்த விஷயம் அம்மாள் சொல்லியிருப்பாங்க. நான் ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. இந்த வெள்ளியை ஏற்றுக்கொள்ளுங்க" என்று மீனாக்ஷி தான் கொண்டு வந்த வெள்ளி அவ்வளவையும் செட்டியின் முன் வைத்து எண்ணியெடுக்கும்படி கேட்டாள். எண்ணிக்கொண்டு 1800 என்றார்.

மீ—ஆம், சரி 2000 வெள்ளி தந்தேனென்று ஒரு ரசீது கொடுங்க; 200 க்கு அடைவு தருகிறேன் (என்றாள்)

செ—எங்களை நம்பக்கூடாதா ரசீது ஏன்? நாங்கள் ஒருவருக்கும் ரசீது கொடுக்கிற வழக்கம் கிடையாது.

மீ—உங்களை நம்பாமல் வேறு யாரை நம்புகிறது? ஆனால் நீங்கள் நிலை பிரியாத நிதார்த்தர்கள் என்றாலும், உங்கள் காயமும் அப்படியா? (என்றாள்.)

செ—அப்படி இருந்தாப்போல் ஓடிப்போகிறதற்கு சிவன் தொங்கிக்கொண்டிருக்கிறதா? நீங்க பயப்படவேண்டாம்.

மீ—நீங்க வாங்கிக்கொண்டபணத்துக்கு ரசீது கொடுக்க ஏன் பயங்கரப்படுவான்? ஒன்று கொடுத்துவிடுகிறதுதான் தொழில் முறை. அப்படியல்லவா?

செ—வேணுமென்றால் தருகிறேன்.

மீனாக்ஷி (ஒரு சிறு காப்பி புஸ்தகத்தை நீட்டி) இதில் யெழுதித் தந்தால் வைத்துக்கொள்ளுவேன்.

செட்டியார் அதைப்பெற்று 2000 வெள்ளி (அமானிதம்) வட்டிக்குபோட்டிருக்கு என்று எழுதி, கே. ஆர். எம். பழனியப்ப செட்டி என்று எழுதி கைபெழுத்து வைத்தார்.

மீ—வட்டி போட வேண்டாமா?

செட்டி—வட்டியுமா கேட்கிறீர்கள்? நல்லாதானிருக்கு!

நீ—2000 வெள்ளி வட்டியில்லாமல் யிருக்கிறதானல் எனக்கு சுகமென்ன?

செ—என்ன வட்டி. வேணும்?

நீ—½ வட்டியாகுதல் வேண்டாமா?

செ—சரி; வீச வட்டி போட்டுத் தருகிறேன்.

நீ—பாங்கில் 4 வட்டி கிடைக்குமே

செ—சரி; அரைக்கால் வட்டியை வாங்கிக்கொள்ளுகிறது தானே (என்று தாம்பூலம் போட்டுக்கொண்டு சென்றுவிட்டார்) போகுமுன் 200 வெள்ளிக்கும் ஒரு நகையை அடவாய்க் கொடுத்தாள். தான் கொடுத்த வெள்ளியைப்பற்றி யொருவருக்கும் பேசக் கூடாதென்றும் கேட்டுக்கொண்டாள். நீலாக்ஷி செட்டியாரை யனுப்பிவிட்டு ருக்மணிக்குத் தலைசீவி பின்னல் சடையிட்டுப் பூச்சூட்டினுள். ருக்மணியும் அவ்விதம் நீலாக்ஷிக்குச் சோடித்தாள். இருவரும் கோவிலுக்குச் சென்றார்கள். இவர்கள் அணிந்திருந்த சுகந்தங்கள் கோவிலிலிருந்தவர்களின் மூக்கைத் துளைத்துவிட்டன. வாலிபர்கள் யாவரும் தேவலோகமாதர் இருவர் வழிதப்பி வந்துவிட்டார்கள் என்று பிரமைகொண்டார்கள். சின்றவர் 10 செண்ட் (2 அணு) கொடுத்து அர்ச்சனை செய்தால் இவர்கள் ஒரு வெள்ளியை தட்டத்தில் சித்திரைப்பாவைபோல் வைத்தார்கள். கோவிலில் இவர்கள் யார் என்று யாவரும் வினவினர்?

ருக்மணியும் நீலாக்ஷியும் இதனுல் ஒவ்வொரு சுக்கிரவாரம் தோறும் மாரியம்மன் கோவிலுக்குப் போகிறதை கிரமப்படுத்தினுர்கள். ஒவ்வொரு கிழமைகளிலும் நீலாக்ஷி அணியும் சேலையும் ரவிக்கையும் விதவிதமாயிருந்தது விதம் விதம் பூச்சூடுவாள். இனி, சுகந்தங்களில் மருக்கொழுந்து அத்தர், தாழம்பூவத்தர், சந்தன அத்தர், மல்லிகை அத்தர், ரோஸ்வாட்டர், ஒடிக்கலன், பிரான்ஸ் வெள்ரோஸ், பாரிஸ்செண்ட், சாண்டல்வுட் பவுடர், செர்ரி பிளாஸம் பவுடர், யாவும் ஏராளமாய் உபயோகிப்பாள். உண்மையில் இவர் நிறகுபிடித்

தில் தென்றல் காற்று வீசும் சோற்பனளில் மனுஷசுபாபத்தை நாம் அறிந்த அறிவைக்கொண்டு எழுதின், இவளின் சந்திரோதய வதன விம்பத்தில் உருகாத நெஞ்சு அரிது. இவளின் புருவ வில்லி லிருந்து புறப்பட்ட விழி நோக்கு என்னும் ஐந்தருதபாணத்தால் துளைபடா மார்புடையோ யார்? இவளின் ரூபத்தைப்பார்த்து பிரமை கொள்ளாத வாலிபர்கோலாலம்பூரில் இல்லை. இவளின் மெலுக்கிலும் குலுக்கிலும், கலங்காத சிந்தை அபூர்வம். இவள் அழகிலும், நடை யிலும், உடையிலும், நிற்கின்ற நிலையிலும், மான பார்வையிலும், உருண்டு திரண்ட ஸ்தனங்களிலும் மனதைவிட்டு இவள் பின்னோடி யலைந்தவர்கள் சொஞ்சமல்ல. இதுபற்றியே "பாலசுந்தரத்தில்" இவள் பின்னோடி அலைந்தவர்கள் மலாய் நாட்டில் அநேகருண்டு என்று கூறினோம். இந்த ரூபத்தில் துரையப்பா மயங்கிவிட்டார் என்பது நூதனமல்ல.

ஆகையால் மாயப்பிசாசுஎன்னும் பெண்ணானது, ஒப்பற்ற ரூப த்துடன் வந்து இவரை பிடித்துக்கொண்டது. ஆகையால் ஒரு குதிரையும் வண்டியும் 1750வெள்ளிக்கு வாங்கி நீலாக்ஷியை திருப்தி செய்யும்படி வைத்திருந்தார். அதில் இருவரும் கிழமையில் மூன்று நாளைக்கு உல்லாசமாய் பட்டண வீதியால் உலாவி வருவார்கள். போகிறநேரம் அநேகமாய் இராத்திரி ஆனாலும் துரையப்பாவின் சிநேகரும் இன்னும் பலரும் "இவரும் நீலாக்ஷியின் வலையில் அகப்ப ட்டுவிட்டார்: இனி மனுஷனாக ஈடேறுவது கஷ்டம்" என்று தீர்த்து விட்டார்கள். நீலாக்ஷியின் அன்பே பெரிதாக எண்ணி, யாவையும் மறந்தார். சிநேகரையும் வெறுத்தார். தன் பெற்றோருடைய காகி தத்தையும் வாசியாமல் எறிந்தார். நீலாக்ஷியின் ரூபமே இவர் மனதில் குடிகொண்டது. உண்மையில் இதயத்தில் வைத்துக்கொண்டார்.

துரையப்பாவீட்டில் அதிக செல்வநிலையில் நீலாக்ஷி யமர்ந்திருக் கும் பொழுது, அவளில் துரையப்பா மிகவும் அன்பாயிருந்தார் என் றும், எப்படியான செலவுகள் அவளால் செலவழித்தாரென்றும் நீலாக்ஷி 1890ம் வருஷத்தில் தன் ஜெனனஇடமாகிய நாகப்பட்டிண த்தில் தூரத்து பந்துவாகிய சிவகாமியம்மாளுக்கு எழுதிய காகிதம்

காட்டும். அதில் தன் க்ஷேபலாபங்களை தெரிவித்து பின் தன் செல்வநிலையை விவரித்தாள். அப்பொழுது:—

நான் துரையப்பா வீட்டி லமர்ந்து வருஷ மொன்றரையாகிறது. இதற்கிடையில் 16 பட்டுச்சேலைகளும் ரவுக்கைகளும் சுமார் 7:0 வெள்ளி விலைமதிக்கக்கூடியதாய் எனக்கு என் காதலன் வரவழைத்துக் கொடுத்தார். நான் வீட்டு சாமான்கள் போதாதென்று சொன்னதற்கிணங்க, சருவக்குடம், குத்துவிளக்கு, சருவச்சட்டி, வெற்றிலை தட்டம், அலமாரிஸ் உவாட்ரோப் ரவுண்மேஜை, ஆடுநாற்காலி, தூங்கு தீபம், சுவர்விளக்கு, ஆகிய யாவும் வரவழைத்தார். நான் சூடும்படி ஒரு பூவாணிச்சியிடம் மாசம் நாற்பத்தைந்து வெள்ளிக்கு மல்லிகை, முல்லை அரும்பு கொடுக்கும்படி ஏற்பாடு செய்தார். சாயங்காலம் இந்த ஊரில் பட்டணவீதியில் செல்வர்களும் பிரபுக்களும், குதிரைவண்டியில் பவனியாக வருவது வழக்கம். அதுபோல் நானும் குதிரைவண்டியில் உலாவி வர ஆசித்தேன்; உடனே எனக்கு ஒரு வண்டியும் டெல்லி குதிரையும் 1750 வெள்ளிபாய் வாங்கிக் கொடுத்தார். இதுவுமன்றி நான் அணிந்து கொள்ளுமாறு அநேக சுகந்தங்களும் வரவழைத்துத்தந்தார்.

நான்வீட்டை யதிக சுப்பரவாயும், புனிதமாயும், பெருக்கியும் கழுவியும், வைத்திருப்பது சகஜம். இப்பொழுது இரண்டு வேலைக்கார பெண்களும், இரண்டு வேலைக்காரப் பையன்களும் என்னிடம்உண்டு. வேலைக்காரபெண்கள் துணியாவும் நன்றாய் துவைத்து, பிழிந்து, உலரப்போடுவார்கள். சொம்பு சருவக்குடம் முதலிய பாத்திரங்களைச் சுத்தி செய்வார்கள். வீடுவாசல்களை கழுவி சுப்பரவாய் வைத்திருப்பார்கள். எனக்கு குளிப்பாட்டுவார்கள். ஈரம் துவட்டி பூசர்மா முதலிய சுகந்தங்களை அணையும்படி எடுத்துக் கொடுப்பார்கள். வெள்ளிக்கிழமைகளில் தூபதீபமிடுவேன். அறைக்குள் வைத்திருக்கும் அம்பாளுக்கும் சுப்பிரமணிய படத்துக்கும் கடலை சுண்டல் பழம் முதலிய நைவேத்தியமிட்டு நமஸ்கரிப்பேன். துரையப்பாவும் என்னுடன் கூட நின்று தொழுது போற்றுவார்.

இப்படி செய்து வருகிறகால் அவருக்கு சிலவு அதிகம் தான். ஆனல் அதற்கேற்ற வரும்படியுமுண்டு. அவரின் உத்தியோக ரகசியங்களை வெளியிடுவது சரியல்ல. இருந்தும் நீங்கள் விளங்கக்கூடியதாய் நான் இதை யெழுதுகிறேன். துரையப்பாவின் கீழ் 11 ஒவர்சியர்களுண்டு. ஒவ்வொரு ஓவர்சியருக்கும் மூன்று கங்காணிகளுண்டு. ஒவ்வொரு கங்காணி இடமும் சுமார் 20 கூலியாட்களுண்டு. ஒவ்வொரு கூலியாட்களும் சம்பளத்தில் 1வெள்ளியும் கங்காணிமார்கள் 3வெள்ளியும் ஒவர்சியர்கள் ஆளுக்கு 10வெள்ளியும் துரையப்பாவுக்கு கொடுக்கவேணும். இப்படி வாங்குகிறதற்கு இவர் செய்யும் உதவி வேலைஸ்தலத்தில் ஆட்களை நெருக்கி வேலை வாங்குகிறதில்லை. வேலைஸ்தலத்தில் ஒவர்சியர்களின் செய்ரோலை பரிசோதிக்கிறதில்லை. ஓவர்சியரின் கூலியாட்களை எண்ணிக்கணக்கு எடுக்கிறதில்லை. இதனல் ஓவர்சியர்கள் கள்ளப்பேர்கள் போட்டுக்கொள்ளுவது சகஜம். இந்தக்காரணங்கள்பற்றியே அவர்களும் இவருக்குத் திறைகொடுத்து வருகிறார்கள். சென்றுபோன தீபாவளிப் பண்டிகைக்கு ஒவ்வொரு ஒவர்சியரும், கூலியாட்களும், ஒவ்வொரு தாம்பாளத்தில் ஒவ்வொரு பட்டுச்சேலையுடன் ஐவ்வைந்து தங்கப்பவுன்களும், பிராந்திமுதலிய பிரசென்டுகளும் கொண்டுவந்தார்கள். தீபாவளியன்று எங்களுக்கு 15 மூட்டையரிசி சிலவு. இதுமாத்திரமல்ல; அநேகமாய் எங்கள் வீட்டுக்கு பழங்கள், சாவல்கள், ஆதியாம் பரிசங்களும் கொண்டுவருவார்கள். துரையப்பாவைக் கங்காணிப் பெண்கள் விழுந்து நமஸ்கரிப்பார்கள். "எங்களை உங்கள் பிள்ளைபோல வைத்துக்காப்பாற்றவேண்டும்" என்று என்முன்னும் விழுந்து நமஸ்கரிப்பார்கள். துரையப்பாவிடம் கேட்க வேண்டிய சில சகாயங்களை என்னிடம் சொல்லி, செய்து வைக்கும்படி வேண்டுவார்கள். நானும் என்னல் கூடியமட்டும் அவர்களுக்கு சார்பாய் நின்று தேவையானதை முடித்துவிடுவேன். இதனல் என்னைப் போகிற இடமெங்கும் புகழவும், வாழ்த்தவும், என்னிடம் அநேகமாய் வரவும் வைத்துக்கொண்டார்கள். என்கீர்த்தியுமிதனல் பரம்பிவருகிறது: இதனல் நான் துரையப்பா வீட்டிலிருப்பது அவரின் சிநேகருக்கும், பந்துக்களுக்கும் சீக்கிரத்தில் வெளியானது. துரையப்பாவின்

சிநேகரில் சிலர் "இருக்கமுடியாமலிருந்தால் கல்யாணம் செய்து கொண்டிருக்கலாமே: இப்படி தாசிகளுக்கும், வேசிகளுக்கும், ஏன் சிலவழிக்கிறீர்" என்று அறிவு கூறினார்கள் என்றும் வேறு வழியால் செவிபட்டேன். இன்னுமப்படி புத்தி புகட்டினவரில் சிலர் அவர் வீட்டுக்கு காகிதமும் யெழுதிவிட்டார் யென்றும் அறிந்தேன். ஆனால் துரையப்பா என்பேரில் 1000 வெள்ளி செட்டிவீட்டில் போட்டு என்னிடம் ரசீது கொடுத்திருக்கிறார். "எவர் வெறுத்தாலும் உன்னை விட்டுப்பிரியேன்" என்று எனக்கு வாக்குப் பண்ணியிருக்கிறார். இந்தத் தீர்மானத்தால் துரையப்பாவுக்குப் பகைவரும், நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது என்று சில கங்காணிகளின் மனைவியர்கள் சொல்ல கேள்வியுற்றேன்.

இது நிற்க:—நாகை நீலாக்ஷியின் அருள் எனக்கு அதிகமாய் கிடைத்திருக்கிறது. இன்றைக்கு ரூபாய் 100 மணியார்டர் மூலமாய் அனுப்பியிருக்கிறேன். அதை யெடுத்து ஒரு அபிஷேகஞ் செய்து, கோயில் பிரசாதமனுப்பி வைக்கவும்: விசேஷமிருப்பின் அடுத்த காகிதத்தில் தெரிவிப்பேன்.

இந்தவிதமான செல்வத்தில் நீலாக்ஷியமர்ந்து வாழுநாளில் நாம் முன் சொன்னபடி மாரியம்மன் கோவிலுக்கும் சுப்பிரமணிய ஸ்வாமி கோவிலுக்கும் கிரமமாகவே ருக்மணியுடன் போவதை வழக்கமாக்கினாள். 1890ம் ஆண்டு கார்த்திகைமீ 19உ நிகழ்ந்த திருக்கார்த்திகையிலன்று, இவள் கோவிலிலிருந்து ஊர்வசி, ரம்பையென, வாலிபரால் பிரமை கொள்ளப்பட்டு, ஆனந்த பவனியுடன் வீட்டுக்குத் திரும்பினபொழுது, துரையப்பாவுடன் இன்னுமொருவர் பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்து, குலஸ்திரீயைப்போல, மௌனமாய் நிலத்தைப் பார்த்துக்கொண்டு அறைக்குள் நுழைந்தாள். கொஞ்ச நேரஞ் சென்றதன்பின், துரையப்பா உள்ளே சென்று "இங்கே வந்திருக்கிறவர் என் அருமையான நண்பர்: அவர் பெயர் அரிகிருஷ்ண நாயுடு. அவர் ஜெனன தேசம் தஞ்சாவூர், போலீஸ்கமிஷனர் ஆபீஸில் பிரதம உத்தியோகமாயிருக்கிறார். அவருக்குச் சம்பளம் 150 வெள்ளி; அவரின் மனைவியாளையும் பிள்ளைகளையும் அழைத்து

6 மாதம் லீவில்சென்றிருந்தார். இன்றைக்குத்தான் லீவிலிருந்து திரும்பினார். கொஞ்சநாளைக்கு இங்கேதான் தங்குவார்" என்றார்.

இந்தளவில் இவருடைய ரூபத்தையும் சொல்லி விடுகிறோம். உயரத்தில் சுமார் 4½ அடியும், இருண்ட நிறமும், நீண்ட பல்லும், அதற்கேற்றபடி நீண்டு பருத்த செவிகளும், குதிரையின் முகம்போல் நெடுத்த முகமும், இனிமையில்லாத வெவ்விய தோற்றமும், தலையின் பின் பக்கத்தில் ஒரு பாக்களவு சிறு குடுமியும்—பொதுவில் துரையப்பாவுக்கு இவர் சிநேகராயிருப்பது அதிசயம். ஏனெனில் இவரின் சிந்தை அநேகமாய் பாவச் செய்கைகளையே கிரகிக்கும் தன்மையுள்ளது. பாவமான தொழிலைச் செய்ய இவர் மனங் கோணாது. ஏழைகளிடத்திலுள்ள பொருளை அபகரிக்க இவர் கூசமாட்டார். ஆனால் துரையப்பாவைக் கண்டால் யானை தும்பிக்கையால் சலாமிடுவதுபோல் சலாம்போடுவதினாலும், அவரை அநேகமாய் கனஞ்செய்து "சார்" என்றும் "பின்னே" என்றும் வணக்கத்துடன் பேசி வருவதாலும் துரையப்பா இவரை சிநேகரென்று எண்ணிவிட்டார்.

" ... ... உவர் நிலத்தில்
எந்நாளும் நல்லவிதை வித்திடினும்
விளைவெய்திடாது"

என்று ஸ்ரீவில்லிபுத்தூரார் சொன்னதை இவர் கற்றிருந்தும் அதை அனுபவத்தில் கண்டிலர்.

அரிகிருஷ்ணநாயுடு துரையப்பாவுடன் சுமார் ஆறுவாரம் வரையில் தங்கியிருந்தார். அப்பொழுது நீலாக்ஷி அவரை விருந்தாளியென்று போஜன வகைகளாலும், இனியவார்த்தைகளாலும், கனப்படுத்தினாள். அதன்பின் நாயுடுவுக்கு வீடு கவர்மெண்டாரால் கொடுக்கப்பட நீலாக்ஷிக்கும் துரையப்பாவுக்கும் மிகவும் ஸ்துதி கூறி, "என்றும் மறவேன்" என்ற குறிப்புடன், தனது கிருகத்திற்கு ஏகினார்.

இவர் துரையப்பாவீட்டிலிருந்த நாட்களில் வழக்கம்போல் சானிடரி போர்ட் கூலியாட்கள், பழவர்க்கங்களாதிய பரிசங்களு

டன் அநேக தடவை நீலாக்ஷியை தரிசித்திருந்தார்கள். அன்னாட்களில் இவர் துரையப்பாவுக்குவரும்படி ஜாஸ்தி யென்றும், இன்னும் அத்தோடு கூடிய இரகசியங்களையும் அறியநேர்ந்தது. அதுவும் தவிர, இவர் தனது வீடுசென்றதும் அநேகமாய் துரையப்பா வீட்டுக்கு வருவது வழக்கம். துரையப்பா இல்லாத நேரங்களில் நீலாக்ஷி இவருடன் கூச்சமின்றி பேசுவதும் சகஜம். 1891ஸு தைமீ கோலாலம்பூரிலும் அடுத்த ஊர்களிலும் மூன்று நாள் இடைவிடாது பெய்தமழையால், கோலாலம்பூர் ஆறுபெருகி, பட்டணம்முழுவதையும் அழித்தது. எத்தனையோ வீடுகள் அதனால் அழிந்தன.

பார்க்கிற இடமெல்லாம் வெள்ளப்பிரவாகமாகவே இருந்தது. "சௌகிறட் சம்பெனிக் கீழ்வீடு போச்சு! கம்பங் கிர்போரோட் தாழ்ந்தது, (அமிழ்ந்தினது) வத்காலிங்கத்துப் பாலம் மூழ்ந்தது; முத்தவெளியில வள்ளம் விட்டோடினார்கள். இங்கே ஒருசீனப்பிணம் கண்டோம்; இன்னொன்று அள்ளுப்பட்டது" இப்படியான கதைகளே ஊரெங்கும் தொனித்தன. வெள்ளமுமோ திரண்டு உயர்ந்து அதியுக்கிரமமாய் அடக்கமுடியாத வேகத்துடன் பாய்ந்தது. வருணபகவானுடைய உக்கிரத்தை அன்றைலவோ பார்க்கவேண்டும்! மலைதானும் எதிர்ப்படில் அதுவும் உடையவேவேண்டும். இந்த உக்கிரகத்துக்கு இரும்பு பாலமுமொரு பொருட்டா? யாவும் உடைந்தது. துரையப்பாவின் ஆபீஸ் தலைவன் பாலங்களுடைந்து விட்டதென்றும், ரோட்டு கழுவப்பட்டதென்றும், பட்டணத்துக்குள் சில பிரதானமான கட்டடங்களுக்குள் வெள்ளம் புகுந்துவிட்டதென்றும், கூலியாட்களும் ஓவர்சியர்களும் ஆயத்தமாய் வேலைக்கு வரவேண்டுமென்றும், ஒருதுண்டுப்பத்திரம் அனுப்பியிருந்தார். அந்தக் காகிதம் வந்ததும் சுமார் 2-மணியளவில் துரையப்பா ஒரு ஜோடி காக்கி யுடுப்புடன் புறப்பட்டார். அன்று 5-மணியளவில் துரையப்பாவின் நண்பரான நாயுடு துரையப்பா வீடுசென்றார். அப்பொழுது நீலாக்ஷி வழக்கம்போல் இவருடன் மழை செய்த நஷ்டத்தையும், துரையப்பா அவசியமாய் புறப்பட்டதையும் பற்றி சொன்னாள். அதைக் கேட்டு,

அரி—அப்படியானால் துரையப்பா இன்று வீட்டுக்கு திரும்ப முடியாது. இரண்டு பாலமுடைந்து அள்ளுப்பட்டது. ரோட்டுக ளும் தண்ணீரால் மூடப்பட்டிருக்கு (என்றார்.)

நீ எப்படியென்றாலும் சாப்பாட்டுக்கு வருவார்தானே. அல்லது சாதம் அனுப்பவேண்டிவருமோ?—

அரி—அனுப்ப வேண்டியது தான்; வேலைக்காரர் எங்கே?

நீ—அவர்களும் வெள்ளம் பார்க்கப் போய்விட்டார்கள். ஒரு மாத்திரம்நிற்கிறான்.

அரி—அவனையும் யனுப்பிவிட்டு வா.

நீலா—என் அவனை அனுப்பவேணும்?

அரி—நான் உன்னிடம் ஒரு கதை பேச அநேக நாளாய் காத்தி ருந்தேன்: ஆகையால் இன்றைக்கே தருணம்.

நீலா—அப்படியென்ன? இரகசியமான தென்றாலும் சேளாமல் மெள்ள சொல்லலாமே.

அரி—அப்படியானால் படுக்கை யறைக்கு வந்து சொல்லு கிறேன்.

நீ—உம்மிடம் சகோதரம்போல் பேசினால் நீர் என்னமோ எண்ணிவிட்டீர். இருக்கட்டும், இனி "அவர் இல்லாத நேரத்தில் இங்கே வருகிறதை நிறுத்தும்" என்று சொல்லிக்கொண்டு கதவை யும் அடித்து சாத்திக்கொண்டு ஸ்நான அறைக்குள்ளால் குசினிக் குள் சென்றாள்.

ஹரிகிருஷ்ணநாயுடு கண்களிருந்தும் பார்வையிழந்தவர்போ லும், இரத்தமிருந்தும் பலமில்லாதவர் போலும், மெதுவாய் வீட் டால் நழுவினார். அவர் அகன்றதன் பின் வீட்டுக்கு வேலைக் காரர் தீபமேற்றினார்கள். நீலாக்ஷி வழக்கம்போல் அம்பாள், சுப் பிரமணியரைத் தொழுது போற்றி, துரையப்பாவின் வரவை

எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். 9-மணி அடித்தது; பத்து, பதி னென்று ஆயும், துரையப்பா திரும்பினபாடில்லை. வீட்டில் கௌளி களோ "சுச் சுச்" என்று சொல்லிக்கொண்டு நின்றன. அவள் மனதி லேச்சமுண்டானது. நெஞ்சு பறை கொட்டினது. அவள் புத்தி கலங்கினது. ஒரு இடத்தில் உட்கார்ந்திருக்க இயலாமல் அடிக்கடி ஜன்னல் வழியாய் பார்த்துக்கொண்டே நின்றாள். அப்பொழுது இரண்டு மலாய்க்காரர் வந்து துவான் (ஐயா) என்று கதவைத்தட்டி னார்கள். அவள் ஜன்னலின் கதவைத்திறந்து வைத்துக்கொண்டு யார் என்று பார்த்தாள். வந்தவர்களில் ஒருவன் "ஐயாவைப் பார்க்கவந் தோம்" என்றான்.

நீலா—என்ன அலுவலாய் காணும்படி வந்தீர்கள்?

அவன்—ஐயாவுடன் எனக்கு அநேகவருஷங்களாய் பழக்க முண்டு. என் பெயர் சையட் இப்ராஹிம். என் வீடு மழையால் விழுந்துவிட்டது. என்னுடைய எருமைமாடு இரண்டும், கட்டை யவிழ்த்துக்கொண்டு ஓடி இப்பொழுது 4 நாளாச்சு. 3 நாளாய் சாப் பாடில்லாமல் நானும் என பெண்சாதி பிள்ளைகளும் பட்டினியாய்க் கிடக்கிறோம். ஆகையால்தான் ஐயாவிடம் ஒரு பத்து வெள்ளி கட னாக வாங்கிக்கொண்டு போகலாமென்று வந்தேன். இதோ என்னு டன் கூட நிற்கிறவர், என் பெண்சாதியின் தம்பியார் (என்றான்)

நீலா—ஐயா மழை வெள்ளத்தினால் பாலமுடைந்துவிட்ட தென்று 2-மணிக்கே போய்விட்டார், இன்னும் திரும்பவில்லையப்பா (என்றாள்.)

அவன்—எப்படி யென்றாலும் இன்றைக்கு வருவார்தானே (என்றான்.)

நீலா—என்னமோ நிச்சயமாய் சொல்லமுடியாது.

அவன்—(அதிகதுக்கத்துடன்) என்ன செய்வோம்! என்னு டைய காலபலன் அப்படியிருக்கு. (என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு அங்கேயே உட்கார்ந்தான்.)

அரைமணி நேரம் சென்றது. துரைபப்பா வரவில்லை. நீலாக்ஷிக்கோ அவனைப் பார்க்கப்பார்க்க மனமிரங்கிறது. அறைக்குள் சென்று அலமாரியைத் திறந்து ஒரு பத்துவெள்ளி நோட்டை எடுத்துக்கொண்டு வந்து அவனுக்குக்கொடுத்து, "நீ இதைக் கொண்டு போ; அப்பா சீக்கிரம் திரும்பமாட்டார். அவர் வரும் வரையில் காத்துக்கொண்டிருந்தால் நீ இன்றைக்கும் சாப்பிடமுடியாது. வியாபாரிகள் கடையை அடைத்துவிடுவார்கள். இதைக் கொண்டுபோய் உனக்கு வேண்டியவைகளை வாங்கிச்செல். இதை நீ எனக்குத் திருப்பித்தரவேண்டாம்" என்று அனுப்பினாள்.

மலாய்க்காரன் பதினாயிரம் தெண்டனிட்டு வாழ்த்தி, விடைபெற்றுக்கொண்டு சென்றான்.

—:0:—

## 8-ம் அத்தியாயம்.

கம்பங்கிர்போ ரோட்டில், ஒரு இருகால் வேய்ந்த வீட்டில், இருவர் அறையினுள் நாற்காலியிலிருந்து சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் இருந்த அறைக்குள், சுமார் 3 டஜன் நாற்காலிகளும், 4 டஜன்படங்களும், ஒருபெரியநிலைக்கண்ணாடியும், இன்னும் 3 சின்னக்கண்ணாடிகளும் இருந்தன. இன்னும் ஒரு பெரிய மேஜையும் ஒரு சிறிய மேஜையும் நடுவிலிருந்தன. நாற்காலிகளோ உயர்ந்த விலையுள்ளதாயிருந்தாலும், அழுக்காலும், சுண்ணாம்புப் பூச்சாலும், நிறைந்திருந்தன. சில, இடமில்லாமையால் ஒன்றின் மேலொன்றாய், அடுக்கப்பட்டிருந்தது. படங்கள் பலகையினால் செய்யப்பட்ட சுவரில் தொங்கவிடப்பட்டிருந்தன. அவைகளை தொங்கும்படி கட்டப்பட்டிருந்த கயிறுகளுமோ, கரிநிறமாயிருந்தன. படங்களின் கண்ணாடியில் புகைபடிந்து, படக்காட்சியைமறைத்தது. மேஜைப்பலகையின் நிறமும் என்னவென்று சொல்லமுடியாத விதமாய் அழுக்கு மூடியிருந்தது. இவைகளை வீட்டில் வைத்திருக்கவேணுமென்று இந்த வீட்டுப்பெண் ஆசிப்பாளேயொழிய, சுத்தமாயும், புனிதமாயும் வைத்திருக்க தெரியாது. "மணமாலையருமையைப் புனைபவர்களேயறிவர், மட்டிக்குரங்கறியுமோ?" என்ற விதம் இவளும் வீடு

நிறைய சாமான் வைத்துக்கொள்ளவேணுமென்ற ஆசையைத்தவிர அதை பாவிக்கத் தெரிந்தவளல்லள். ஆனால் தன்னை யலங்கரித்தலில் குறையமாட்டாள். ஒவ்வொரு நேரத்துக்கு ஒவ்வொரு உடையணிவாள்: வீட்டுக்கு வரும் புருஷர்களுடன் சம்பாஷணை செய்வதில் விருப்பமுடையவள்.

இந்தவீட்டில் இருக்கும் பெண் இவ்வீட்டதிபதியின் மனைவியென்கலாம்— "மனைவியென்கலாமென்று ஏன் சொல்லுவான்? மனைவியென்று முடித்துவிடலாமே" என்று வாசகராகிய நீங்கள் கேட்கக்கூடும். ஏன் " என்கலாம் " எனில் இப்பெண் இன்றைக்கு ஏறக்குறைய 12 வருஷங்களுக்கு முன் றவாங் என்ற இடத்தில் வசித்துக்கொண்டிருந்தாள். அக்காலை இவளின் அன்னையாகிய கோகிலத்தம்மாள் கடலைவிற்று ஜீவியஞ்செய்து, இவளையும் காப்பாற்றிவந்தாள். கடலைவிற்று திரிந்தபொழுது ஒரு நாவிதனை நேசித்திருந்ததனால் அந்நாவிதன் இவள் வீட்டுக்கு அடிக்கடி வரநேர்ந்தது. அந்தநாட்களில் இவளைப்பற்றி பலவிதமான கதைகள் பிறந்தன. இது இப்படியிருக்கும்பொழுது அரங்கசாமிதேவன் என்றொருவன் இவளின் அன்னையைத் தொட்டு அதன் பின் இவளையும் தொட்டான். இந்தவிதமான தலைதடுமாறின செய்கைகளால் றவாங் என்ற இடத்தை இவள் விட்டு ஓடவேண்டிநேர்ந்தது. அவ்வூரைவிட்டு இப்பொழுது வருஷம் 11ஆய்விட்டது. அதன்பின் இவ்வீட்டில் தானிருக்கிறாள். பேரளவில் அரங்கசாமி தேவரின் ஆசைநாயகிதான். இங்கேயுள்ள மேஜை நாற்காலிகள் யாவும் அரங்கசாமி வாங்கினானா? அப்படி நாமறியவில்லை. இவ்வீட்டுக்கு அநேகமாய் செட்டிகளும் உத்தியோகஸ்தர்களும் வருவதுண்டு. தோற்றத்தளவில் அரங்கசாமியை பார்க்கவென்றே யாருஞ் சொல்லவேண்டும். ஆனால் அரங்கசாமிக்கும் இவர்களுக்கும் ஏதாகுதல் சிநேகமுண்டா? அதைப்பற்றியும் நாம் நன்றாய் சொல்லமாட்டோம்.

இந்தவிதமாய் வருபவர்களில் ஒருவரான அரிகிருஷ்ண நாயுடுவும் அரங்கசாமியும் நாற்காலிமேலுட்கார்ந்து பின்வருமாறு சம்பாஷணை செய்துகொண்டிருந்தார்கள்.

அரி—நாலு நாளைக்கு முன் நான் துரையப்பா வீடு போயிருந்தேன். நீலாக்ஷியுடன் வார்த்தையாடினேன். அந்தப் பெண்ணுக்கு அதிகம் ஏங்கி பிடித்துவிட்டது. துரையப்பா நல்ல காசு கொடுக்கிறப்போலிருக்கு.

அர—ஆமா, நானும் கேள்விப்பட்டேன்; துரையப்பாவுக்கும் கேடுகாலம் நெருங்கிவிட்டது போல தோற்றுகிறது.

அரி—நீலாக்ஷியுடன் ருக்குமணி தான் சிநேகம்; இருவரும் பிரியாமல் கோவிலுக்கு வருகிறதாக அறிந்தேன்.

அர—ஆமா! நானும் அப்படித்தான் கேள்வி. ருக்குமணி என்ற குட்டியை நான் கிளப்பலாம் என்று தான் பார்த்தேன்— அது ஒரு மாதிரி தவறிப்போனது.

அரி—எப்படித் தவறினது?

அர—கல்யாணம் பேசி நானே தாலிகட்டினேன். அந்தக்குட்டி இங்கே வராதே என்று கோபமாய் சொல்லிவிட்டது.

அரி—அப்படி தவறிவிட்டால் இன்னுமொரு தடவை பிரயத்தனம் செய்து பார்க்க மனமில்லையோ?

அர—செலவு ஏற்படும்: ஆகையால் நான் அந்தளவில் விட்டுவிட்டேன்.

அரி—செலவுக்காக எண்ணின எண்ணத்தை விட்டுவிடலாமோ?

அர—அத்துடன் தொந்திரவு நிகழ்ந்தாலும் என்ன செய்கிறது? —என்று தான் விட்டுவிட்டேன்.

அரி—தொந்தரவு வராமல் நான் முன்நிற்பேன். நீர் எண்ணின எண்ணத்தை முடிக்கத் தெண்டியும்.

அர—அப்படியானால் நாளைக்கு செய்வேன்.

அரி—என்னவிதமாய்ச் செய்யமுடியும்என்று நானுமறியட்டும்?

அர—நீலாக்ஷியும் ருக்குமணியும் கிரமமாக அம்பாள் கோவிலுக்கு வருகிறதென்று நான் அறிவேன். அவர்களின் ரிக்‌ஷாகாரனுக்கு 10வெள்ளியை கையில் வைத்து, தனிமையான இடத்துக்கு இழுத்துக்கொண்டு வாடா என்று சொன்னால் அப்படிச்செய்வான். எப்படியென்றாலும் அது செய்விக்கலாம்.

அரி—ஆம்: அது நல்ல யோஜனைதான். அப்படியானால் வருகிற சுக்கிரவாரத்தன்று நீலாக்ஷியையும் ருக்மணியையும் இரண்டாங் கட்டைக்கு கொண்டுவந்து சேர்க்கும்படி நீர் ஒழுங்கு செய்ய முடியுமா? அதனால் வருகிற செலவு முழுக்க நான் கொடுப்பேன். என்ன விதத்திலும் என் பெயர் வெளியில் வரக்கூடாது. சுக்கிரவாரத்தன்று 8 மணி தொடங்கி 9-மணி வரையும் நான் இரண்டாங்கட்டையில் இன்னுமிருவருடன் நிற்பேன். அவர்கள் வந்தபின் நீலாக்ஷி எனக்கு; ருக்மணி உமக்கு; அப்படித்தானே?

அர—ஆனந்த சந்தோஷம்: என்ன தொந்திரவு வந்தாலும் நீங்கள் விலக்கிவிடுவேனென்று சொன்னபின்பும் இது கஷ்டமான காரியமா?

அரி—யாதொரு தொந்திரவும் வராது. அதைப்பற்றி யோஜிக்கவேண்டாம்.

இது நிகழ்ந்து ஒரு வாரஞ்சென்று வந்த சுக்கிரவாரத்தன்று, சுமார் 60-வயதுள்ள ஒரு கருமையான ஆள், மலாய்தேசத்து கைலி (சாரங்) அணிந்து, தன் அங்கத்தை மூடி போர்வையிட்டு, மாரியம்மன் கோவிலுக்கு சமீபமாய் அங்குமிங்கும் உலாவிக்கொண்டு நின்றார். அப்பொழுது அநேக பெண்களும் ஆண்களும் பாதசாரியாயும் ரிக்‌ஷாவில் வந்து இறங்கியும், கோவிலுக்குள் சென்றார்கள். கொஞ்சநேரத்தில் ருக்மணியும் நீலாக்ஷியும் வந்து ரிக்‌ஷாகாரனை நிற்கும்படி கட்டளையிட்டு, கோவிலுக்குள் பிரவேசித்தார்கள். போர்வையுடன் உலாவிக்கொண்டு நின்றவர் அந்த ரிக்‌ஷாகாரனிடஞ்சென்று பின்னால் வருகிறவிதம் பேசிக்கொண்டு நின்றார். இவர் யார்? ருக்மணிக்கு கல்யாணப் பந்தலில் தாலிகட்டின அரங்கசாமித்தேவர்.

அர—இன்றைக்கு உனக்கு ஒரு பெரிய லாபம் கிடைக்கும் என்று எனக்குத் தெரிகிறது.

சீனன்—(சிரித்துக்கொண்டு) எப்படி உனக்குத் தெரியும்? உனக்குச் சாஸ்திரஞ்சொல்லத் தெரியுமா?

அர—ஆம்: சாஸ்த்திரஞ் சொல்லவும் என்னால் முடியும் நான் சொல்லுகிற சாஸ்திரம் பொய்யாயிருந்ததுமில்லை. நான்சொல்லுவதின் உண்மையை இப்பொழுது நீ யறிந்துகொள்ளப்போகிறாய்.

• சீ—எப்படி?

அர—இந்த வண்டியில் வந்த பெண்களை இழுத்துவருகிறவன் நீயல்ல. இதற்குமுன் உன் கூட்டாளியே இவர்களின் ரிக்ஷாகாரன். அவன் இன்றைக்கு உடம்பு சௌக்கியமில்லை யென்று உன்னையனுப்பியிருக்கிறான். அப்படியல்லவா?

சீனன்—(அதிசயகுறிப்புடன்) நீ சொன்னது முழுவதும் உண்மை. ஓகோ! நீ கெட்டிக்கார சாஸ்திரிபோல்தான் தெரிகிறது. இன்னும் வேறென்ன சொல்லு!

அர—உன்னுடைய கூட்டாளிக்கு உண்மையில் சுகவீனம் இல்லை. அவன் இன்றைக்கு தான் வரக்கூடாது என்று உன்னை யனுப்பினான்.

சீனன்—(சிரிப்புடன்) அதுவும் உண்மை! இனியென்ன?

அர—அவன்தான் வராயல் நின்று உன்னை யனுப்பதற்காக பத்துவெள்ளி சம்பாதித்துக் கொண்டான்: நீயும் பெரும் லாபம் அடையப்போகிறாய்.

சீனன்—எப்படி லாபம் கிடைக்கும்?

அர—நீ இந்தப் பெண்களை இன்றைக்கு இரண்டாங்கட்டைக்கு இழுத்துச் செல்வாய். அதனால் உனக்கு கூலி இருபது வெள்ளி கிடைக்கும்.

சீ—அதன்பின்?

அர—அதன்பின் அந்தப்பெண்கள் தங்களுக்கு சிநேகமானவர்களை அங்கே சந்திப்பார்கள். ஆகையால்உன்னை அனுப்பிவிடுவார்கள்.

சீ—இரண்டாங் கட்டைக்குப் போக ஒருவரும் 20 வெள்ளி கொடுக்கமாட்டார்களே! அதிகம் கொடுத்தால் 50 சென்ட் (8 அணா கொடுப்பார்கள்)

அர—ஒருவரும் கொடுக்கமாட்டார்கள் என்று சொல்லுகிறாய். நல்லது, இப்பொழுது உனக்கு 10 வெள்ளி கையில்கொடுத்து ஒருவர் அங்கே இவர்களை இழுத்துச் செல்என்றால் நீ நான்சொல்லுவதை நம்புவாயா?

சீ—அப்படியானால் நம்புவேன்.

அர—சரி; இதோயிருக்கு, எடுத்துக்கொள். (என்று பத்து வெள்ளி நோட்டைக் கையில் வைத்தார்.)

சீ—(பெற்றுக்கொண்டு) இவர்கள் உன்னுடைய காதலிகளா?

அர—அவர்களி லொருத்தி என்நேசி. மற்றவள் இன்னொருவரின் சிநேகி. அவர்கள் வந்தவுடன் நீ மெழுகு சேலையால் நன்றாய் மூடிக் கட்டிக்கொண்டு ரிக்ஷாவை இழுத்துச்செல். யாரும் காணக் கூடாது. விளங்கினாயா? அவர்களை இழுத்துக்கொண்டு இரண்டாங் கட்டைக்கு வந்தவுடன், இன்னும் ஒரு 10 வெள்ளி உனக்குத் தருவேன்.

சீ—(அதிக சந்தோஷமாய்) யார் தடுத்தாலும் ஒரே ஓட்டமா யோடுவேன். அதைப்பற்றி சந்தேகம் வேண்டாம்.

அர—உன்னுடைய ரிக்ஷாவுக்கு பின்னால் நான் இன்னொரு ரிக்ஷாவில் வருவேன். ஆனால் நீ என்னுடைய வருகையைப் பற்றி கவனியாமல்போ.

சீ—சரி, அப்படியே ஆகட்டும்.

அர—நானும் நீயும் பேசின விஷயம் யாதொருவருமறியக் கூடாது. அப்படியாருக்கும் தெரிவித்தால் இந்தப்பத்து வெள்ளியை யும் பறித்துக்கொண்டு உன்னை தொந்திரவில் வைப்பேன. விளங்கி னுயா?

பி—நான் ஒருவருக்கும் சொல்லமாட்டேன். பெண்களை இரண் டாம் கட்டையில் கொண்டுவந்து விடுவேன். இது சத்தியம் (என் ருன்)

இச்சமயம் அரங்கசாமி அப்புறம் அகன்றுன். நீலாக்ஷியும், ருக்மணியும் கோவிலுக்குள் சென்று, வலம் வந்து, அம்பாளைத் தொழுது போற்றி, அர்ச்சனை செய்வித்தார்கள். அதன்பின் காணப் படுவது போல் தூணுக்குப்பின் மறைந்து நின்றுர்கள். அவர்கள் நின்ற இடத்திலிருந்து எழுந்ததென்றலானது அங்கு நின்ற வாலி பரின் புத்தியைக்கலக்கி விட்டது. அவர்கள் அடிக்கடி பெண்களைப் பார்ப்பதும் சிநேகருக்கு காதில் இரகசியம் சொல்லுவதுமாய் நின் ருர்கள். சற்றில் பெண்கள் மேல் நினைவும், அம்பாள்மேல் பார்வை யுமாக நின்று கும்பிட்டார்கள். நீலாக்ஷியும் ருக்குமணியும் ஊர்வசி அரம்பை போல் பரத நாட்டியத்துடன் கோவிலைவிட்டு வெளியேறி ரிக்ஷாவில் உட்கார்ந்தார்கள். ரிக்ஷாகாரன் இவர்களை யாரும் பார்க்காமல் மெழுகுசேலையால் ரிக்ஷாவை நன்றாய் மூடிக்கட்டினன். அதன்பின் ரிக்ஷாவையிழுத்து தன்னுல் ஆனமட்டும் வேகமாய் ஓடி னன். அவன் சென்ற வேகம் நீலாக்ஷிக்கும் ருக்குமணிக்கும் அதிக சந்தோஷத்தை உண்டாக்கினது. "அதிக வேகமாய் ஓடுகிறுன். இனிஎங்கேயாவது செல்லவேண்டுமானல் இவனைத்தான் அமர்த்த வேண்டும்" என்று புன்னகையுடன் ருக்குமணி சொன்னுள்.

நீ— அம்மாடி! வயிறு குலுங்குகிறதடி, நன்றுயோடுருண்டி!

ரு—மெள்ள போகச் சொல்லட்டுமா?

நீ—வேண்டாம், அவன் ஓடட்டும்.

ரு—வேகத்தில் குதிரையும் இவனுஞ்சரி.

நீ—அரைமைல் பந்தயமானால் குதிரையையும் தாண்டிவிடுவான். டில்லிக் குதிரைபோல் போறாண்டி!

இவர்களை ரிக்ஷாவில் விட்டு இரண்டாங்கட்டையில் நிற்கிறேன் என்ற அரிகிருஷ்ணநாயுடு என்ன செய்கிறாரென்று பார்ப்போம். அவர் இரண்டு கூலியாட்களுக்கு சாராயம் கொடுத்து, தன்னுடன் அழைத்துக்கொண்டு வந்து, குறிக்கப்பட்ட இடத்தில் அவர்களை நிறுத்திவிட்டு ஒரு பத்தை மறைவில் தான் ஒளிந்து நின்றார். “இரண்டாங் கட்டை” என்பது இப்பொழுது கட்டடங்களினால் நிறைந்து ஜனமதிகரித்துப் பட்டணமாய்விட்டது. ஆனால் எங்கள் கதை குறிக்கும் காலத்தில் அந்தவிடம் அடர்ந்த காடாயும் காட்டு மிருகங்கள் வாஸஸ்தானமாயும் இன்னும் திருடர் உறைவிடமாயும், இருந்தது. அரிகிருஷ்ணநாயுடுவுடன் வந்தவர்கள் இருவரும் அதிக பருமனும் நெட்டையும் குட்டையுமில்லாத உயரமுடையவர்கள். ஜாதியில் மறவர் என்பார்கள். ஒருவனின் பெயர் கருப்பணத் தேவன், மற்றவன் முனியாண்டித்தேவன். இவர்களை 2ம்-கட்டைக்கு அழைத்துப்போய் நாயுடு சொன்னதாவது: “இந்தவிடத்திலே இரண்டுபெண்களைச் சின்னன் ரிக்ஷாவில் கொண்டுவருவான். அப்பொழுது அந்தவண்டியை மறித்து, பெண்களைப் பிடித்து, வாயில சீலைத்துணியை யடக்கி என்னிடங்கொண்டு வரவேண்டும். பெண்களின் நகைகளை நீங்கள்கழட்டிக்கொள்ளலாம். கையில, மடியில்காசிருந்தால் அதுவும் உங்களுக்கே. ஆனால் தப்பவிடாமல் என்னிடம் கொண்டு வந்து சேர்த்து விடவேணும். என்னுடைய பெயர் ஒருநாளும் வெளியில் வரக்கூடாது. தெரியுமா?”

கருபபன்—ஆகட்டுஞ்சாமி.

அரிகிருஷ்ணநாயுடு தலையில் சாய நிறத்தில் ஒரு துவாய்த் துண்டு கட்டி இராவில் கண்ணுக்குப் புலப்படாதென்று நினைத்து, சிவந்த துணி யணிந்து கருமையான பனியனால் அங்கத்தை மூடியிருந்தார். அந்த நேரத்தில் யாரும் உண்மையாய் இவரும் இவருடன் வந்த சருப்பன், மூனியன் வருப்பினர் என்றே சொல்லுவார்கள். நீலாக்ஷியின் ரூபமே இவர்மனதில் இருந்தது. யாவையும் மறந்தார்.

தன் கௌரவத்தை மறந்தார். தன்னுடைய உத்தியோகத்தின் பெருமையை மறந்தார். நீலாட்சியின் காதலே யாவுக்கும் மேலாகினது.

ஏ! மாயப்பிசாசமே! நீ யாரைத்தான் விட்டாய்? இலங்கையழிந்ததும் உன்னாலே! இந்திரனுக்கு ஆயிரங் கண்கள் வந்ததும் உன்னாலே! பாமினை தூதுக்கு விட்டதும் உன்னாலே! அறுமுகன் பண்டாரமானதும் உன்னாலே! தாய் தந்தையரையும் மகவுகளையும் பிரிப்பதும் நீ! சிநேகரையும் பகைவராக்குவது நீ! பாடுபட்டுத் தேடிவைத்த புராதன செல்வத்தையழிப்பதும் நீ! அருமையானவர்களை நடுச்சந்தியில் பரிதவிக்க வைப்பதும் நீ! இந்த உலகத்தை யுண்டாக்கினதும் நீ! இதையழிப்பதும் நீ! உன் கொடுமை பொறுக்கற்பாலது. நிற்க, இவர் பிரதம லிகிதர் என்பதை யப்பொழுது ஒருவரும் நம்பார். இவர் இந்த விதமான ஆபத்தங்கள் செய்து மறைந்துநிற்க, நீலாக்ஷியும் ருக்மணியும் உட்கார்ந்திருக்கும் ரிக்ஷா அந்த இடத்தில் வருவதை வண்டியிலிருந்த இரண்டு தீபங்களும் பிரபையால் காட்டின. கருப்பன் முனியனைப்பார்த்து: அடே சத்தமிடாதே! ரிக்ஷா அதோ வருது. கிட்ட வந்ததும் சினனுக்கு ஒரு அறை வைப்பேன்; அவன் உடனே புரளுவான். அல்லது ஓரே ஓட்டமாய் யோடுவான் பார்க்கிறயா? இன்றைக்கு நம்பபாடு அதிர்ஷ்டம்தான். சுமார் 2000 வெள்ளி நகை அந்த இரண்டு குட்டிகளிடமும் இராதா? அடே முனியா அரைவாசி, எனக்கு தெரியுமா? என்னைவிட்டுட்டு எடுத்துக்கொண்டு தப்பினியோகொண்டிடுவேன் தெரியுமா? அடே! கறுப்பன் கையால் ஒரு குத்துவாங்குவாயாடா? அதின் ருசி தெரியுமா? மோறைக் கட்டை பேந்துபோகுமடா!

முனியன்—இரையாதே, ரிக்ஷா இதோ வருகிறது.

கருப்பன்—உட்காரடா, நின்றால் தெரியுமடா?

கருப்பன் தன் கைக்குத்தைப் பற்றி புகழ, நீலாட்சி ருக்குமணியைப்பார்த்து "இவ்வளவு நேரமும இவன் எங்கே ஓடுகிறான்? வழி தப்பிவிட்டான் போலிருக்கு" என்று ரிக்ஷாவின் மெழுகு

சேலையை விலக்கிப்பார்த்தாள். எல்லாம்இருளாகவே இருக்கக் கண்டாள்.

உடனே சினனை நோக்கி "இது எவ்விடம்? இங்கே ஏன் வந்தாய்? நில்லடா: இது என்ன இருளாய் கிடக்கே— ஒன்றுந்தெரியவில்லை"—

ருக்குமணியும் பார்த்து "இவன் எங்கே வந்தான்? இரண்டாங் கட்டைக்கல்லவா வந்துவிட்டான்!— மிருகம்— மடையன்—இங்கே யேன் வந்தான்!"

சினன்— நீங்கள் எங்கே போகிறதென்று சொல்லவில்லை. ஒன்றும் பேசாமலிருந்து கதைத்துக் கொண்டிருந்தீர்கள். நான் இங்கேதான் போகிறதென்று நினைத்துக்கொண்டு வந்தேன்.

நீலா—சீ—பாபி (பன்றி)— டொங்கி (கழுதை)— சிலாகா (மிருகம்)—திருப்படா வண்டியை—உனக்கு இன்றைக்குச்சரியான பாடம் கொடுத்துஅனுப்புகிறேன (வா என்றுகோபமாய்ச்சொன்னாள்)

சினன்—ரிக்ஷாவை திருப்பிக்கொண்டுவந்துவிட்டால், எனக்கு ஒரு வெள்ளி கூடக் கொடுக்கவேணும். நீங்கள் ஏன் பேசாமலிருந்தீர்கள்? என்னில் குற்றமில்லை.

ரு—ஒரு வெள்ளியா?—அதற்குமேல் கொடுக்கலாம்—வண்டியைத் திருப்படா—பாபி.

நீ—வெள்ளி தரலாம், திருப்படா— பாபி—

சினன்—ஏன் எங்னை பாபி என்று வைகுறாய்?

ரு—வண்டியை திருப்படா, சிலாக்கா.

சினன்—ஏன் என்னை சிலாக்கா—

அந்த நேரத்தில் அவனின் பிடரியில் ஒரு பெலமான அறை 'சடக்' என்று விழுந்தது. அடுத்து அறை கண்பொத்தவிழுந்தது. சினன் பெருஞ்சத்தமிட்டு குழறினன். "இருபது வெள்ளி கூலிபேசி

விட்டு, இந்தப்போக்கிரிப் பையன்கள் என்னை அடிக்கிறான்கள், ஐயோ என்னை அடிக்கிறான்கள்'' என்று குழறினன். இன்னுமொரு அறை கண்ணைப்பொத்தி விழுந்தது. சினன் விழுந்து கிடந்துகொண்டு பெரியசப்தத்துடன் கத்தினன்.

கறுப்பன்—அடேகுழறுதே— சத்தமிடாதே இண்ணைக்கு கொண்ணுடுவேன் தெரியுமா? (என்றான்)

சினன்அடங்கினன். அதன்பின் கறுப்பன் ரிக்ஷாவின்சேலையை எடுத்துவிட்டு "இறங்குங்கடி : மூடிக்கட்டியா வந்திய!" என்று இரு பெண்களையும் பார்த்து கேவலமாய்ச் சொன்னன். சாராயவாடையை விசிக்கொண்டு நின்றதால் தர்க்கஞ்செய்தல் பிரயோஜனத்தை கொடாது என்றுகண்டு நீலாக்ஷியும் ருக்குமணியும், நெஞ்சு பறைகொட்ட, பயங்கரத்தினல் முகம் வெளுக்க, கை கால் பதற, ரிக்ஷாவில்தானே இருந்தார்கள்.

முனியன்—பிடித்திழுத்து விடட்டுமா? இறங்குங்கடி; கழட்டு நகை. என்னிடமே கொடு ஜல்தி.

கரு—அடி சிறுக்கிகளா! சத்தம் வைத்தால் இதோ இருக்கிற துணியை வாயிலமுக்கிவிட்டு காட்டுக்குள் இழுத்துச் செல்லுவேன்.

முனி—சீக்கிரம்—கழட்டுங்கடி—

கறுப்பன்—எங்களிடம் அகப்பட்டு விட்டு தப்பலாமென்று நினைக்கிறயோ. நல்லாத்தானிருக்கு. பிடித்திழடா, இறங்கமாட்டாகளாம். கையால் பிடித்திழு. ஆமா, அது தான்.

முனியன்—இவளை நான் பிடிக்கிறேன் நீ யவளைப்பிடி. (என்று நீலாக்ஷியின் கையைப் பிடித்து இழுத்தான்.)

கறுப்பன்—நான் உன்னைப் பிடிக்கிறேன் வாடி—அடேயப்பா, பாப்பாரக்குட்டிபோலிருக்கே—எங்கே இதோ வெளிச்சம் படட்டும்.

ஆஹா! சோக்குத்தான்—குட்டி சோக்குத்தான்—இன்னைக்கு சோக்குத்தான்.

முனியன்—(நீலாக்ஷியைப்பார்த்து) கழட்டடி நகையை—இல்லே, நீ நல்ல குட்டி—அடி எண்ணு சொல்லக்கூடாது—ஆமா, கழட்டு குட்டி. கழட்டி என்னிடம் கொடு. இல்லேயோ இண்ணைக்கு குலே நடக்கும்.

கறுப்பன்—ஆமா குட்டி நீ இதெல்லாம் கழட்டிக்கொடு.

முனி—செல்லுது—சீக்கிரம் கழட்டு.

கறுப்பன்—ஒவ்—வொரு—புட்டி சாராயங் குடிக்க—ஒரு வருஷத்துக்கு காணும்.—இது (கொலுசை தொட்டு) என் பெண்டாட்டிக்கு போட்டு பார்க்கணும். அவளும் உன்னைப் போல் நல்ல குட்டி—நேரம்போகிறது. கழட்டுகுட்டி. கழட்டாவிட்டால்குலேதான். தெரியுமா? முனியா—ஏது! கழட்டுகிறதாகத் தெரியவில்லே. பிடிச்சிழடா காட்டுக்குள். இழுத்து வாடா அங்கே தானே கொண்டு போவோம்.—சோக்குத்தான்—குட்டி, இண்ணைக்குசோக்குத்தான்.

முனியன்—(கையைப் பிடித்திழுத்து) வாடிகுட்டி—

இருவரும் இரண்டுபேரையும் கைப்பிடியாயிழுத்துச் சென்றார்கள். நீலாக்ஷியும் ருக்குமணியும் உயிரிருந்தும் இறந்துவிட்டார்கள். இரண்டு தடிப்பயல்களை தட்டிவிட்டு வர இவர்களால் முடியுமா? "என்ன செய்வோ" மென்று காட்டுக்குள் நடந்து சென்றார்கள்.

நீலாக்ஷி—(நடந்து செல்லும் பொழுது தன் மனதுக்குள்) ஹே! அநாதரக்ஷகி! ஹே ஜெகதீஸ்வரி! என்னைஇவ்வளவு கஷ்டப்படுத்தவேண்டுமோ? முன் நான் பட்டகஷ்டமெல்லாம் போதாதா? இது யார் செய்த கொடுமை! அம்பிகா, உன் கோவிலுக்கு வந்து தரிசித்ததின் பலன்இதுவா? ஏ! நாகை நீலாக்ஷி, நீதான் காப்பாற்றவேணும் (என்று பலவிதம் ஸ்துதிசெய்தாள்.)

* * * * *

பத்து மணி யடித்தது. நீலாக்ஷி கோவிலிலிருந்து திரும்பவில்லேயே யென்று துரையப்பா யோசிக்கத் துவங்கினர். வீட்டு

வேலைக்காரரும் அதிசயிக்கத் துவங்கினார்கள். துரையப்பா தன் வேலைக்காரனொருவனைக் கோவிலுக்கு அனுப்பினார். அவன் "போய் திரும்பி வந்து," கோவிலில் ஒருவரும் இல்லை, கோவில் கதவுபூட்டியிருக்கு என்று தெரிவித்தான். ருக்குமணி வீட்டுக்கு ஆள் அனுப்பி, அங்கே விசாரணைசெய்தார், அங்குமில்லை. துளசியும் தன் மகளைத்தேடப் புறப்பட்டாள். ரோட்டு ரோட்டாய் ஆட்கள்சென்றுர்கள். நேரமும் சுமார் 11-மணி ஆய்விட்டது. நீலாக்ஷியைக் காணோம். துரையப்பா உண்மையில் நீலாக்ஷியில் அடங்காத அன்பு வைத்திருந்தார் என்பது அவர் பகிரங்கமாய்ச் செய்த அநேக செய்கைகள் காட்டினதை நாம் பார்த்திருக்கிறோம். உண்மையில் அதிக கவலைகொகொண்டார். தன்னை விட்டு "எங்கேயென்றாலும் போய்விட்டாளோ" என்று எண்ணினார். "சி சீ" அப்படி செய்பமாட்டாள். அவளைப் போல பெண்ணை நான் இன்னும் பார்க்கவில்லை என்று தனக்குள் தானே சொல்லி அந்த எண்ணத்தை விலக்கினார்.

கோலாலம்பூர் திறைசேரியில் கிளார்க் வேலையாயிருந்த இராமசாமி நீலாக்ஷியைக் கல்யாணஞ் செய்யவென்று எண்ணியிருந்ததும் பின் பிரதிகூலமானதும், இவருக்கு நீலாக்ஷி சொல்லியிருந்தாள். ஆகையால் அவனால் ஏதும் இடுக்கண் விளைந்திருக்கலாமோவென்று யோசித்தார். சுருக்கிச் சொல்லின் அன்று அவர் மனம் பட்டகலக்கம் கொஞ்சமல்ல.

கறுப்பனும் முனியனும் பெண்களை கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு இழுத்துச் செல்லும் சமயத்தில், இரண்டு மலாய்க்காரர் கையில்கத்தியுடன், சடுதியில் இவர்களுக்குமுன் எதிர்ப்பட்டார்கள். மலாய்க்காரரில் ஒருவன் "யார்" என்று கேட்டான். பதில் கிடைக்கவில்லை. இரண்டாம் முறையும் கேட்டான். பதிலில்லை. உடனே தன் தீப்பெட்டியை எடுத்து ஒரு குச்சி தட்டிப்பார்த்தான். மின்னல்போல் வேகத்துடன் தன் கைவிரல்களை மடித்து கறுப்பன் மூஞ்சியில் ஒரு குத்துபோட்டான். மற்றவன் முனியனுக்கு நெஞ்சில் ஒன்று அதேமாதிரி வைத்தான். கறுப்பன் அம்மாடி! கண் போச்சு, கண்போச்சு, என்று கண்ணைப் பொத்தினான். முனியன்

என் சால்குலே அறுந்து போச்சு. அப்பாடி—ஆ! ஊ!—என்று நெஞ்சைபொத்தினன். மலாய்க்காரன் இன்னுமொரு தரம் நெருப்புப்பெட்டியைத் தட்டி பெண்களைப்பார்த்து அம்மா நீங்க பயப்படவேணும். நீலாக்ஷியைப் பார்த்து "நான் யார் என்று தெரியுமா?" என்றான் நீலாக்ஷியின் முகம் பயங்கரத்தினல் வெளுத்துப்போனது மூளை கலங்கிவிட்டது. பயங்கரமதிகப்பட்டதினல் நிற்க இயலாமல் பதறினள். ருக்மணியும் அப்படியே நடுக்கமுற்றாள். மலாய்க்காரன் கேட்டததற்கு பதில் சொல்ல இயலாமல் நின்றாள்.

மலாய்க்காரன்—யார் வந்தாலும் இந்தக் கத்தியால் குத்திவிடுவேன். பயப்படவேண்டாம் (என்று பெண்களைத் தேற்றினன்.) அதன்பின் "இந்த ஆட்களைக் கட்டிக்கொண்டு போய் போலீஸ்டேஷனில் விடவேண்டும். இவர்களை சும்மாவிடக்கூடாது" என்றான்.

நீ—(ஒருவாறு பயங்காரம் நீங்கி) ஆமா! இவர்களைக் கட்டி போலீஸ் ஸ்டேஷனுக்கு கொண்டுபோகவேணும் (என்றுபதில்கொடுத்தாள்.)

க—கண்முழிபோச்சுதடா—வலி பொறுக்க முடியவில்லையே அம்மாடி—வலிக்கிறதே.—

மு—மூச்சுவிடமுடியவில்லையே—நீ தானேவந்து கூப்பிட்டாய் சனியன் போல் வந்து கூப்பிட்டாயே!

க—நானடா கூப்பிட்டேன்?

மு—நீதாண்டா வந்தாய். அம்மாடி வலிக்கிறதே—

மலாய்காரர் இருவரையும் பிடித்து அவர்கள் தலையில் கட்டியிருந்த துண்டினல் கட்டினர்கள். ஒருவன் கைதிகளை நடத்திக்கொண்டுவர, மற்றவன் பெண்களை யழைத்து வந்து ரிக்ஷாவிலேற்றினன். அதன்பின் அழுதுகொண்டிருந்த சீனனை எழுப்பி, இந்தப்பெண்களை யேற்றி "ரிக்ஷாவை இழுத்துசெல்லு" என்றுகட்டளையிட்டான் சீனன் எழுந்து தன்னை யடித்தவர்களைப் போலீசில் விடவேணுமெ

ன்று நினைத்து, ரிக்ஷாவை இழுத்துச் சென்றான். மலாய்காரர் இருவரும் கறுப்பனையும் முனியனையும் நடத்திக்கொண்டு வந்தார்கள்.

அரிகிருஷ்ணநாயுடு காட்டுக்குள் தனியே நின்றுகொண்டு "நீலாக்ஷியை இப்போ கறுப்பனும் முனியனும் கொண்டுவந்து சேர்ப்பார்கள்" என்று மனம் புளகங்கொண்டு "நீலாக்ஷி நீயா என்னை அவமானப்படுத்தினாய்? மெள்ளச் சொல்லலாமே? என்று சொல்லிவிட்டு என்ன சொன்னாய். சிறுக்கி இன்றைக்கு பார் உன்னை அரையில் துணியும் இல்லாமல் இந்தக்காட்டில் —
என்னையா கேலிசெய்தாய்? உன்னுடைய கண்ணுக்கு நான் கேலி செய்யப்படக்கூடிய ஆள் தானா?" இவர் இந்த விதமாய் தன்னாத்திரந் தீர்க்கிறேனென்று வெளியாய்ச் சொல்லிக்கொண்டு நிற்கும்பொழுதே சீனனுக்கு பிடரியில் கறுப்பன் அடி கொடுத்தான். அதைக்கண்ணுற்றமாத்திரமே அரிகிருஷ்ணநாயுடு திடுக்கிட்டு விட்டார் ரிக்ஷா இழுத்துவரும் சீனனுக்கு ஒரு தொந்திரவும் செய்யக்கூடாதென்று இவர் தன் ஏவலாட்களிடஞ் சொல்ல மறந்து விட்டதுவே யாவையுங் குழப்பினது.

அரிகிருஷ்ணநாயுடு உடனே அவ்விடத்துக்கு ஓடிப்போகலாமென்று நினைத்தாலும் அடிவிழுந்தபின் அங்கேபோகிறது நல்லதல்ல என்று நின்றுவிட்டார். சிலவேளை யாராகுதல் ரோட்டு வழியால் வந்தால் தன்னைக் கண்டுவிடுவார்கள் என்று எண்ணினார். கறுப்பனும் முனியனும் எவ்விதத்திலும் பெண்ணைக் கொண்டுவருவான்கள் என்று தனக்குத்தானே திருப்திகூறி உட்கார்ந்திருந்தார். ஆனால் அவ்விருவரும் குழறின சத்தத்தைக் கேட்டவுடன் இவர் அந்த இடத்தைவிட்டு சப்தமில்லாமல் அகன்றுவிட வழிதேடினார் அரங்கசாமியும் சீனனுடைய அழுகையைக் கேட்டு காட்டுக்குள் புகுந்தான். இவனும் ரிக்ஷாகாரனுக்கு அடிவிழுந்தபொழுது தூரத்தில் வந்தவனாகையால் சீனன் வைத்த சத்தத்தைக் கேட்டான். ஆகையால் சீனன் தன்னைக் காட்டிக் கொடுப்பானென்று எண்ணியே காட்டுக்குள் மறைந்து நின்றான். கறுப்பனும் முனியனும் கட்டுண்டு

போவதையும், இரண்டு மலாய்க்காரர் கத்தியுடன் செல்லுகிறதையும், பார்த்து இரகசியமாய் ஏக்கத்துடன் வீடு சென்றான்.

சுமார் $12\frac{1}{2}$ மணியளவில் துரையப்பா வீட்டில் நீலாக்ஷியும் ருக்மணியும் வந்த ரிக்ஷா நின்றது. வேலைக்காரரும், துரையப்பாவும் வெளியில் வந்து பார்த்தார்கள். நீலாட்சி ஏக்கத்துடன் யாவுந் துரையப்பாவுக்குத் தெரிவித்தாள். நீலாட்சி சுருக்கிச் சொன்னவைகளைக் கேட்டு துரையப்பா ஒரு தீபத்துடன் வந்து மலாய்க்காரரையும் கைதிகளையும் பார்த்தார். மலாய்க்காரனை நோக்கி "சைட் இப்ரஹீம்! நீயா! இவர்களைப் பிடித்தது, நீயா!"

சை. இ—நாங்கள் இல்லாவிடின் இந்தத் திருடர்கள் பெண்களிருவரையும் கொலை செய்திருப்பார்கள்.

துரை—இவர்கள் அப்படியே நிற்கட்டும். நீங்களிருவரும் கண்டிருக்காவிடின், இந்தப் பயல்கள் உண்மையில் பெண்களை இருவரையும் கொலை செய்திருப்பார்கள். உங்களையும் கடவுள்தான் அவ்விடத்துக்கு அனுப்பினதுபோலிருக்கு!

சை. இ—நான் இரண்டு வாரத்துக்குமுன் இங்கே வந்து யஜமானைத் தேடினேன். அப்பொழுது யஜமானிங்கில்லை. இந்தம்மாள் என்னை யொருநாளாகிலும் காணாமலிருந்தாலும் அன்றைக்கு செய்த நன்மை நான் ஆயுள்பரியந்தம் மறவேன். என்னுடைய எருமைமாடுகள் இரண்டும் மழை வெள்ளத்துடன் அள்ளுண்டு போய்விட்டன. அவைகளைத்தான் தேடிப் பார்த்துக் கொண்டு திரிந்தபொழுது, எனக்குத் தெரிந்த ஒரு சீனன் "இரண்டாங்கட்டையில் பத்தை மறைவில் இரண்டு எருமைகள் படுத்திருப்பதைப்பார்த்தேன்" என்றுதெரிவித்தான். ஆகையால் என் மைத்துனனையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டு தேடிக்கொண்டு வந்த பொழுது, இந்த இரண்டு திருடரும், ரிக்ஷா இழுத்து வந்த சீனனை அடித்துவிட, அவன் விழுந்து அழுது கொண்டிருப்பதை ரிக்ஷாவிலிருந்த தீபங்களினால் கண்டோம். அதன் பின் கிட்ட நெருங்கினோம். இவர்கள் இந்த இரண்டு பெண்களையும் பிடித்து இழுத்துக்கொண்டு வருவது இரு

ளில் ஜாடையாய் கண்ணுக்குத் தோற்றப்பட்டது. இன்னும் நெருங்கி "யார்" என்றேன். பதிலில்லை: இரண்டாம் முறையும் "யார்" என்றேன். பதிலில்லை: உடனே தீப்பெட்டியைத் தட்டிப் பார்த்தேன். ஒருக்ஷணப்பொழுதில் எனக்கு பசி தீரும்படி உதவி செய்த சிமோட்டியென்று கண்டேன். அதன்பின் நிமை நொடிநேரத்தில் இவனை ஒரு குத்தில்விழுத்தினேன். என் மச்சான் அவனுக்கு ஒரு குத்து வைத்தான். அவனும் புரண்டான். இருவரையும் பிடித்துக் கட்டி இதோ கொண்டு வந்து சேர்த்து விட்டோம்.

து—அதிக சந்தோஷம் சைட்இப்ராஹீம். நீ இன்றைக்கு செய்த உதவியை நானாகுதல் இவர்களாகுதல் மறந்திடமாட்டோம். உன்னுடைய எருமை மாட்டைத் தேடிப்பார். இதோ நான் கொடுக்கிற உபகாரத்தையும் பெற்றுச்செல் (என்று ஒவ்வொருவருக்கும் 20 வெள்ளிகொண்டுவந்து கையில் வைத்தார்) இருவரும் எங்களுக்கு வேண்டாமென்று மறுத்தார்கள். துரையப்பா "நீங்கள் இதையேற்றுக்கொள்ளத்தான் வேணும்" என்று கொடுத்து போய்வாருங்கள் என்று அனுப்பினார். இருவரும் வணக்கத்துடன் திரும்பினார்கள். நீலாக்ஷியும் ருக்குமணியும் ஸ்துதிகூறினார்கள். நாளை வந்து எங்களை பார்க்க வேண்டும் என்றுவேண்டினார்கள்.

மலாய்க்காரரை அனுப்பிவிட்டு கறுப்பனையும் முனியனையும்பார்த்து துரையப்பா பின் வருமாறு கேட்டார்:—

"நீங்கள் இருவரும் களவுசெய்யவேண்டும் என்று நின்றதாகத் தோன்றவில்லை. உங்களை யாரோ அனுப்பிக் காட்டுக்குள் மறைந்து நின்றிருக்கிறார்கள் என்பது பூரணமாக தோற்றுகின்றது. அவர் யார் என்று சொன்னால் நீங்கள் தப்புவீர்கள். இல்லையோ, உங்களுக்கு சவுக்கடிபோட்டு இப்பொழுதுதானே போலீஸ்டேஷனுக்கு அனுப்பிவைப்பேன்"

கறுப்பன்—சாமி, உங்க வூட்டிலிருக்கிற அம்மாள் என்று அறிந்தா நாங்கள் ஒண்ணுஞ் செய்திருக்க மாட்டோம்.

து—நான் கேட்ட கேள்வி யதல்ல: உங்களை யனுப்பினதுயார்

கறுப்பன்—மன்னியுங்க சாமி, கும்பிடுகிறோம்; மன்னியுங்க.

துரை—யார் அனுப்பினது என்று சொல்லுவாயா இல்லையா?

க—சாமி கொஞ்சம் தண்ணீரைக்குடித்தோம்.—

துரை—(வேலைக்காரனை நோக்கி எடுத்துவா சவுக்கு.

முனியன்—சொல்லுகிறோம் சாமி, எங்களை யடிக்கவேண்டாம்.

துரை—(சவுக்கை கையில் வாங்கி) இப்பொழுது சொல்லடா.

முனியன்—நான் ஊட்டிலிருந்தேன். இவன்தான் வந்து ஒரு கதை இங்கே வாடா என்ருன்.

கறுப்பன்—நான் மாத்திரம்தான வந்தேன்?

முனியன்—இவன்தான் சாமி வந்து கூப்பிட்டான். அந்தபோலீசுக்கு பெரிய துரை ஆபீஸிலிருக்கிற கிளார்க் ஐயா வரட்டும் என்று கூப்பிட்டான். நான் போனேன். அந்த ஐயா ரொம்ப சாராயத்தை ஊற்றி கொடுத்தாங்க. அதன்பின் ரிக்ஷாவில் இரண்டு பெண்கள் வருவாங்க; அவங்களைப் பிடித்துக் கொண்டுவந்து என்னிடம் கொடுங்க எண்ணு, இவனுக்கும் எனக்கும் சொன்னுங்க: குடிவெறியால் செய்திட்டோம்: மன்னியுங்க: கும்பிடுகிறேன்.

துரை—எங்கேவைத்து சாராயங் கொடுத்தான் ?

மு—அவங்க ஊட்டில் தான் வச்சுகொடுத்தாங்க.

துரை—இரண்டாங் கட்டைக்கு எப்படி போனுய்?

மு—அவங்களும் கூடவே வந்தாங்க.

துரை—வந்து எங்கே நின்ருன்?

மு—காட்டுக்குள் ஒளிந்து நின்றுங்க.

க—இதுதான் சாமி உண்மை.

துரை—உங்களுக்கு இப்பொழுது ஐவ்வைந்து அடி இந்தசவுக்கால் தருகிறேன். வாங்கிக்கொண்டு நீங்கள் எப்பொழுதும் நினைத்திருக்க வேணும். அன்றியும் சாராயவெறியால் இன்னொருவரையும்

பிடித் திழுக்காமலிருக்கவேணும். சவுக்கடி நினைவு வரச்செய்யும் என்ற சொல்லோடு இரண்டுபேருக்கும் ஐவ்வைந்து சவுக்கடி முதுகில் போட்டார். அத்துடன் "ஓடு" என்று துரத்திவிட்டார். அதன்பின் சினனை நோக்கி நீ எப்படி இரண்டாங்கட்டைக்கு இவர்களை இழுத்துச்சென்றாய்? என்று வினவினர்.

சி—உண்மையைச் சொல்லிவிடுகிறேன். ஒரு தமிழ் ஆள் வந்து, உங்கள் தமிழ் கோவிலுக்கு முன்னால் என்னுடன் பேசிக்கொண்டு நின்றது. இந்தப் பெண்களிருவரும் தன் சிநேகிகளென்றும், இரண்டாங்கட்டையில் கொண்டுவந்து விடவேணுமென்றும் சொன்னான். நான் மெய்யென்று நம்பி விட்டேன். ஆகையால் தான் அங்கே இழுத்துச் சென்றேன். அப்பொழுது இங்கே கொண்டுவரப்பட்ட ஆட்கள் இருவரும் வந்து என்னை யடித்தார்கள். நான் குழறிக்கொண்டு விழுந்தேன். அதன்பின் மலாய்க்காரர் அவர்களைக்கட்டிக்கொண்டு வந்தார்கள். அப்புறம் இங்கே போகும்படி சொன்னார்கள். வந்தேன்; இவ்வளவுதான் உண்மை.

துரை—அப்படியானால் உன்னில் குற்றங் கிடையாது. நீ போகலாம்.

நீலாட்சி—இவன் சொன்னதில் சிலதை மறைத்துவிட்டான். விழுந்து கிடந்து குழறினபொழுது " 20 வெள்ளி கூலிபேசிவிட்டு, இப்போது அடிக்கிறாங்க " என்று குழறினது எனக்கு ஞாபகமிருக்கு. என்? ருக்மணி நீ கேட்கவில்லையா?

ரு—எனக்கு அது காதில் விழுந்த ஞாபகமில்லை. இவனை அவர்கள் அடித்தபொழுது எனக்கு அஞ்சும் கெட்டு, அறிவும் கெட்டு, புத்திகலைந்து போனது. மரம்போல் விறைத்து விட்டேன். ஒன்றும் ஞாபகமில்லை.

நீ—என்னமோ நானும் ஏங்கிதான்இருந்தேன். ஏதோ மாரியாத்தாவின் ஆணையால் தப்பிப் பிழைத்தோம். அம்மாள் உன்னைத்தேடிக்கொண்டு திரிவாள். இந்த ரிக்ஷாவில்தான் என் வேலைக்காரனை

துணையாகக் கூட்டிக்கொண்டு, நீ வீட்டுக்குத்திரும்பு—நேரஞ் சென்றுவிட்டது. நாளைக்குவா—

ரு—ஆம் அக்கா, நான் போய் நாளைக்கு வருகிறேன்.

நீ—நீயும் கூடப்போய் வீட்டில்விட்டுவா (என்று வேலைக்காரனொருவனுடன் அனுப்பினுள்.)

—:0:—

## 9-ம் அத்தியாயம்.

கறுப்பனும் முனியனும் சொன்னவைகளிலிருந்து உன்னையும் ருக்மணியையும், இரண்டாங்கட்டைக்கு ரிக்ஷாவில் கொண்டுபோய்த் தீங்கு செய்ய யோஜனை ஆழமாய் செய்யப்பட்டிருக்கிற தென்பது எனக்கு நன்ருய்த் தெரிகிறது. அப்படி யோஜனை செய்தவர் ஒருவரல்ல வென்றும், இன்னும் அவருடன் துணையாக நின்றவர்களிருக்கிருர்க ளென்றும், எண்ணவேண்டியிருக்கு. முதலாவது சினனிடம் கோவிலுக்கு கிட்ட நின்று பேசினவர், அரிகிருஷ்ணன் அல்லவென்பது தெளிவாயிருக்கு.

நீ—அரிகிருஷ்ணனுடன் இராமசாமியும், இன்னும் இராசையனும் சேர்ந்திருக்கலாம் போலிருக்கு.

து—அப்படியுமிருக்கலாம், அல்லது என்னுடன் திருப்தி இல்லாமலிருக்கிறவர்களில் யாராகுதல் சேர்ந்திருக்கலாம்.

நீ—உங்களுடைய பகைவர் எனக்கு தீங்கு விளைவிக்க அவ்வளவு சீக்கிரத்தில் எண்ணமாட்டார்கள். அவர்களுக்கு மன வைரமேற்படக்கூடிய தொன்றும் நீங்க செய்யவுமில்லை. நானும் செய்யவில்லை. ஆகையால்,—

துரை—ஆம்: நீ சொல்வது சரிதான். ஆகையால் உன்னில் கோபமுள்ளவர்கள்தான் அரிகிருஷ்ணனுடன் சேர்ந்து கொண்டார்கள் போலிருக்கு. ஆனல் இந்தக் காரியத்தில் நாம் கோர்ட்டுக்குப் போகிறதும் மரியாதையாயிராது. என்னல் கூடியமட்டும் அரிகிருஷ்ணனுடன் கூடினவர்கள் யார் என்று அறிந்துகொள்ளத் தெண்

டிப்பேன். அதன்பின் அவர்களுக்கு சரியான சிட்சை பறையனை விட்டு செய்வித்து விட எண்ணியிருக்கிறேன். அந்த நன்றி கெட்டவன் இப்படி எண்ணிவிட்டானு!

நீ—பறையரை பறைப்பவும் வேண்டாம்; அதனால் பகைவருவிக்கவும் வேண்டாம். அவன் செய்தது அவனுடனே போகட்டும். அதை மறந்து விடுங்கள்.

துரை—அந்தக் கொட்டைப்பாக்கு குடுமியுந் தலையுமாய் நன்றி கெட்ட நீசன் என்ன யோஜனையெல்லாம் செய்தான்! என் வீட்டில் அவனை அண்டினதினால்தான் இது வெல்லாம் நிகழ்ந்தது.

நீ—போனதெல்லாம் போகட்டும்; அதைப்பற்றி இனி நினைக்க வேண்டாம். மறந்துவிடுங்க—அதனால் என்னதான் வந்துவிட்டது?

துரை—அவன் இன்றைக்கு உன்னை மோசஞ் செய்துவிட்டால் என் மனம் என்ன பாடுபடும்? பாவி—நீச்சன். இப்படி யோஜனை செய்தானு?

நீலா—(புன்னகையுடன்) நான் இறந்துவிட்டால் என்ன செய்வீர்கள்?

துரை—இறந்துவிடுகிறதற்கும் இதற்கும் வித்தியாசமுண்டு. இறந்துவிட்டாலும் நானும் இறக்கவேண்டியதுதான். [என்று நகைத்தார்]

நீலா—ஆமா! எல்லாரும் அப்படித்தான் சொல்லுகிறது.

துரை—இதுவெல்லாம் நீ இவ்வளவு லக்ஷணமாய் பிறந்ததினுல்தான் நேர்ந்தது. இதிலிருந்தால் யாராகுதல் வந்து உன்னை பிடித்துக்கொண்டு போய்விட்டால் நான் என்ன செய்வேன்? (என்று கையில்பிடித்து அறைக்குள் சென்றார்.)

* * * *

அரிகிருஷ்ணநாயுடுவின் பாடு எப்படி யென்று பார்ப்போம். அவர் காட்டுக்குள் ளிருந்து புறப்பட்டு வீடு சென்று தன் மதிகேட்டை எண்ணித் துக்கித்துக்கொண்டு, ஏக்கம் பிடித்திருந்தார். கறுப்ப

னும் முனியனும் தன்னைக்காட்டிக் கொடுத்தால் உத்திபோகமும் போய்விடுமென்ற கவலையே இவர் மனதில் குடிகொண்டது. அன்று இராமுழுதும் தூக்கமுமில்லாமல் கலங்கிக்கொண்டிருக்க கீழ் திசையில் கதிரவன் தன் சப்தகிரணங்களோடு (தமிழ் பாவலரினுல் சப்த குதிரைகள் என்று ரூபகம் செய்யப்பட்ட ஏழு வர்ணங்களோடு) தோற்றினன். அடர்ந்து ஒன்றோடு ஒன்ருக பின்னப்பட்ட விருக்ஷங்களின் மரகத மென்னும் பச்சையான இலைகளையுடைய கொம்புகளுக்கு மேல் தூக்கமுற்றிருந்த பக்ஷி ஜாதிகள், கீழ்திசையில் தோற்றும் ஆதித்தனின் வருகையைத் தங்கள் இனிவான குரலினுல் வாழ்த்தினுர்கள். செங்கதிரோனின் கிரணங்கள் வீட்டின் ஜன்னல் வழியாய் உள்நுழைந்து தூங்குபவரை யெழுப்பின. அப்பொழுது, அரிகிருஷ்ணநாயுடுவின் வீட்டின் கதவில் யாரோ தட்டி, அவரையழைத்தது அவர் காதில் கேட்டது. கதவைத்திறந்து யார் என்று பார்த்து "வாரும், வாரும், ஏமாந்து போனேம்" என்ருர்.

அர—என்ன வேலை செய்தீங்க? அந்தப் பயல்கள் என் சினேயடித்தாங்க?

அரி—அந்த மடையர்களுக்கு நான் சொன்ன தொன்று அவர்கள் செய்த தொன்று. மோசம் வந்துவிட்டதே !

அர—இரண்டு பேரையும் இரண்டு மலாய்காரர் கட்டிக் கொண்டு போனுர்களே !

அரி—கட்டிக்கொண்டு போனுர்களா? அந்த மலாய்காரர் யார் என்று தெரியுமா?

அர—இருட்டில் யார் என்று நான் சொல்லமுடியும்?

அரி—எங்கே கொண்டுபோய் இருப்பார்கள்? போலீஸ் ஸ்டேஷனுக்குத்தான் போயிருக்க வேண்டும். அப்படியானுல் நான் இப்பொழுது துப்பாசியைக் காணவேணும்.

அர—முன்னிருந்த துவிபாஷகர் இராமசந்திரய்யர்: அவர்வேறு இடத்திற்கு போய்விட்டார் என்றும், இப்பொழுது இராசையா

என்று ஒரு யாழ்ப்பாணத்தார் வந்திருக்கிறரென்றும் அறிந்தேன். அவர் துரையப்பாவுக்கு சார்பாய்த்தானிருப்பார். அவரைக் காணுவதில் என்ன சுகமிருக்கப்போகிறது?

அரி—துப்பாசிக்கும் துரையப்பாவுக்கும், மனச் சந்தோஷமில்லையென்று நான் கேள்வி. நீலாக்ஷியும் அவர்மேல் கோபமாயிருக்கிறளென்று அறிந்தேன். துப்பாசியுடன் நான் நன்றாய் பேசுகிறதுண்டு. கறுப்பனும் முனியனும் ஏதோ சாராய வெறியால் அப்படிச் செய்து விட்டார்கள். ஆகையால் அதை ஒருவிதமாய் வழக்குக்குவிடாமல் அசட்டை செய்து விடவேண்டும் என்று கேட்டால் அப்படிச்செய்ய அவரால் முடியும். அத்துடன் போலீஸ் இன்ஸ்பெக்டரையும் நான் கண்டு, கேசுக்கு விடாமல் நிறுத்துவேன்.

அர—நீங்கள் எண்ணுகிறபடி முனியனும் கறுப்பனும் போலீஸ்டேஷனில் அடைபடவில்லை. துரையப்பா வீட்டுக்கே கொண்டு போகப்பட்டார்கள் போலிருக்கு. நான் வருகிறபொழுது சார்ஜனை பார்ப்பதுபோல், அங்கே போய் பார்த்துதான் வருகிறேன்.

அரி—(ஏக்கத்துடன்) அப்படியா? துரையப்பா வீட்டுக்கு மலாய்க்காரர் கொண்டுபோய்விட்டார்களா? பகை யுண்டாகிவிட்டதே!

அர—எப்படியென்றாலும் இதனால் பெரும்பகை விளையும்—அது நிச்சயம்: இது நிற்க: நான் என் வீட்டுக்குத் திரும்பினபொழுது இராத்திரி வீட்டில் பெரிய கூக்குரலாயிருந்தது. ஒரு நல்லபாம்பு வீட்டுக்குள் வந்து புகுந்துவிட்டது. எப்படி உள்ளுக்கு பிரவேசித்த தென்று ஒருவருக்கும் தெரியாது. பாம்போ மிகவும் பெரிது. அங்கே நின்றவர்கள் அதை யடிக்கப் பார்த்தார்கள். நான் தந்திரமாய் ஒரு சருவக்குடத்திற்குள் புகுந்து கொள்ளும்படி செய்து, குடத்தை ஒரு சருவச்சட்டியால் மூடி வைத்துவிட்டு வந்திருக்கிறேன். பாம்பு வீட்டுக்கு வருவது நன்மைக்கல்ல. இன்றைக்கு சனிக்கிழமை; நாளைக்கு கோடில்லை. கோர்ட்டுக்கு போகிறதானல் இனி திங்கட்கிழமைதான் போவார்கள். ஆகையால் அந்தப் பாம்பை நாம் பிரயோஜனப்படுத்தலாம் என்று எனக்குதோற்றினது. அடியாமல் பிடித்துவைத்திருக்கிறேன்.

அரி—எப்படி பிரயோஜனப்படுத்துகிறது?

அர—அந்தப் பாம்பை துரையப்பாவின் படுக்கையறையில் அல்லது கட்டிலில் விட்டுவிட்டால், நீலாக்ஷியும் துரையப்பாவும் இராத்திரிக்கே குளோஸ் ஆய்விடுவார்கள். இருவரில் ஒருவராகுதல் பாம்பிடம் கொத்துவாங்குவார்கள். கோர்ட்டுக்கு போகிறதும் பகை சாதிக்கிறதும் தம்மிட்டுவிடும். தொந்திரவுஒன்றும் நிகழாது. அன்றியும் நீங்க துரையப்பாவுடன் சிநேகமாயிருந்தும், அங்கே நாலைந்து வாரம் தங்கியிருந்தும், அதன்பின்—பலதையும் யோஜிக்கில், இது தான் நலம் என்று எனக்குத் தோன்றுகிறது.

அரி—பாம்பை யார் கொண்டுபோய்விடுகிறது? அது சுலபமான காரியமா? செய்யமுடியாத காரியத்தைச் சொல்லுகிறீர்.

அர—துரையப்பாவின் வேலைக்காரனொருவன் என் வீட்டுக்கு பலமுறைகளிலும் வந்திருக்கிறான். அவனுடன் நான் நன்றாய் பழகியிருக்கிறேன். அவனுக்கு 100 வெள்ளி தருவதாக வாக்குக் கொடுத்து குடத்துடன் பாம்பைக் கொண்டுபோய்க் கட்டிலில் விட்டு விடச் சொன்னால் செய்வான். எப்படியோ அது நான் செய்து வைப்பேன்.

அரி—அந்தப்படி செய்யின் 100 வெள்ளி நான் கொடுக்கிறேன். என்னுடைய பெயர் மாத்திரம் வெளியில் வரக்கூடாது?

அர—உங்களின் பேர் ஒரு பொழுதும் வெளியே வராது.

அரி—அப்படியானால் இன்றைக்கே செய்து முடித்துவிடுவீரா?

அர—இன்றைக்கு அல்லது நாளைக்கு முடிப்பேன். 100 வெள்ளியில் அரைவாசி இப்பொழுது கொடுங்க : மிச்சம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

அரி—இன்றைக்கு 1 மணிபோல் வாரும் தருகிறேன். இதற்கிடையில் துப்பாசியையும், இன்ஸ்பெக்டரையும், இதுவிஷயமாய் நான் போய் பார்த்து வருகிறேன். என்னுடைய ஆபீஸிலிருந்து 1 மணி போல் திரும்பிவிடுவேன். அப்பொழுது சகலதும் தெரிவிக்கிறேன்.

அர—துரையப்பாவுடன் சிநேகிதனமாயிருந்தாலும் அவருக்கு நேர் விரோதமாயும், பகிரங்கமாயும், உங்களுக்கு துப்பாசி உதவிபுரிவாரா?

அரி—அவருடைய மனதை அறிந்து நான் யாவும் வெளியிடுவேன். எப்படியென்றாலும் நான் கறுப்பனுக்கும் முனியனுக்கும் உதவி செய்யும்படிக்கே பேசுகிறேன் என்பதை தெரிவிப்பேன். அப்பொழுது துப்பாசியின் மனக்கிடக்கையை அறிந்துகொள்ளக் கூடாதா?

அர—வெகு புத்தியாய்ப் பார்த்துக்கொள்ளுங்க. நான்போய்வருகிறேன்.

அரிகிருஷ்ண நாயுடுவை விட்டு அரங்கசாமி டமன்சாலு ரோட்டால் சென்று, துரையப்பாவின் வேலைக்காரனை காணும்படி அவர் வீட்டுக்குச் சுமார் 50கஜம் தூரத்தில் நின்றுகொண்டிருந்தான். அப்பொழுது துரையப்பாவின் வேலைக்காரனாகிய உறுமாண்டி ஒருவர்களுடன் மத்தியானசாப்பாட்டுக்குத்தேவையான உணவுபொருட்களை வாங்கும்படி புறப்பட்டு வந்தான். உறுமாண்டி ஒரு பிரமதடியன்: கல்வியில் சூனியன். புத்தியில் மடையன். சர்வமுட்டாள். சொன்னதைச் செய்வான்.

அர—(அவனைப்பார்த்து) ஏது? இவ்வளவு சீக்கிரமாய் கடைக்குப் புறப்பட்டுவிட்டாய்? (என்று சிரித்தான்.)

உ—ஐயா 11மணிக்கு திரும்பி விடுவார். அதற்கிடையில் சமையல் முடியவேண்டும். அதுதான் சீக்கிரமாய்ச் செல்லுகிறேன்.

அர—சரி, நானும் கடைக்குத்தான் வருகிறேன். (என்று நடந்துகொண்டு) இன்றைக்கு ஒரு கன்றிறுக்வேலை யொன்று செய்ய வேணும்; அதற்காகத்தான் ஆள் பார்த்து வந்தேன்.

உ—என்ன கன்றிறுக் வேலை?

அர—அது செய்து முடித்தால் எப்படியென்றாலும் 200 வெள்ளி நாளைப்பொழுது சரியுமுன் லாபமடையலாம். வேலையும் சுலபமான வேலை. அதற்காக ஆள் தேடிப்பிடிக்கும்படி செல்லுகிறேன்.

உ—உண்மைதானா?

அர—நானும் பிரளி பேசுகிறவனா?

உ—அதற்கு எத்தனைபேர் வேணும்?

அர—ஒரு ஆள் போதும்; சற்றே தைரியசாலியாயிருக்கவேணும்; வேலையோமிக லெகுவில் செய்யலாம்.

உ—நான் செய்யமுடியுமா?

அர—நினைத்துத் துணிந்தால் நீ செய்து முடிக்கலாம்—

உ—அப்படி நான் செய்யக்கூடுமானால் வருகிறேன். எனக்கு என்ன லாபம் கொடுக்கிறீங்க?

அர—வெள்ளி ரொக்கம் 100 தருவேன்—

உ—சத்தியமாகத்தானோ? வேலை என்னவென்று சொல்லுங்க.

அர—நீ உண்மையில் செய்து முடிப்பேன் என்று முன் வந்த தன்பின் நான் சொல்லுவேன்—நீ செய்தவுடன் வெள்ளி 100ம் வாங்கிக்கொள்.

உ—நான்தானே செய்து முடிப்பேன் என்று சொல்லுகிறேன். வேலை என்னவென்று சொல்லுங்க.

அர—அப்படியானால் நீ சாமான்களை வாங்கிக்கொடுத்துவிட்டு என்னுடன்வா; வேலையின் விபரம் விளங்கப் படுத்துகிறேன்.

உ—அப்படியானால் ஒரு சாட்டுச்சொல்லி, அம்மாளிடம் கேட்டால்தான் உத்திரவு கொடுப்பாங்க. இப்பொழுதே வரவேணுமா?

அர—ஆமா: இப்பொழுது வரமுடியுமானால் வா; என்ன சாட்டுச் சொல்லப்போகிறாய்? ஓ! இந்தவிதமாய்ச் சொல்லு: "என்னுடைய சின்னாயிக்கு ரொம்ப சீக்காம்: அடுத்தவீட்டு குழந்தையம்மாள் சொன்னாங்க: என்னையழைத்து வரும்படி சின்னாயி சொல்லிவிட்டாங்களாம்; நான் போய்வர உத்திரவு கொடுங்க: நாளைக்கு வருகிறேன்" என்று சொல்லு. உன்னுடைய அம்மாள் உத்திரவு கொடுப்பாள். அதன்பின் வீட்டுக்குவா: நீ வராவிட்டால் வேறு யாரையும் பார்த்து, அவனுக்கு வேலையைக் கொடுத்துவிடுவேன்.

உ—நான் எப்படியென்றாலும் வருவேன். ஒரு நாளைக்கிடையில் 100-வெள்ளி சம்பாதிக்கிற அதிர்ஷ்டத்தை இழந்து இருப்பேனா? இன்னொருவனையும் அமர்த்தவேணும்.

அர—நல்லது: நீ இன்றைக்கு 2மணிக்கு வீட்டுக்கு வா; உனக்கு வசதியான சாக்கை சொல்லி வீட்டுக்கு வந்து சேரு.

துரையப்பா அதிகாலையில் எழுந்து 7½-மணியளவில் தன் உத்தியோக ஸ்தானத்துக்குச் சென்றார். நீலாக்ஷி முதலுள் தனக்கும் ருக்மணிக்கும் நிகழ்ந்தவையை நினைத்து நாகை நீலாக்ஷியை துதித்தாள். "ஹே! நீலாக்ஷி! என் தாயே! அகிலேஸ்வரி! லோகநாயகி! அநுதாக்ஷி! உன் கிருபையல்லாது வேறு துணை எனக்கு ஏது? நீயே அந்த நேரத்தில் மலாய்க்காரரை உவ்விடம் கொண்டுவந்துவிட்டாய்! என் அம்மணி! உன்னை ஸ்துதிக்கின்றேன், உனக்கு தெண்டனிடுகின்றேன்" என்று உண்மையான மன அன்புடன் பணிந்து தொழுதாள். ருக்மணியும் வந்தாள். இருவரும் முதலுள் பட்டபாட்டைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது நீலாக்ஷியின் வேலைக்காரியிலொருத்தி வந்து "கிள்ளானிலிருந்து ஒரு பெண்ணும், அவளுடன் ஒரு வயோதிகமான கிழவரும் வந்து, உங்களைப்பார்க்க வந்தோம் என்றார்கள். நான் குசினி விறாந்தையில் நிற்கும்படி சொல்லிவிட்டு வந்தேன். ருக்மணி வீட்டுக்குத் திரும்ப புறப்பட்டதனால் அவளை யனுப்பிவிட்டு, நீலாக்ஷியெழுந்து போய்ப்பார்த்து "ஆஹா--மங்கையர்க்கரசி நாச்சியார்-கறுப்பாயி 3ம் நீ! நீயா!! இங்கே எங்கே வந்தாய்—வா—உட்காரு"—என்று சிரித்தாள். அதன்பின் இந்தத்தாத்தா யார்— உட்காருங்க—(என்றாள்)

கறு—இந்த தாத்தாவை என்னுடன் துணைக்கு அழைத்து வந்தேன். உங்களைப்பார்க்கும்படி தான் வந்தேன்.

நீ—சந்தோஷம்— இப்பொழுதுதான் ரெயிலால் வருகிறாய்போலிருக்கு. முகத்தைக்கழுவு. காப்பி சாப்பிடலாம்.—உன்னைக்கண்டது சந்தோஷம்—(என்று ஆனந்தமாய்ச் சிரித்தாள்.)

க—தான் கொண்டுவந்த ஒரு பழக்கூடையை வைத்து உட்கார்ந்து (புன்னகை செய்தாள்.)

நீ—(பழக்கூடையைப் பார்த்து) இவைகள் ஏன்? வீண் செலவு செய்து விட்டாய் போலிருக்கே!

க—வீண் செலவல்ல: பிரயோஜனமான சிலவுதான். உங்களுக்கு செலவழிக்கிறது, வீண் செலவா?

நீ—பின்பு பேசிக்கொள்ளலாம். இப்பொழுது இந்த தாத்தாவையும் அழைத்து நீயும் முகம் கழுவி காப்பி சாப்பிட்டபின் பேசிக்கொள்ளலாம். இப்பொழுது எங்கேயிருக்கிறாய்? (என்று முகமலர்ச்சியுடன் கேட்டாள்.)

க—உங்கள் புண்ணியத்தால் கிள்ளானிலிருக்கிறேன்:

முன்னிருந்ததிலும் கறுப்பாயியின் முகம் இப்போ குளிர்மைகொண்டது. சொற்பளவில் கவலை இல்லாதவள் போல தோற்றினாள்.

கையில் ஒரு ஜோடிகாப்பும், கழுத்தில் ஒரு அட்டிகையும், காதில்ஒரு ஜதை ஓலையும், இவள் சொற்பளவில் வறுமையின் கொடிய வாயிலிருந்து விலகி யிருக்கிறாள் என்பதை தெரிவித்தன. ஒரு வெள்ளை ரவிக்கையும், சிவந்த சாதாக்கரையுள்ள ஒரு மஞ்சள் சேலையும், கறுப்பாயின் ரூபத்தைச்சற்றே துலக்கிக் காட்டின. இன்னும் கன்னிகா விரதத்தைக் கைவிடவில்லை யென்று இவளின் பசுமையும் குளிர்மையும் நிறைந்த முகவதன பிம்பமும், குவிந்து நிமிர்ந்த ஸ்தனங்களும் குறிப்பிட்டன.

நீலாக்ஷியின் வேலைக்காரி தண்ணீர் முதலியவை கொடுக்க, கறுப்பாயியும் அவளுடன் வந்ததுணைவரும் கைகால் சுத்திசெய்து காப்பி யருந்தினார்கள். அதன்பின் நீலாக்ஷியுடன் சம்பாஷணை செய்யும் பொழுது கறுப்பாயி பின் வருமாறு சொல்லிக் கொண்டிருந்தாள்:—

நீங்கள் அன்புடன் கொடுத்த 50 வெள்ளியை நான் கையெடுத்த மதுரை மீனாக்ஷியே கொடுத்தாள் என்று பலமுறைகளிலும் எண்ணி துதி செய்யக்கூடியதாய், அந்த தொகை எனக்கு உதவியது. அம்மா உங்கள் மனம்போல் உங்களுக்கு குறையாத செல்வம் பெருகட்டும் என்றேபார்த்திருக்கிறேன். நீங்கள் கொடுத்த வெள்ளியைக் கொண்டு கிள்ளானில் போயிறங்கினேன். என்னுடன் கூடவந்த இந்த தாதா என் தகப்பனுருடன் அதிக சிநேகமாயிருந்தார் என்று எனக்குத்தெரியும். நான்மிகவும் சிறு பிராயமாயிருக்கிறபொழுது, இவர் எங்களுடைய வீட்டுக்கு வந்திருக்கிறார். அவர் இவ்வூருக்கு வந்து சுமார் 11வருஷமென்று தெரிவித்தார். இப்பொழுது இரண்டு பால்மாடு வைத்திருக்கிறார். ஒருசிறு நிலமும் கிள்ளானில் வாங்கி அதிலொரு வீடுகட்டி வாசம் செய்துகொண்டிருக்கிறார். அவருக்கு ஒரே ஒரு ஆண் குழந்தையுண்டு. மகனை சிங்கப்பூரில் டாக்டர் வேலைக்குப் படிக்கும்படி விட்டிருக்கிறார். மாசம் மாசம் 25-வெள்ளி மகனுக்குச் சிலவுக்கு அனுப்பிவருகிறார். அவரின் சம்சாரமும் கிள்ளானில்தானிருக்கிறாங்க.

நான் கிள்ளான் ரெயிலால் இறங்கி 3-ம் கட்டை தோட்டத்துக்கு கால்நடையாய் செல்லும்போது, தற்செயலாய் என்னைப் பார்த்துவிட்டார். உடனே என்னை நோக்கி "நீ எங்கே யிருந்து வருகிறாய்? உன்னை நான் பார்த்த ஞாபகமிருக்கே" என்று என்னைக் குறிப்பாய்ப் பார்த்துக் கேட்டார். நான் பட்ட வறுமையால் என் ரூபம் மாறினதுமல்லாமல் எனக்குஞாபகமும் குறைந்தது. எனக்கும் அவரை யார் என்று தெரியாமல் இருந்தது. "உங்களை எனக்கும் பார்த்த ஞாபகமிருக்கு" என்றேன்.

அவர் என் சத்தத்தைக் கேட்டமாத்திரத்தில் "அம்மா மங்கையர்க்கரசி நாச்சியார்! நீயா இக்கோலமாக வந்தாய்! உனக்கு இக்கோலமும் வந்ததா! ரத்தினக்கம்பளங்களின்மேல் நடந்த பாதமும் இந்த ரோட்டிலா நடக்கும். 'குதிரைவண்டிகளை' விட்டு இறங்காத குழந்தை இந்தக் கேவலத்திலும் வர நேர்ந்ததா! என் செல்வம்!— உனக்கு இந்த விதியேன் வந்ததடி? என் குழந்தாய்" என்று என்னைக் கட்டிக்கொண்டு உண்மையில் வீரிட்டழுதார். நானும் அழுதேன். அதன்பின் "உன் அம்மாள் எங்கே? உன் அப்பா எங்கே? நீயேன் அம்மா இங்கே வந்தாய்? வீட்டுக்கு வா. இதில் நின்றுகொண்டிருக்கவேண்டாம். வீட்டுக்கு வா அம்மா"வென்று அழைத்துப்போய் தன்பெண்ஜாதியின்முன் விட்டு, ஆறுத்துயரம் கொண்டாடினார். அந்த அம்மாளும் அவர் சொன்ன கதையைக் கேட்டு, என்னைப்பார்த்துப்பார்த்து அழுதாங்கள். காப்பிசாப்பிடும்படி ஆயத்தஞ்செய்தாங்கள். அதன்பின் எங்களுக்கு நேர்ந்த கஷ்டங்கள் யாவுஞ் சொன்னேன்; நாங்கள் பட்டபாடெல்லாம் தெரிவித்தேன்; ஈற்றில், ரப்பர் தோட்டத்தில் என் தகப்பனாரும் தாயாரும் இறந்த விருத்தாந்தத்தையும் சொன்னேன். தோட்டத்து மானேஜரால் அங்கிருந்து புறப்பட்டதையும் சொல்லி முடித்தேன். என்தகப்பனார் இறந்துவிட்டார் என்று கேள்வியுற்று இருவரும் அதிக விசனப்பட்டார்கள். அன்றுதொட்டு என்னை தங்களுடன் வைத்துக்கொண்டு தங்கள் குழந்தைபோல் காப்பாற்றி வருகிறார்கள். நான் வைத்திருந்த ஐம்பது வெள்ளிக்கும் ஒரு பால்மாடு வாங்கி விட்டு, அதன் பால்விற்று, இப்பொழுது இன்னுமொரு மாடு வாங்கி விட்டிருக்கிறார்கள். இரண்டு மாட்டுப்பாலும் தங்களுடைய மாட்டின்பாலும் ஆஸ்பத்திரிக்கு கண்டிராக்டாக கொடுத்து வருகிறார்கள். போனமாசத்தில் பால்விற்று வந்தபணம் 270வெள்ளி. அந்தத்தொகைக்கு அப்படியே இந்தநகை இவ்வளவும் செய்துகொண்டு வந்து தாத்தா கொடுத்தாங்க. அவர்களுக்கு ஊரிலும் கொஞ்சம் பொருள் உண்டு. என்னையொருநாளும் பிரிய விடமாட்டார்கள் போலிருக்கு. பெண்குழந்தையுமில்லை. ஆகையால் நானே அவர்களுக்கு மருமகளாவேன் போலிருக்கு—

நீ—எனக்கு பூரண திருப்தி. உன்னுடைய கூர்மையான விவேகத்துக்கும், பரிசுத்தமான ஹிருதயத்துக்கும், உன்னை கடவுள் நல்ல நிலையத்தில்வைப்பார். இதுகேட்டதே எனக்கு சந்தோஷம்.

கறு—தாத்தாமாடுகளை மேய்க்கவும் பால்எடுக்கவும் ஒரு ஆள் தேவையென்று, புடுவில் ஆட்களை பிடிக்கலாம் என்று கேள்விப்பட்டிருக்கிறாங்க. அங்கே யொருக்கால் போகவேணுமென்று எனக்குச் சொல்லி யிருந்தாங்க. ஆகையால்,—

நீ—புடுவுக்குப்போய் பார்த்து வருவதில் போகட்டும். நானும் கூடுமானால் ஒரு ஆளைப் பிடித்துத்தருவேன்.

கறு—தாத்தா போய் பார்த்துவரட்டும். கிடையாவிட்டால் ஒரு ஆளை அமர்த்தி தாருங்க.—

நீ—சரி: அவரை யனுப்பிவிட்டுவா. அவரை மத்தியானம் சாப்பாட்டுக்கு வரும்படி சொல்லி யனுப்பு.—

கறு—ஆகட்டும்.

அன்று சுமார் 2 மணியளவில் உறுமாண்டி அரங்கசாமி வீட்டுக்கு வந்தான். அப்படி அடிக்கடி அவன் வருவது சகஜம். அவன் வருகிற வேளையில் அரங்கசாமித் தேவரின் "மனையாளோடு" பேசுவதும் வழக்கம். அவளுடைய இரகசியங்களையும் அது வாயிலாய் தெரிந்து கொண்டான். அவளுடைய அடிக்கடி துரையப்பாவின் வரும் படிகளையும், நீலாக்ஷியின் செல்வாக்கையும் விசாரிப்பது அபூர்வமல்ல. நீலாக்ஷி என்ன என்ன ஆபரணங்கள் போட்டிருக்கிறாள். எத்தனை பட்டுச்சேலை வைத்திருக்கிறாள். என்னென்ன வீட்டுச் சாமான்கள் வைத்திருக்கிறாள் என்று விசாரிப்பதுவே பிரதானமான பேச்சாயிருக்கும். உன்னுடைய ஐயா இங்கே யொருநாளும் வரமாட்டாரா? எங்களோடு கோபமா? நான் காணவேணும் என்று சொல்லி விடுகிறாயா? என்று பல முறைகளிலும் சொல்லி அனுப்பியிருப்பாள்.

குறித்ததினத்தில் உறுமாண்டி வந்தவுடன் அரங்கசாமி அவனை தன் மாட்டுக்கொட்டிலுக்குள் அழைத்துப்போய் பின்வருமாறு சொல்லிக்கொண்டிருந்தான்:—

"உறுமாண்டி நீ நெடுக சமையல் வேலையிலிருப்பதிலும் பார்க்க, ஒரு நற்கதியிலிருக்க எப்போவாவது வழிபார்த்தாயா?

உறு—நான் என்னத்தைப் பார்க்கப்போகிறேன்? எனக்கென்ன தெரியும்?

அர—நான் உன்னை சமையல் வேலையிலிருந்து விலக்கிவிட்டு ஒரு கல்யாணமும் செய்து வைத்து (தன் பால் பசுக்களைச் சுட்டி) இவைபோல் இரண்டுபால்மாடு வாங்கிக்கொடுத்து, உன்னையொரு

நல்ல நிலபரத்திலிருக்க எண்ணியிருக்கிறேன். இப்பொழுது நீயிருக்கிற வீட்டிலுள்ளவர்கள் உன்னை எப்பொழுதாவது அடித்ததுண்டா?

உறு—ஒரு நாள் ஐயா அடித்தாங்க.

அர—நீ நல்ல குலத்தில் பிறந்து, இப்படி அடிவாங்கிக்கொண்டும், உதைவாங்கிக்கொண்டும் இருக்கிறது, எனக்கு விருப்பமில்லை. ஆகையால் நான் சொன்ன கொந்தறுத்து வேலையை உனக்குத்தரமுன், நீ கல்யாணம் முடித்துக்கொள்ள விருப்பந்தான் என்று, எனக்கு சத்தியஞ்செய்து கொடுக்கவேணும்.

உறு—(புன்னகை தோன்ற) என் முனியாண்டி மேலாணையாய் நீங்கள் சொன்னால் கல்யாணஞ்செய்வேன்.

அர—இன்றைக்கு நான் கொடுக்கப்போகிற பா—உன்னுடைய நீலாக்ஷியம்மாள் உன்னை ஒருநாளும் அடித்திருக்கவில்லையா?

உறு—அடித்திருக்கவில்லை; வைதிருக்கிறங்க.

அர—உனக்கு கல்யாணம் செய்துவைத்தால் நீ திரும்ப அவர்களிடம் போகவேண்டியதில்லை. பசுமாடு இரண்டையும் வைத்து ஜீவியஞ்செய்யலாம். ஆகையால் நான் உன்னிடம் இன்றைக்கு ஒரு மடி சஞ்சி (பாக்) தருவேன். அதற்குள் ஒரு—துரையப்பா உனக்கு சம்பளம் எவ்வளவு கொடுக்கிறார்?

உறு—10 வெள்ளி.

அர—சரி நான் உனக்கு 100 வெள்ளி கொடுத்து, அவர் வீட்டில் ஒரு பா——உனக்கு கல்யாணஞ்செய்து வைக்க நான் பார்த்து இருக்கிற குட்டி நல்ல செவத்தக்குட்டி.

உறு—(சிரிப்புடன்) எங்கே யிருக்கிறது?

அர—அழைத்துப்போய் காட்டுவேன். நான் கொடுக்கப்போகிற—ஆதாவது சொல்லப்போகிற வேலை—

உறு—நீங்கள் உறுமாண்டியிடம் என்ன சொன்னாலும், இவன் செய்வான்: புத்துக்குள்ளிருக்கும் பாம்பும் உறுமாண்டி யென்றால் வெளியே வராது; தெரியுமா? எப்படியான வேலை யென்றாலும் செய்து முடிப்பேன். 100 வெள்ளி—

அர—அவ்வளவு தைரிய முன்னிடமிருக்கா?

உ—(ஒரு மாட்டைச்சுட்டி) இதைப்போல் எத்தனை வெருளி மாடுகளை நான் தனியே போய் பிடித்திருக்கிறேன். எத்தனை வெறிகொண்ட மாடுகளானாலும் சரி; புத்துக்குள்ளிருக்கிற பாம்பானாலும் சரி; உடனே பிடிக்கச்சொன்னால் தடையில்லாமல் உறுமாண்டி பிடிப்பான்.

அர—அப்படியா! உன்னுடைய வீரத்தை நான் பார்க்கட்டும்: நான் ஒரு பாக்கில் ஒரு சாமான் தருகிறேன்; அதை நான் சொல்லுகிற இடத்தில் விட்டுவிடுகிறாயா?

உ—நீங்க கொடுக்கவேண்டியதுதான். இதோ கொண்டுபோய் விட்டுவருகிறேன்.

அர—சரி: நான் உன் கெட்டித்தனத்தை யறியட்டும்; நான் தருகிறதை இன்று இராவுக்கு கொண்டுபோய் துரையப்பா வீட்டில் விடுவாயா?

உ—என்ன சாமான் எண்ணு சொல்லுங்க?

அர—ஒருவருக்கும் தெரியக்கூடாது. சொன்னால் உனக்குத் தான் நஷ்டம். நான் சொன்ன சாமான் ஒரு பாம்பு.

உறு—அவர்களை கடித்துவிடுமே!

அர—அவர்களை விதியில்லாமல் கடிக்குமா? விதி வராமல் கடித்தாலும் மரணம் வருமா?

உ—அப்படியானால் கொண்டுபோய் விட்டுடுவேன்.

அர—உன்னுடைய மனத் தைரியம் பார்க்கவேண்டியே சொன்னேன். துரையப்பாவை பயமுறுத்தும்படி பாம்பை விடுகிறதேயன்றி பாம்பைவிட்டு கொத்துவிக்கிறதாகல்ல. விளங்கினுயா? ஆனாலும் ஒருவரும் அறியக்கூடாது.

உ—கொண்டுபோய் விடுகிறேன்.

அர—இன்று ராத்திரி 9 மணி யளவில் ஒருவருக்கும் தெரியாமல் கொண்டு போகவேண்டும்: அதுவும் கட்டிலில் விடவேண்டும்.

உறு—ஆகட்டும். அம்மாள் விறாந்தையில்தானிருப்பாங்க; நான் இரகசியமாய்ப்போய் குளிக்கிற அறைக்குள்ளால் சென்று, கட்டிலில் விட்டு வருவேன்.

அர—அப்படி செய்கிற கெட்டித்தன முனக்கு இருந்தால், நான் சொன்ன வேலையில் உன்னை வைப்பேன்: உனக்கு வெள்ளி 100 சந்தோஷமாய்க் கொடுப்பேன்; கல்யாணமுஞ் செய்துவைப்பேன்: இதோ பத்து வெள்ளி அச்சவாரம்; எடுத்துக்கொள்.

உ—கொடுங்க (என்று வாங்கி தன் இடுப்பில் சொருகிக்கொண்டான்)

இது நிகழ்ந்த அன்று ராத்திரியே சுமார் 9 மணி யளவில், நீலாட்சியும் கறுப்பாயியும் வெளி விறாந்தையிலிருந்து சம்பாஷணை செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது குசினியின் பிற்பக்கத்தால் ஒரு ஆள் பதுங்கி பதுங்கி வந்து ஸ்நான அறை வழியாய்ச் சென்றது. அறைக்குள் யாராகுதல் இருக்கிறார்களா என்று எட்டிப்

பார்த்தது. ஒருவருமில்லை யென்று கண்டு சத்தமிடாமல் மெதுவாய் அறைக்குட் சென்று, கையிலிருந்த மடிசஞ்சிப் பாக்கை கட்டிலில் வைத்து, மடிசஞ்சியின் கைபிடியில் ஒரு மெல்லிய கயிறு கட்டி, அதனையின் ஆணைப் பூட்டை மெதுவாய் திறந்து, கட்டிலிலிருந்த கம்பளியால் அதன் வாயை மூடினது. இவ்வளவு செய்ததும், மெதுவாய்தான் கட்டின மெல்லியகயிற்றின் தலைப்பைப்பிடித்து, வந்தவழியாய் மூன்று நாலு அடி பின்வாங்கி, ஒரு மெல்லிய இழுவையால் பாக்கை திறந்தது. அப்பொழுது அதற்குள்ளிருந்த நாகப்பாம்பு மெதுவாய் நகன்று கம்பளிக்குள் சுருணையிட்டுக்கொண்டு சொகுசாய் படுத்துக்கொண்டது. பாம்பு கொண்டுவந்த உருமாண்டி மெதுவாய் முன்போல நகர்ந்து சோட்டுக்குச்சென்று, தன்னைக் காத்துக்கொண்டு நிற்பவரை நோக்கி இரகசியமாய் "பாம்பைக் கட்டிலில்விட்டேன், ஒருவரும் காணவில்லை" என்றான்.

அர—கட்டிலில்தான் விட்டாயா?

உ—கட்டிலில்தான் விட்டேன்.

அர—பாம்பு என்ன செய்கிறது என்று பார்த்தாயா?

உ—கம்பளியால் போத்திவிட்டுதான் பாக்கை இழுத்தேன் கம்பளிக்குள்ளேதானிருக்கு: எனக்கு இப்பொழுது வெள்ளி கொடுக்கவேணும்.

அர—(யோசனையுடன்) ஆம் இன்னும் 2 3-மணி நேரத்திற்குள் யாவும் தெரியும். உருமாண்டியின் பொய் மெய் பொழுது விடியுமுன் அறிந்துவிடுவேன். (என்று தனக்குள் சொல்லிக்கொண்டு உருமாண்டியுடன் திரும்பினான். உருமாண்டியைப்பார்த்து) வெள்ளி தருவேன் வா (என்று இருவரும் நடந்தார்கள்.)

அறைக்குள் இடைக்கிடை நீலாட்சி வருகிறதையும், திரும்புவதையும் பார்த்துக்கொண்டு, தலையணையில் உல்லாசமாய் அணைந்துகொண்டு, தன் ஒரு துளிவிஷத்தால் ஜீவஜெந்துக்களின் உயிரை எமலோகத்துக்கு அனுப்பும் கொடிய நாகமானது பயங்கரமான சுருணையிட்டிருந்தது. ஐயோ! பாவம்! பாவம்! நீலாக்ஷி! இன்றோடு உன் ஜீவியமும் முடிவுறுமா? உன் வாழ்நாள் முடிய நாளாயிற்றா? இவ்வளவு காலமும் சுசந்தத்துடன் நீ இன்பத்தை யனுபவித்த மஞ்சம் இன்று உன் மரண படுக்கையாகுமா? உனக்கு வரப்போகிற ஆபத்தை எண்ணி நாம் துன்புறுகின்றோம், பரிதவிக்கின்றோம். எங்கள் ஹிருதயம் உனக்காக கசிகின்றது

முதலாம்பாகம் முற்றிற்று.

